# தோல்வி அவளை எதிர்நோக்கி நின்றது!

அவள் என்னவோ நன்றாகப் படித்துக் கொண்டுதான் வந்தாள். ஆனால் பரீட்சைக்கு சில வாரங்களே இருந்தபோது அவளுக்குப் படிப்பில் அக்கறையே இல்லாமல் போய்விட்டது...

அவளை டாக்டரிடம் அழைத்துச் சென்றோம். படிப்பில் அதிக நேரம் செலவழித்ததால் ஏற்பட்ட ஓய்ச்சல் மட்டும் அல்ல அது என்றும், செலவழியும் சக்தியை ஈடு செய்யப் போதுமான போஷாக்குக் கிடைக்காமையும் காரணம் என்று டாக்டர் சொன்னார்.




டாக்டர் சிபாரிசு செய்தபடியே அவளுக்கு ஹார்லிக்ஸ் கொடுத்து வந்தோம். விரைவிலேயே மீண்டும் ஊன்றிப்படிக்க ஆரம்பித்ததோடு பரீட்சையிலும் முதன்மையாகத் தேறினாள். எல்லாம் ஹார்லிக்ஸ் செய்த நன்மைதான்!



வளரும் குழந்தைகளின் சக்தி மிக விரைவில் செலவழிந்து விடுகிறது. இந்த சக்தி முழுவதும் ஈடு செய்யப்படாவிடில் அவர்கள் களைப்புற்று எதிலும் கவனம் செலுத்த முடியாமல் ஆகி விடுகிறார்கள். ஹார்லிக்ஸ் குழந்தைகளுக்குத் தேவையான அதிக போஷாக்கை அளித்து அதிக சக்தியை யூட்டுகிறது என்பதை டாக்டர்கள் அறிவார்கள். ஆகச் சத்து மிகுந்த பால், கோதுமை மாவு, மால்ட் பார்லி, இவற்றின் போஷாக்குச் சத்துக்களைக் கொண்ட ஹார்லிக்ஸ் சோர்வை போக்க அதி ஆச்சரியமான முறையில் உதவுகிறது.

## ஹார்லிக்ஸ்

அதிக சக்தி யளிக்கிறது!




JWT-HL-3497A



# கல்கி

## பொருளடக்கம்

**விசுவாவசு பங்குனி 21 • ஏப்ரல் 3**


| | |
|---|---|
| விவசாயப் பண்ணையா?.... | 3 |
| என்ன சேதி? | 4 |
| ராஜாஜியின் கருத்துக்கள் | 5 |
| செய்திப் படங்கள் | 9 |
| ரேஷன் தொல்லை | 10 |
| ஆக்கம் தரும் வீரம் | 14 |
| இலக்கிய நோக்கு 1965 | 18 |
| இனிப்பு கசந்தது | 22 |
| பல்சுவைப் பக்கம் | 24 |
| வீர சாவர்க்கர் | 26 |
| யாத்திரை | 30 |
| ஊர் வம்பு | 41 |
| சேவைக்கு ஒரு சகோதரி | 45 |
| ஜீவ கீதம் | 50 |
| ஹோட்டல் நாடகம் | 56 |
| மூத்த பிள்ளை | 58 |
| வெற்றித் திருநகர் | 68 |
| பற்று | 74 |
| வட்ட மேஜை | 80 |






உலகம் ஒரு கடைத் தெரு. இந்தக் கடைத் தெருவில் மோசக்காரர்கள் விற்கும் இலந்தம் பழங்கள் திராட்சையின் விலைக்கும் போகும். ஆனால் நாணயமுள்ளவர்களின் திராட்சையோ களாப் பழத்தின் விலைக்குக் கூடப் போவதில்லை.

— வி. ஸ. காண்டேகர்

பாதுகாப்புச் சட்டம்

அசைக்கமுடியாத மெஜாரிட்டி பலம்

காங்கிரசுக்கு வோட்டுப் போடவில்லை யெனில் ராணுவ ஆட்சி ஏற்படும்

வரிகள்

விலை ஏற்றம்

பொதுஜனம்

சீக்கிரத்தில் இன்னொரு குழந்தை பிறக்கப் போகிறது நம் வீட்டில்.

முதல் திட்டம்

இரண்டாவது திட்டம்

மூன்றாவது திட்டம்

PK



மலர் 25 ● இதழ் 36



# விவசாயப் பண்ணையா? வோட்டுப் பண்ணையா?

தமிழக காங்கிரஸ் செயற் குழு வெகு நாட்களுக்குப் பிறகு விவசாயத் துறையின் பக்கம் கவனம் செலுத்தத் தொடங்கியிருக்கிறது. எப்பொழுது அந்தப் பக்கம் தனது கவனத்தைத் திருப்பத் தொடங்கியிருக்கிறதோ, அப்பொழுதே சாங்கிரஸுக்குத் தேர்தல் ஜுரம் காணத் தொடங்கி விட்டது என்பதை ஊகித்துக் கொள்ளலாம். பெருவாரியான வோட்டர்கள் உள்ள துறை விவசாயத் துறை. இந்தப் பதினைந்து ஆண்டுகளாக விவசாயத் துறையில் காங்கிரஸ் பிரத்தியட்ச நிலையுணராமல், சோஷலிஸக் கொள்கையின் மோகத்தில் செய்த சட்டங்கள், விவசாயத்தில் உற்பத்தியைக் கெடுத்து அவர்கள் வாழ்க்கையையும் பாழ்படுத்தி விட்டன. போதாக் குறைக்கு நாட்டில் உணவு மண்டலக் கட்டுப்பாடு, கொள்முதல், லெவி முறை என்ற பேய் பிசாசுக் கணங்களை வேறு விவசாய மக்கள் மீது ஏவி விட்டிருக்கிறார்கள். எங்கும் அதிருப்தி நிலவுகிறது. கேரளத்திலும் வங்கத்திலும் அதிருப்தி பயங்கர விசுவரூபம் எடுத்தது. தமிழக காங்கிரஸ், சற்று எச்சரிக்கை யடைந்து சில யோசனைகள் கூறுகின்றது.

தாங்கள் கொண்ட லட்சியத்துக்காக மகத்தான தியாகங்கள் புரிந்த தலைவர்கள் வாழ்ந்து வளர்த்த காங்கிரஸ், இப்பொழுது எதைச் செய்தால் வோட்டுப் பெறலாம் எதைச் சொன்னால் பதவியைப் பெறலாம் என்பதையே அனவரத சிந்தனை கொண்ட சிறுமதியாளர்களின் கட்சியாகி விட்டது. சென்ற தேர்தலின் போது பெரிய பண்ணைகளாக இருந்தால் உச்ச வரம்பு கொண்டுவந்து சிறிய பண்ணைகளாக்க வேண்டும் என்றும், கட்டுப்படியாகாத சிறிய பண்ணைகளாக இருந்தால் கூட்டுப் பண்ணையாக்க வேண்டும் என்றும் கூறி வந்தது. ரயத்துவாரி நிலத்தைக்கூட "எஸ்டேட்" என்ற அடிப்படையில் சர்க்கார் ஆர்ஜிதம் செய்யலாம் என்று அரசியல் நிர்ணயச் சட்டத்துக்குப் புதிய திருத்தம் கொண்டு வந்து நிறைவேற்றியது.

ஆனால் இப்போது தேர்தல் நெருங்கி வரும் வேளையில் ரயத்துவாரி நிலங்களின்மீதுள்ள நிலத் தீர்வையைச் சீர் இருத்த வேண்டும் என்று கூறுகிறது.

சிறிய நில உடைமைக்காரர்கள் சொந்தச் சாகுபடிக்கு நிலத்தைப் பெற விரும்பினால், குத்தகைக்காரர்களிடமிருந்து பெற்றுக் கொள்ளச் சட்டம் தளர்த்தப்பட வேண்டும் என்கிறது.

நிலத்தில் வேலை செய்யும் நிலமில்லாத கூலிக்காரனுக்கு ஆணாக இருந்தால் இரண்டரைப் படி (பட்டணம் படி) நெல் அளக்க வேண்டும் என்றும் பெண்ணாக இருந்தால் இரண்டு படி அளக்க வேண்டும் என்றும் யோசனை கூறியிருக்கிறது.

இப்படிச் சிறு நிலச்சுவான்தார்கள், விவசாயக் கூலிகள் ஆகிய இவர்களிடமெல்லாம் தமிழக காங்கிரஸ் கட்சிக்கு உருக்கமும் அநுதாபமும் பொங்கிப் பெருகி ஓடுகிறது. இவையெல்லாம் நாட்டு நலனில் அக்கறை கொண்டோ, உணவு உற்பத்தி பெருகுமென்ற கருத்தோடோ சொல்லப்பட்ட யோசனைகள் அல்ல. இவற்றிலெல்லாம் அக்கறை இருந்தால் காங்கிரஸ், அன்றே விவசாயத் துறையில் சர்க்கார் செய்து வரும் சட்டங்கள் ஹானியைத் தான் உண்டாக்கும் என்று சுதந்திரக் கட்சி செய்த எச்சரிக்கையைக் கேட்டிருக்கும்.

தேர்தலையும் வோட்டுக்களையும் மனத்தில் கொண்டு அரை குறையாக ஏதோ செய்யும்படி யோசனை கூறுகிறது தமிழக காங்கிரஸ். நாட்டு நலனில் அக்கறையின்றிச் செய்யும் நிலச் சீர்திருத்தங்கள் வோட்டுக்களை விளைவிக்கலாம்; உணவு தான்யத்தை விளைவிக்காது: சுபிட்சத்தை ஏற்படுத்தாது.

# என்ன சேதி?

- தவறு எங்கே இருக்கிறது?
- யாருக்கு ஞாபகார்த்தம்?
- ராஜ்ய சபையில்...

பஞ்சாப் பிரதேச கல்வி மந்திரியவர்கள், பள்ளி மாணவிகளுக்கு ஒரு விநோத ஆசையைக் காட்டியிருக்கிறார். 'உதட்டுச் சாயம், முகப் பூச்சு, உடலை எடுப்பாகக் காட்டும் உடை ஆகியவற்றைத் துறந்து, எளிய பாரதப் பண்பை எடுத்துக் காட்டும் அடக்க ஒடுக்கமான உடையில் வரும் பள்ளி மாணவிகளுக்கு ஐந்து மார்க் அளிக்கப்படும் என்று அறிவித்திருக்கிறார்.

பள்ளி மாணவிகளிடையேயும், கல்லூரி மாணவிகளிடையேயும் சமீப காலத்தில் ஏற்பட்டு வரும் விரும்பத் தகாத மாற்றங்களும் பழக்க வழக்கங்களும் நாட்டில் பல பெரியவர்களுக்குப் பெருத்த கவலையை அளித்துள்ளன. அவற்றுக்கு முக்கிய காரணம் சினிமாக்கள் என்று ஆட்சிப் பொறுப்பிலுள்ளவர்கள் சொல்லித் தப்பித்துக் கொண்டு விடலாம். அதில் ஓரளவு உண்மை இருக்கலாம். அதைவிட முக்கிய காரணம் இன்று நம்முடைய அரசாங்கம் தெய்வ பக்தியற்ற அரசாங்கமாக இருப்பதுதான் என்று நாட்டிலுள்ள பல பெரியோர்களும் கருதுகிறார்கள். எல்லா மதங்களையும் மதிக்கும் நோக்கு பெற்ற மதச் சார்பற்ற அரசாங்கமாக இந்திய ஆட்சி இயங்க வேண்டும் என்று அரசியல் நிர்ணயச் சட்டம் கூறுகிறது. ஆனால் இன்றைய ஆட்சியாளர்களோ ''கடவுள் ஒருவன் உண்டு என்று தான் அறிதல் வேண்டும்'' என்ற பாரதியாரின் வாக்கை நினைக்கவே மறுக்கிறார்கள். கடவுளை மறந்ததோடு கடவுளைத் தூற்றும் நிரீசுவரவாதிகளோடு கூடத் தொடர்பு கொண்டுள்ளது ஆட்சி. இத்தகைய ஆட்சியாளரிடம் நாட்டு மக்களின் ஒழுக்கத்தைக் காப்பாற்றும் சக்தி என்ன இருக்க முடியும்?

நாட்டு முன்னேற்றத்துக்காக வகுக்கும் திட்டங்களும் வெறும் லோகாயதத்தை வற்புறுத்தும் திட்டங்களாகவே இருந்து வருகின்றன. ஆத்மீகத்தால் உலக மக்களின் கண்களில் நம் நாட்டை உயர்த்திக் காட்டிய ராமகிருஷ்ணர், விவேகானந்தர், காந்தி மகான் தோன்றிய நாட்டில் சென்ற பதினெட்டு ஆண்டுகளில், திட்டம், பணவீக்கம், அமித வரிகள் இவை காரணமாகப் பணத்தைத் தகாத வழியில்தான் சேர்க்க முடியும் என்ற மனோபாவத்தை வளர்த்து விட்டார்கள். இதன் விளைவுதான் மாணவ சமுதாயத்தில் காணப்படும் ஒழுக்கச் சரிவு. இதை மாணவிகளை 'உதட்டுச் சாயம் தடவாதீர்கள், முகப் பவுடரைப் பூசாதீர்கள்' என்பதால் தடுத்து நிறுத்திவிட முடியாது.

❀ ❀ ❀

உயிரோடு இருக்கும் மந்திரிகளின் ஞாபகார்த்தமாக ஸ்டேடியம் கட்டிக் கொள்ளச் சர்க்கார் பணம் செலவழிக்கப்படுகிறதே தவிர உருப்படியான எந்தத் தொழில் வளர்ச்சிக்கும் செலவழிக்கப்படுவதில்லை என்று மிக காரமாக ஆந்திர சர்க்காரைக் குற்றம் சாட்டினார் மத்திய தொழில் நுட்பத் துறை மந்திரி திரு கே. ரகுராமய்யா. சமீபத்தில் ஹைதராபாத்தில் வர்த்தக சங்கத்தினர் அளித்த வரவேற்புக்குப் பதில் அளிக்கையில் மேற்கண்டவாறு குறிப்பிட்டார் அவர்.

இப்படி எதிர்க் கட்சியில் உள்ள சுதந்திரக் கட்சி அங்கத்தினர்கள் சொல்லியிருந்தால் பொறாமை காரணமாகச் சொல்லுகிறார்கள், அபாண்டமாகப் பேசுகிறார்கள், வீண் பழி சுமத்துகிறார்கள் என்றெல்லாம் கூறுவார்கள். ஆந்திர நாட்டைச் சேர்ந்த ஒரு மத்திய சர்க்கார் மந்திரியே, தமது ராஜ்ய சர்க்காரின் ஊழலை எடுத்து இப்படிச் சொல்ல வேண்டுமென்றால், காங்கிரஸின் ஊழல், அநீதியான ஆட்சி எவ்வளவு மோசமான கட்டத்தை அடைந்து விட்டது என்பதை ஊகித்துக் கொள்ளலாம்.

ஆனால் இன்று காங்கிரஸ் அக்கிராசன பீடத்தில் அமர்ந்திருப்பவர் முதல் மந்திரியாகப் பதவியில் இருந்தபோதே அவருக்கு ஒரு சிலை நிர்மாணிக்கப்பட்டது. இதுவே தேசத்தில் உள்ள மற்ற மந்திரிகளுக்கு வழி காட்டியதாகாதா? அதைப் பின்பற்றாமல் அவர்கள் எப்படி இருக்க முடியும்?

❀ ❀ ❀

திரு எஸ். எஸ். மாரிசாமி அவர்கள் புது தில்லி ராஜ்ய சபையில், திரு காமராஜ் அவர்கள் ராணுவ ஆட்சி ஏற்படும் என்று சென்னையில் பேசியது பற்றியும், திரு ஈ. வெ. ரா அவர்கள் ருஷ்யா படையெடுத்தால் வரவேற்பேன் என்று பேசியது பற்றியும் பெரிய சர்ச்சையைக் கிளப்பிவிட்டார். தேச பக்தர்கள் மீதெல்லாம் ஏவ உபயோகப்படுத்தும் பாதுகாப்புச் சட்டம் திரு ஈ. வெ. ரா. அவர்கள் விஷயத்தில் பயனற்றுப் போயிருப்பதற்குக் காரணம், தமிழ்நாட்டுக் காங்கிரஸ் வோட்டு வேட்டையில் ஈ. வெ. ரா.வை நம்பி வாழ்வதுதான் என்பதையும் அம்பலப்படுத்தி நல்ல வன்மையானதோர் உரை நிகழ்த்தியிருக்கிறார். காங்கிரஸ் அக்கிராசனர், தமிழக காங்கிரஸ் மந்திரி சபை ஆகியவற்றின் உண்மையான சொரூபத்தை வடநாட்டுக் காங்கிரஸ்காரர்களும் ஆட்சியாளர்களும் இப்பொழுதுதான் புரிந்து கொண்டிருக்கிறார்கள். சபையின் அக்கிராசனர், திரு மாரிசாமி அவர்கள் மேற்கண்ட விஷயங்களைக் குறித்து மத்திய உள்துறை இலாக்காவுக்குத் தகவல்களை அனுப்பி வைக்கும்படி யோசனை கூறியிருக்கிறார்.

தமிழக சுதந்திரக் கட்சி செயலாளர் திரு மாரிசாமி அவர்களுக்கு ஜனநாயகப் பற்றுள்ள தேசபக்தர்கள் நன்றி செலுத்துவார்கள்.

★

நியூயார்க்கைச் சேர்ந்த ஜான்–டே கம்பெனியார் நேரு அஞ்சலி நூலொன்றை வெளியிட்டிருக்கிறார்கள். அந்நூலை விமரிசிக்கும் லூயி ஃபிஷர், 1930ல் ஜெர்மனியில் நேரு அவர்களுக்கும் ராஜாராவ் அவர்களுக்கும் இடையே நடைபெற்ற சம்பாஷணையை முக்கியமாகக் குறிப்பிடுகிறார். ராஜாராவ் அவர்கள் பிரான்ஸிலும் பிரிட்டனிலும் வசித்த ஓர் இந்திய நாவலாசிரியர். அவர் நேருஜியுடன் சம்பாஷிக்கும்போது, காரணம் கடந்த ஒரு சக்தியிடம் நம்பிக்கை வைத்து வாழ்க்கையின் புதிர்த் தன்மை பற்றிப் பேசியது நேரு அவர்களுக்கு எரிச்சலூட்டியதாம். 'எப்போதுமே நீங்கள் இப்படித்தான் பேசுவீர்களா?' என்று நேருஜி கேட்டார். 'ஏன், நீங்களும் ஏதோ ஒன்றிடம் நம்பிக்கை வைத்துத்தானே இருக்கிறீர்கள்?' என்று பதிலுக்கு வினவினார் ராஜாராவ். 'ஏதோ ஒரு தெய்வத்திடமோ சித்தாந்தத்திடமோ நம்பிக்கை வைத்துத்தானே இருக்கிறீர்கள்?' என்றார். நேருஜி கோபத்துடன், 'தெய்வமா? என்ன தெய்வம்? மூவாயிரம் வருஷங்களாக அதைத்தான் பற்றிக் கொண்டிருந்து விட்டோம். அது நம்மை எங்கு கொண்டு சேர்த்திருக்கிறது?–அடிமைத்தனத்திலும் வறுமையிலும் தான்' என்று வெடித்தார்.

எழுபதாண்டுகளுக்கு முன் நான் கல்லூரியில் படிக்கும்போது எங்களுக்கு ஆங்கிலம் போதித்த ஸ்காட்லாந்துப் பேராசிரியர், பாட புத்தகத்திலிருந்து சில பகுதிகளை எடுத்துத் தர்க்க ரீதியில் பரிசோதித்துப் பார்க்க வேண்டும் என்பார். ஸ்ரீ நேரு அவர்கள் ராஜாராவிடம் கூறியதை இவ்வாறே தர்க்க ரீதியில் பரிசோதிப்போம். (1) இந்தியர்கள் தெய்வத்தை நம்பினார்கள். அந்த நம்பிக்கையுடனே மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்தார்கள் (2) அவர்கள் பிறருக்கு அடிமைப்பட்டார்கள்; வறுமையில் வாழ்ந்தார்கள். இந்த இரண்டு தனி உண்மைகள் ஒன்றோடொன்று இணைந்தவையா? தெய்வத்தை நம்பி வாழ்ந்ததால் அந்த நம்பிக்கையே அடிமைத்தனத்திலும் வறுமையிலும் 'கொண்டு சேர்த்திருக்கிறது' என்று கூறமுடியுமா? அப்படிக் கூறுவதை நான் ஆட்சேபிக்கிறேன். மறைந்துபோன என் நண்பரிடம் எனக்குள்ள மரியாதையும் அன்பும் குன்றவில்லை. எனினும் அவர் கூறியது தர்க்கப்படி சரியல்ல என்று ஆட்சேபிக்கிறேன். கோபத்தில் உணர்ச்சி வசப்பட்டவர்கள் இப்படித் தவறுவது சகஜம். தெய்வ நம்பிக்கை ஒரு நாட்டை அந்நியராட்சியிலிருந்தும், வறுமையிலிருந்தும் விடுவித்துவிடவில்லை என்று வேண்டுமாயின் அவர் கூறியிருக்கலாமே ஒழிய, தெய்வ நம்பிக்கையைக் கைவிடுவதால் மக்கள் விடுதலை உணர்வு பெறுவார்கள் என்றோ தேசம் சுபிட்சம் பெறும் என்றோ நிரூபணமாகி விடவில்லை.

நாஸ்திகம் தழுவுவதால் ஒரு நாடு பிறர் ஆதிக்கத்திலிருந்தோ, வறுமையிலிருந்தோ விடுபட்டு விடாது. மாறாக, தருமங்கள் குன்றி விவகாரம் மேலும் மோசமாகக் கூடும். 'ருஷியா ஒரு சுதந்திர நாடு, சுபிட்சமான நாடு; ருஷிய ஆட்சியாளர்கள் நாஸ்திகர்கள்; எனவே நாஸ்திகம் விடுதலை வாழ்வுக்கும் சுபிட்சத்துக்கும் உதவுகிறது' என்று கூறலாம். ஆனால் இது தர்க்கமல்ல; குதர்க்கமே. இதே அடிப்படையில், 'அமெரிக்கர்கள் கிறிஸ்துவர்கள்; அவர்கள் விடுதலைப் போராட்டத்தில் வெற்றி பெற்று இன்று சுபிட்சமாக வாழ்கிறார்கள். எனவே, கிறிஸ்துவ சமயத்தைத் தழுவுவதால் விடுதலையும் சுபிட்சமும் பெற முடியும்' என்று வாதம் செய்யலாம்.

தனி முதலாளிகளின் தொழில் முறையையும், பொருளாதாரப் போட்டியையும் கண்டித்து மேல் நாட்டு ஆசிரியர்கள் எழுதியதையெல்லாம் படித்து மெய்சிலிர்த்தவர் ஸ்ரீ ஜவாஹர். காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டங்களில் அவர் இது பற்றிக் குறிப்பிடும்போது சர்தார் பட்டேல் அவர்களுக்கு அது வேடிக்கையாகவே இருந்து வந்தது. பிரிட்டிஷார் இந்திய சர்க்காரைக் காங்கிரஸ் கட்சியிடம் கொடுத்த பின், காந்திஜியின் விருப்பப்படி நேருஜி தலைமை தாங்கிய போதிலும் விபரீதப் பரிசோதனைகள் இடம் பெறாதவாறு பட்டேல் அவர்கள் கோட்டையைக் காத்து வந்தார். அவரது மறைவுக்குப் பின் அபிவிருத்தித் திட்டங்கள் என்ற பெயரில் சர்க்கார் செலவைப் பெருக்கி அந்நியக் கடன்கள் வாங்கும் சரிவுப் பாதையில் நாடு விழத் தொடங்கி விட்டது. பத்தாண்டுகளுக்கு முன்னால் சோஷலிஸம், மத்தியத் திட்டம் இரண்டையும் ஆதரித்து ஆளும் கட்சி எடுத்த முடிவினால் இந்திய தேசமே இந்த இலட்சியங்களில் நிர்ப்பந்தமாக ஈடுபடுத்தப் பட்டது. அதோடு 'மதச்சார்பற்ற சர்க்கார்' என்ற குழப்பமான பெயரை அரசாங்கம் சூட்டிக்கொண்டு ஆண்டவனைப் பகிஷ்கரித்து விட்டது.




சர்க்கார் எல்லா மதங்களுக்கும் பாரபட்சமின்றி நன்மை செய்ய வேண்டும் என்ற கருத்தில் பலர் 'மதச்சார்பின்மை'யை ஆதரித்தபோதிலும் நேரு அவர்களின் மனத்திலிருந்தது ருஷிய பாணியில் அமைந்த மத எதிர்ப்பேயாகும். இதைத்தான் லூயி ஃபிஷர் கூறும் சம்பவம் விளக்குகிறது. ஆண்டவனைப் பகிஷ்கரித்த கையோடு சர்க்காரே சர்வ வல்லமை பெறும் மத்திய திட்ட முறையும், கனரகத் தொழில்களும் இயங்கத் தொடங்கின. இதனால் ஜனநாயகத்துக்கும் பொருளாதாரத்துக்கும் ஏற்பட்டுள்ள விப

ரீதங்களையெல்லாம் இப்போது கண்கூடாகப் பார்க்கிறோம்.

★

பொருளாதார நிபுணரான யூகோஸ்லாவியத் தூதர் டாக்டர் உவானிக் சமீபத்தில் பம்பாயில் பத்திரிகை நிருபர்களிடம் பேசுகையில் மிக நல்ல புத்திமதி கூறியுள்ளார். பொருளாதார நடவடிக்கைகளில் சர்க்கார் நேரடியாகப் பிரவேசிப்பது நல்லதல்லவென்றும், சுதந்திர வியாபாரம் நடைபெற்றால்தான் உண்மையான சோஷலிஸ இலட்சியத்தை அடைய முடியும் என்றும் கூறினார். யூகோஸ்லாவியா சோஷலிஸப் பொருளாதாரத்தைப் பின்பற்றியபோதிலும் அங்கு தொழில்களும் விவசாயமும் சுதந்திரமாக நடப்பதை அவர் சுட்டிக் காட்டினார். மக்கள் எந்தப் பண்டங்களை எந்த அளவுக்கு விரும்புகிறார்கள் என்பதைச் சுதந்திர வியாபாரம் நடந்தாலே அறிய முடியும் என்று கூறிய அவர், ''ஒருவர் மற்றவரை ஏமாற்றாமல் பார்த்துக் கொள்வதும், வருமானங்கள் பெருகுவதுமே சோஷலிஸப் பொருளாதார இலட்சியங்கள். சுதந்திர வியாபாரப் போட்டியினால் நாட்டின் பொது நிலைமையை முன்னேற்றுவது சோஷலிஸத்துக்கு விரோதமல்ல'' என்றார். யூகோஸ்லாவியாவில் லைசென்ஸ் முறையை ரத்து செய்ய வேண்டும் என்று யோசிக்கப்படுவதாகவும் அவர் கூறினார்.

★

காங்கிரஸ் ஆட்சியின் தவறுகளைச் சர்க்கார் காரியாலயங்களின் நிருவாக அமைப்பின் மீது தள்ளிவிட எண்ணுவது பிரமை. சுதந்திரத்துக்கு முற்பட்ட நிருவாக அமைப்பைத் தொடருவதாலேயே தவறுகள் ஏற்படுவதாகவும், சோஷலிஸ நோக்கங்களுக்கு ஏற்ப அதை மாற்றி அமைக்க வேண்டுமென்றும் அடிக்கடி கூறப்படுகிறது. நிருவாகத்தில் தலையிடும் எசமானர்களாக வேண்டும் என்று அரசியல்வாதிகள் விரும்புவதுதான் இதற்குக் காரணம் போலும். இவ்வாறு செய்வது சீர்திருத்தமாகாது; மேலும் இழிநிலையையே அடைவோம். . நம் நாட்டு அரசியலில் எவ்வளவோ மாறுதல்கள் ஏற்பட்ட போதிலும் இந்த அளவுக்காவது நிருவாகம் கட்டுக்கோப்பாயிருப்பதற்குக் காரணம் ஆங்கிலேயர்களின் சிவில் சர்விஸில் பிறந்த மரபுகளும் பண்புகளும்தான் என்று நான் திடமாகக் கருதுகிறேன்.



## ஆமை வேக முன்னேற்றம்!

காங்கிரஸ் அக்கிராசனர் அவர்கள் அடிக்கடி நமது முன்னேற்றத்தை, அதுவும் காங்கிரஸ் ஆட்சியில் ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தை மிகப் பெருமையாகச் சொல்லிக் கொள்வார். எதிர்க் கட்சிகள் கண்ணிருந்தும் காண முடியாத குபோதிகள் என்றளவுக்குச் சொல்வார். ஆனால் தில்லியில் கூடிய ''ஈகபே'' என்னும் ஐ. நா. சபையைச் சேர்ந்த ஆசிய நாடுகளின் பொருளாதார வளர்ச்சியை மதிப்பிட்டுக் கூறும் கழகம், இந்தியா இப்பொழுது முன்னேறியுள்ள வேகத்தில் முன்னேறுமானால் இன்று ஜப்பான் அடைந்துள்ள முன்னேற்றத்தை எட்டிப் பிடிக்க இன்னும் 137 ஆண்டுகள் பிடிக்கும்; நியூஜிலாந்து அடைந்துள்ள முன்னேற்றத்தை அடைய 205 ஆண்டுகள் பிடிக்கும் என்று கணக்கிட்டுச் சொல்லியிருக்கிறது.

இக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் யாரும் சுதந்திரக் கட்சியைச் சேர்ந்த பொருளாதார நிபுணர்கள் அல்ல!

விருப்பு வெறுப்பின்றிக் கிழக்காசிய நாடுகளின் பொருளாதார வளர்ச்சியை மதிப்பிடும் நிபுணர்கள்தான் இவ்விதம் கூறியிருக்கிறார்கள்.

இந்த மகாநாட்டுக்கு வந்த இந்தியப் பிரதிநிதிகள், இப்படிக் கூறுவது மிகவும் சோர்வு உண்டாக்குகிறது என்றும், ஒப்பிடுவது சரியல்லவென்றும் குறைப்பட்டுக்கொண்டார்கள். அதன் விளைவாக 'ஈகபே'யின் பிரதம காரியதரிசியவர்கள் அந்தப் பகுதிகளை அகற்றி விட்டு அறிக்கையைப் பிரசுரிப்பதாகக் கூறியிருக்கிறார்.

பூனை பட்டப் பகலில் கண்ணை மூடிக் கொண்டுவிட்டு, இருள் வந்துவிட்டது என்று நினைத்துக் கொள்ளுமாம். அம்மாதிரி இப் பகுதிகளை அகற்றிவிடுவதால் அவர்கள் கண்ட உண்மை மாறிவிடப் போவதில்லை.

இவ்வளவு மந்த கதியில் முன்னேறுவதற்குக் காரணம் காங்கிரஸ் கடைப்பிடித்து வரும் தவறான பொருளாதாரக் கொள்கைதான். தொழில் துறை அனுபவமும் முதல் போடும் சக்தியும் உள்ள மக்களைக் கடும் வரிகளால் கசக்கிப் பிழிந்து ஒழித்து, எல்லாத் தொழில்களையும் சர்க்காரே மேற்கொள்ள வேண்டும் என்ற சோஷலிஸக் கொள்கையை அமுல் நடத்துவதன் விளைவே இந்த மந்த கதி. மக்கள் இதே கதியில்தான் முன்னேற விரும்புவதாக இருந்தால் அடுத்த தேர்தலிலும் காங்கிரஸைத்தான் ஆட்சிக்கு அனுப்ப வேண்டும்!

பொருளாதார வளர்ச்சி — முன்னேற்றம் துரிதமாக ஏற்படத்தான் வழி என்ன?

முதல் போட்டவனுக்கு லாபம் கிடைக்க வேண்டும். வேலை செய்பவனுக்கு உழைப்பவனுக்கு — நன்றாக உழைத்தால் நல்ல ஊதியம் கிடைக்கும், சோம்பியிருந்தால் வருவாய் குறையும் என்ற உணர்ச்சி ஏற்பட வேண்டும்.

தொழில் துறையில் மூலதனம் போட்டு லாபம் வந்தால் அதை முழுதும் சர்க்காரே எடுத்துக்கொள்ள விரும்புகிறது.

லாபம் சம்பாதிக்கும் தனியார் தொழிலுக்குக் கடும் வரிகள் விதித்து வசூலித்து, அப்பணத்தை நிரந்தரமாக விரயமும் நஷ்டமும் உண்டாகும் சர்க்கார்துறையில் ஈடுபடுத்தினால் தேசம் எப்படி முன்னேறும்? தொழில்கள் எப்படிப் பெருகும்? தனியார் துறையில் முதலீடு செய்ய ஊக்கமளிப்பது தான் தேச முன்னேற்றத்துக்கு வழி.

# கல்கி

ஏப்ரல் 17 · 1966

புத்தாண்டு
மலரில்
ஆரம்பம்



# சிவனருட் செல்வர்

திருமுருக
கிருபானந்த வாரியார்
எழுதுகிறார்



சென்னைத் தொழில் பிரமுகரும் ஈசுவரன் அண்டு சன்ஸ் என்ஜினீரிங் கம்பெனி மற்றும் இதைச் சேர்ந்த இதர கம்பெனிகளின் நிர்வாக அதிபருமான திரு கே. ஈசுவரனின் புதல்வன் சிரஞ்சீவி ஹரிஹரன் ஈசுவரனுக்கும், கல்லிடைக்குறிச்சி திரு ஆர். வைத்தியநாதய்யரின் புதல்வி சௌபாக்கியவதி விசாலாட்சிக்கும் சமீபத்தில் கல்லிடைக்குறிச்சியில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. பல தொழில் பிரமுகர்களும் நண்பர்களும் ஏராளமாக வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.







1. குரோம்பேட்டை புருஷோத்தம் நகரில் விஜய கணபதிக்கு அஷ்ட பந்தன மகா கும்பாபிஷேகம் மார்ச் 3ந் தேதி விமரிசையாக நடந்தது. காஞ்சி காமகோடி சங்கராச்சாரிய சுவாமிகள் இவ்வைபவத்துக்கு வந்திருந்து ஆசி நல்கினார்கள்.

2. ஸாஹித்ய அகாதமி ஸ்ரீ ராமானுஜர் புத்தகத்துக்காக ஸ்ரீ பி. ஸ்ரீ. அவர்களுக்கு வழங்கியுள்ள பரிசை ராஜாஜி ஹாலில் முதன் மந்திரி திரு பக்தவத்சலம் அளித்தார்.

3. சமூக சேவைக்கென அமைக்கப்பட்டுள்ள அகில இந்திய சுதந்திர சேவக கழகத்தினைச் சுதந்திரக் கட்சியின் பொதுக் காரியதரிசி திரு எம். ஆர். மஸானி ஹைதராபாத்தில் பிப்ரவரி 5-ந் தேதி தொடங்கி வைத்தார். தலைவர் ஸ்ரீ ரங்கா பயிற்சி பெற்ற தலைவர்களுக்கு விருது வழங்கிக் கௌரவிக்கிறார்.

4. 'தில் தியா தர்த் லியா' என்ற ஹிந்திப் படத்தில் ஒரு காட்சி. வஹீதா ரஹ்மானும், திலீப் குமாரும் ஒரே படத்தில் தோன்றுவது இதுவே முதல் தடவை. கதாநாயகனின் குணசித்திரம் நடிப்பதற்கு மிகவும் சிரமமானது; திலீப் குமாரைத் தவிர வேறு யாராலும் அதில் வெற்றி காண முடியாது என்று கூறுகிறார்கள் தயாரிப்பாளர்கள்.

## செய்திப் படங்கள்



# ரேஷன் தொல்லை





இன்றைய ரேஷன் முறை நம்முடைய நகர வாழ்க்கையில் ஒரு வலுக்கட்டாயச் சங்கடமாகப் பரிணமித்திருக்கிறது. குடும்பக் கார்டுகளின் அடிப்படையில் ரேஷன் பண்டங்கள் வாங்குபவர்களும், அவற்றை விநியோகம் செய்பவர்களும் பரஸ்பரம் புரிந்து கொள்ள முடியாத பல தொல்லைகள் இருக்கின்றன. இவை பற்றிச் சிலரைப் பேட்டி காண விழைந்தோம்.

**திரு கே. பி. சுந்தரம்**
**ரேஷன் வங்குபவர் :**

**"வணக்கம். ரேஷனில் உங்களுக்குத் தேவையான பொருள்கள் சுலபமாகக் கிடைக்கின்றனவா?"**

"சினிமாக் கொட்டகைகளிலே ஏதாவது நல்ல புதுப் படம் ஓடற காலத்திலே முதலில் இரண்டொரு வாரத்துக்கு 'ஹவுஸ் புல்'னு போர்டு மாட்டுவாங்க. பார்த்திருப்போம். ஆனால் ரேஷன் கடைகளிலே எத்தனை வாரமானாலும் தொடர்ந்து ஒரு சாமான் மாற்றி ஒரு சாமானுக்கு எதிரே 'நில்' போர்டு போட்டுடறாங்க. அல்லது எழுதிடறாங்க."

**"ரேஷன் கடைக்காரர்கள் என்ன சொல்லுகிறார்கள்?"**

"அவங்க என்னத்தைச் சொல்லுவாங்க? ஸ்டாக் இல்லே, நாளைக்கு வருதுன்னு சொல்லுவாங்க. ஒரு நாள் பட்டினி கிடக்க முடிகிறதா? பச்சரிசி சாப்பிடப் பழக்கமானவங்க இந்த நெருக்கடியிலே புழுங்கலரிசியைச் சாப்பிட ஆரம்பிச்சு வயிற்று வலியை வாங்கிக்குவாங்க.! அப்படியே நமக்குத் தேவையான அரிசி கடையிலிருந்தாலும் அந்த ரகங்கள் பார்க்கச் சகிக்காத விதத்திலே இருக்குது. மல்லிகைப் பூப்போலே, தும்பைப் பூப்போலே என்று ஒரு காலத்தில் வருணிக்கப்பட்ட அரிசியை இப்போ, மருதாணிப் பூ. துளசி மாதிரி கண்ட கண்ட டெக்னிக் கலர்களிலே பார்க்கிறோமே!"

**"இந்த ரேஷன் முறையைப் பற்றி உங்க அபிப்பிராயம்தான் என்ன?"**

"அரை வயிற்றுக்காவது ஏதோ அரிசி என்கிற பேரிலே கண்ணிலே காட்டறாங்கங்கறது என்னவோ உண்மை. ஆனால் இதையே நல்ல முறையிலே இடையிலே தட்டுப்பாடு ஏற்படாமல் ஒழுங்காகக் கொடுக்கிறது இல்லேங்கறதும் உண்மை. முன்னெல்லாம் நடுத்தர வருமானமுள்ளவங்க சம்பளம் வாங்கின உடனே ஒரு மாசத்துக்கான அரிசியை வாங்கிப் போட்டுடுவாங்க. சாப்பாட்டுக் கவலை இருக்காது. இப்போ அந்த வசதி இல்லே. சில சந்தர்ப்பங்களில் ரேஷன் கடைக்காரர் ஒரு மாச அரிசியைக் கொடுக்க முன் வருகிறார். ஆனால் அந்தச் சந்தர்ப்பத்திலே அவங்க கிட்ட இருக்கிற அரிசியைப் பார்க்கிறபோது ஜனங்கள் பயந்துடறாங்க. அடுத்த வாரம் பார்த்துக்கலாம்னு ஒத்திப் போடுவாங்க. அடுத்த வாரம் வரும். சுமாரான அரிசியும் வரும். கையிலே பணம் இருக்குமா? ஊஹூம்! வாராந்தரப் பையைத்தான் தூக்குவாங்க.

"நாலு நாளைக்குச் சேர்ந்தாற்போல் கடைக்கு அரிசி வராது. ஐந்தாவது நாள் அத்தனை கார்டு ஹோல்டரும் போய் நின்னுடுவாங்க. 'க்யூ' அது இதுன்னு ஒரே நேரமாகி அவனவன் வேலைக்குப் போக முடியாமல் போயிடுது. இதிலே கூட ஒரு இரண்டணாப் போனாலும் பரவாயில்லேன்னு நேரம் வெட்டியாவதைத் தடுக்க வெளியிலே ரகசியமாக அரிசி விக்கிறவங்களை நாடறாங்க. அவங்ககூட இப்போ ரகசியமாக விக்கிறதில்லே. தலைச் சுமையோடு தெருவுக்கே வர்றாங்களே!"

**இஸ்மாயில்**
**ரேஷன் கடைக்காரர் :**

**"ரேஷன் கார்டில் குறிப்பிட்டுள்ள அத்தனை பண்டங்களும் சேர்ந்தாற்போல் ரேஷன் கடைகளில் கிடைப்பதில்லை என்று குறை கூறுகிறார்களே! நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?"**

"எங்களுக்கு சப்ளையாகிற பொருள்களைத் தானே நாங்கள் கொடுக்க முடியும்? எங்க கடையிலே பதிவாகியிருக்கிற 'கார்டு ஹோல்டர்'களுக்குத் தேவையான அத்தனை பண்டங்களுக்கும் கணக்குப் போட்டு ஆர்டர் வாங்கி, ஆயிரக் கணக்கிலே பணத்தைக் கட்டி அந்தச் செலானைத் தூக்கிக்கிட்டு டெலிவரி டிப்போவுக்கு ஓடறோம். ஒரு வாரம் எங்க 'இண்டெண்ட்' பிரகாரம் சரக்கை சப்ளை பண்ணுகிறார்கள். ஒரு வாரம் 'பச்சரிசி ஸ்டாக் இல்லே. தொகையை அடுத்த இண்டண்டிலே அட்ஜெஸ்ட் பண்ணிக்கிறோம்' என்கிறார்கள். நாங்கள் வாயை மூடிக்கிட்டு வந்துடறோம். போர்டிலே 'நில்

ஸ்டாக்' எழுதினல் 'கஸ்டமர்ஸ்'ஸுக்குக் கோபம் வருது.''

''அப்படியே கிடைக்கும் சரக்குகளும் அநேக சந்தர்ப்பங்களில் மட்டமாக இருக்கின்றனவே, ஏன்? நீங்கள் எப்படி அந்தச் சரக்குகளை ஏற்றுக் கொள்கிறீர்கள்?''

''நல்ல கேள்வி கேட்டீங்க. அந்த நாளிலே கொத்தவால் சாவடியிலே போய்ச் சரக்கைத் திருப்பித் திருப்பிப் புரட்டிப் பார்த்து வாங்கற மாதிரி நினைச்சுட்டீங்களா? சரக்கை யாவது நாங்க கண்ணுலே பார்க்கிறதாவது? பணத்தைக் கட்டிப்பிட்டுத் திக்குதிக்குன்னு உட்கார்ந்திருப்போம். டெலிவரி டிப்போ விலே மூட்டையை அப்படி அப்படியேதான் நிறுத்து வண்டியிலே ஏத்துவாங்க. கடை வாசலில் வந்து பிரிச்சுப் பார்க்கிறபோது தான் பாதி நேரம் பகீர்னு இருக்கும். பச்சை அரிசி நிஜமாகவே பச்சைக்கல் அரிசியாகவே இருக்கும். 'என்னையா அரிசி வச்சிருக்கே!' என்று கஸ்டமர்ஸ் முறைப்பாங்க. நாங்க நடக்கிறதைச் சொன்னு அவங்களுக்கு இருக்கிற ஆத்திரத்திலே புரிஞ்சுக்கிட மாட்டேங்கிறாங்க. பொல்லாப்பு எங்க பேரிலே! சரக்கு கொள்முதல் பண்ணுகிற இடத்திலே கொஞ்சம் உஷாரா, கண்ணை முழிச்சுக்கிட்டு இருந்தாங்கன்னு இந்தக் கோளாறு ஏற்படாது. இப்படி டெலிவரியாகிற மோசமான சரக்கை விடக் கூடாது. மட்டமோ நல்லதோ, விற்பனையாகுமோ இல்லையோ, எல்லாம் நம்ப பொறுப்புத்தான். இது யாருக்குத் தெரியுது? கொஞ்ச நாளைக்கு முன்னுலே துவரம் பருப்பையும் ரேஷனிலே கொடுக்கும்படி ஏற்பாடு செஞ்சாங்க. எங்கே போயி யாரு கிட்டே பேசிக் கொள்முதல் பண்ணிட்டு வந்தாங்களோ, அந்த ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம். படு திராபை. நான் ஒரு மூட்டை வாங்கிப் போட்டேன். அப்படியே கிடக்குது. வெளி மார்க்கெட்டிலே நல்ல பருப்பு கிடைக்கிற போது இதை யாரு சீந்துவாங்க?''





''வாராந்திர, மாதாந்திர விற்பனைப் பண்டங்களை வாங்குவதில் உங்களுக்குச் சிரமமில்லையா?''

''சிரமம்னு அப்படி ஒன்னும் பெரிசாச் சொல்றதுக்கு இல்லே. ஆனால் சில்லறைத் தொந்தரவுகளும், மனக் கஷ்டமும் நிறைய இருக்கு. முதலில் இன்டென்டைக் கொண்டு போய் ரேஷன் ஆபீஸில் காண்பித்து, ஆர்டர் வாங்கணும். பிறகு பணத்தைக் கட்டி செலானை எடுத்துக்கிட்டு மறுபடியும் ரேஷன் ஆபீஸுக்குப் போய் டெலிவரி ஆர்டர் வாங்கி அதைக் கொண்டு போய் டிப்போவிலே கொடுக்கணும். ரேஷன் ஆபீஸிலே கொஞ்சம் சங்கடம்தான் படறோம். அங்கே ரெக்ரூட் ஆகியிருக்கிற சிப்பந்திகள், குமாஸ்தாக்கள் இன்னும் கொஞ்சம் பொறுப்போட, மரியாதையோட நடந்துக்கிட்டாத் தேவலைன்னு தோணுது. எல்லாமே அவங்களுக்கு அலட்சியமாத் தோணுது. அவனவன் இந்த வியாபாரத்திலே முதலைப் போட்டு முடக்கி அவஸ்தைப்படறாங்களேன்னு தெரிஞ்சுக்காமே 'கழுத்தை அறுக்க வந்துட்டான் இவன்' என்றுதான் தங்கள் முன் வந்து நிற்கும் வியாபாரிகளை நினைக்கிறார்கள். இது மாறிட்டாப் போதும்.''

''மட்டமான சரக்குகள் என்ற முறையில் இது வரை உங்களிடம் ஏதாவது விற்பனையாகாமல் தங்கிப் போனது உண்டா?''

''அநேகமாகப் பட்டினி கிடப்பதைவிடக் கிடைப்பதை வேண்டா வெறுப்பாகவாவது வாங்கிக்கொண்டு போய் விடுகிறார்கள்.''

## திரு கே. ரத்தினம்

### சொந்த ஊரிலிருந்து அரிசி கொண்டு வருபவர்:

''உங்க கிராமம் எங்கே இருக்கிறது? அங்கிருந்து உங்கள் குடும்பத்துக்கான அரிசியைக் கொண்டுவர என்ன முறையை எடுத்துக் கொண்டீர்கள்?''

''எங்க கிராமம் கும்மிடிப்பூண்டிப் பக்கம் இருக்குது. இங்கே உள்ள ரேஷன் ஆபீஸுக்கு மனுப் போட்டு பெர்மிட் வாங்கித் தான் அரிசியை ஊரிலிருந்து கொண்டு வரச்



செய்தேன். அது பெரிய கதையாப் போச்சுங்க. என் விஷயத்திலே ஒரு வேடிக்கை கூட நடந்து போச்சு. எதிர்பாராத வேடிக்கை.''

''கொஞ்சம் விவரமாகத்தான் சொல்லுங்களேன்.''

''எங்க பட்டா விவரம், நிலம் இருக்கிற கிராமம், எல்லா விஷயங்களையும் குறிப்பிட்டு அதற்கான பாரத்தைப் பூர்த்தி செய்து ரேஷன் ஆபீசிலே கொடுத்தேன். இதிலே ரூல் என்னன்னு நான் கொடுத்த அப்ளிகேஷனைக் கும்மிடிபூண்டி ஏரியா தாசில்தாருக்கு அனுப்பணும். தாசில்தார், அதிலே கண்டிருக்கிற தகவல் சரியா என்று பார்க்கக் கிராம முன்சீபுக்கு அனுப்பித் திருப்பி வாங்கி 'நோ அப்ஜெக்ஷன் சர்டிபிகேட்டு'டன் அதை இங்குள்ள ரேஷன் ஆபீஸுக்கு அனுப்பணும். நாம் போய் அது வந்துடுச்சான்னு விசாரிச்சு பர்மிட்டையும் வாங்கிக்கிட்டு ஏற்கனவே நமக்குக் கொடுத்திருக்கும் குடும்ப ரேஷன் கார்டில் அதிகார பூர்வமான திருத்தத்துடன் திரும்பி வரணும். அந்தக் கும்மிடிப்பூண்டி தாசில்தார் என்ன செய்துட்டாருன்னு என்னுடைய அப்ளிகேஷன் பாரத்தை ரேஷன் ஆபீஸுக்குத் திருப்பி அனுப்பிச்சுட்டு, 'நோ அப்ஜெக்ஷன் சர்டிபிகேட்டை' நேராக எனக்கு அனுப்பிச்சிட்டாரு.''

''நீங்க அதை எடுத்துக்கிட்டு ரேஷன் ஆபீசுக்குப் போனீங்களாக்கும்?''

''நீங்க நினைக்கிறப்படிலே அவ்வளவு சுலபமாக ஒண்ணும் நடக்கலே! நான் 'நோ அப்ஜெக்ஷன் சர்டிபிகேட்'டைக் கொண்டு போய்க் கொடுத்தபோது அங்கே என் அப்ளிகேஷன் பாரத்தைக் காணுமற் போக்கிட்டிருந்தாங்க. அப்ளிகேஷன் பாரத்தோடு இந்த சர்டிபிகேட்டை இணைச்சப்புறம்தான் பெர்மிட் கொடுக்கலாமாம்!''

''அப்புறம் நீங்க என்ன பண்ணினீங்க?''

''இன்னோர் அப்ளிக்கேஷன் எழுதிக் கொடுக்கச் சொன்னாங்க. அதை வாங்கி வச்சுக்கிட்டுப் பத்து நாட்கள் கழித்து வரச் சொன்னாங்க. பத்து நாட்கள் கழித்துப் போனேன். ஆனால் பெர்மிட் பத்தின பேச்சையே காணோம். என் முதல் அப்ளிகேஷனுக்குக் கொடுத்த நம்பரை, பழைய பைல்களைப் பார்த்துத் தேடி அந்த டூப்ளிகேட் அப்ளிகேஷனுக்குக் கொடுக்காமல் புது நம்பரைக் கொடுத்திருக்காங்க. இந்தத் தகராறு காரணமாக இன்னும் இரண்டு தடவை ரேஷன் ஆபீசுக்குப் படையெடுத்தேன். கடைசியா ஒரு விஷயம் சொன்னாங்க. அது தான் ரொம்ப வேடிக்கை! ''பெர்மிட்டை இப்பவே கொடுத்திடலாம். ஆனால் அதுக்கான அச்சிட்ட பாரம் ஸ்டாக் இல்லே. உங்களுக்கு உடனடியா பெர்மிட் வேணும்னு நூறு பாரம் அச்சுப் போட்டுக் கொடுங்க. மற்றவங்களுக்கும் உதவும். இப்படித்தான் கொஞ்ச நாட்கள் முன்னாலே ஒருத்தர் உதவினார்'' என்றாங்க. எப்படியிருக்கு விஷயம்? அப்புறம் நான் போய் அந்த 'பார'த்தை டைப் பண்ணிக் கொண்டு வந்து கொடுத்துப் பெர்மிட் வாங்கிட்டு வந்தேன்.''

— மேனு

மகாதேவ கோவிந்த ரானடே ஒரு சமயம் கல்கத்தாவில் தங்கியிருக்க நேர்ந்தபோது வங்காள மொழியைக் கற்றுக்கொள்ள வேண்டுமென்று விரும்பினார். அதற்காகப் பால பாடப் புத்தகம் ஒன்றை வாங்கிப் படிக்கலானார்.

தமக்கு க்ஷவரம் செய்த ஒரு நாவிதனிடம் 'இந்தப் புத்தகத்தை நான் படித்துக் கொண்டே வருகிறேன். இதில் ஏதாவது சந்தேகம் வந்தால் நீ சொல்லித் தரவேண்டும்' என்று கேட்டுக் கொண்டார். இதை அறிந்த அவருடைய மனைவி கணவரிடம் 'நல்ல ஆசிரியரைப் பொறுக்கி எடுத்திருக்கிறீர்களே!' என்றார் கேலியாக.

அதற்கு ரானடே, 'இதோ பார், யாரேனும் என் ஆசிரியர்களைப் பற்றிக் கேட்டால் முதலில் இவன் பெயரைத்தான் சொல்வேன். உனக்குத் தெரியாதா, முன் காலத்திலெல்லாம் குருநாதருக்குப் பணிவிடைகள் புரிந்துகொண்டேதான் கல்வி கற்று வந்தார்கள். ஆனால் இந்த எனது குருவோ, தம் மாணவருக்குப் பணிவிடை செய்துகொண்டேயல்லவா கல்வி போதித்தார்? இப்போது சொல்லு. என் குருநாதர் மற்றவர்களைவிட மேலானவரா இல்லையா?' என்றார்.

ஆதாரம்: 'ஸ்மைல்ஸ் அண்ட் டியர்ஸ்'
தகவல்: பக்கிராஜன்



ரானடேயின் குருநாதர்!



பெண்களே, நில்லுங்கள்!

நம் நாடு எல்லாத் துறைகளிலும் தன்னிறைவு பெறவேண்டும், தன்னிறைவு பெறவேண்டும் என்று பொழுது விடிந்தால் பொழுது போனால் அமைச்சர்களும் பிறரும் கதறுகிறார்கள். தன்னிறைவு பெற எத்தனை திட்டங்கள் போட்டு அவற்றில் எத்தனை பாழாகின்றன, எத்தனை உருப்படியாக நிறைவேறுகின்றன என்ற கணக்கொன்றும் நமக்குச் சரிவரத் தெரியவருவதில்லை. ஆனால் ஒரு விஷயத்தில் நாம் நிச்சயமாகத் தன்னிறைவு பெற்றுவிட்டோம்! இதை அமைச்சர் திரு மனுபாய் ஷா பெருமிதத்துடன் பாராளு மன்றத்தில் சமீபத்தில் வெளியிட்டார்! நாம் தன்னிறைவு பெற்றுள்ள அந்த ஒரு உற்பத்தித் துறை என்ன தெரியுமா? லிப்ஸ்டிக் எனப்படும் உதட்டுச் சாயம்!

தகவல்: அ. சங்கரன்

## ○ ○ ○ சட்டம் ஒரு சல்லடை ○ ○ ○

ஒரு சட்டப் புத்தகத்தின் பொருளடக்கம்:

பக்கம்

1- 10: ஒப்பந்தங்கள் பற்றிய சட்டம்.
11-27: கூட்டு வியாபாரம் பற்றிய சட்டம்
28-40: தொழிற்சாலைகள் பற்றிய சட்டம்
41--368: மேற்படி சட்டங்களில் உள்ள ஓட்டைகள் பற்றிய விளக்கம்!

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!

**ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.**

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

கால்கேட்டின் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்!

**பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல் துலக்குங்கள்**

...உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டென்டல் கிரீமையே வாங்குகிறார்கள்.

நீங்கள் பற்பொடியை விரும்பினால் இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.






நவரச நிகழ்ச்சிகள்

வீரம்

# ஆக்கம் தரும் வீரம்

பன்னிரண்டு வயதுச் சிறுவன் ஃபெலிக்ஸ் ஹேறால்ட். ஊரில் அவன் தந்தையைப் பற்றி வெகு உயர்வாகவே பேசிக் கொண்டார்கள். அந்த நாட்களில் அவர் நிராயுதபாணியாக இரண்டு போக்கிரிகளை அடக்கிய சம்பவத்தையும், துப்பாக்கி கொண்டு இருவரைச் சுட்டு வீழ்த்திய ஒரு முரடனை ஒண்டியாகப் பிடித்துக் கட்டியதையும் கதை கதையாகப் பேசினார்கள். ஆனால் ஹேறால்ட்டுக்குத் தன் தந்தை அப்படி ஒன்றும் வீர தீர புருஷராகத் தோன்றவில்லை. தன் நேரத்தை யெல்லாம் சொந்தப் புகையிலைத் தோட்டத்திலும் வீட்டுக் காய்கறித் தோட்டத்திலும் கழித்துக்கொண்டிருக்கும் அப்பாவி ஆசாமி என்றுதான் ஹேறால்ட் நினைத்தான்.

ஒரு சந்தர்ப்பத்தில் கால்டுவெல் என்பவன், தன் வீட்டுக்குள் நுழைந்து பாத்திரம் பண்டங்களை உடைத்து விட்டதாகச் சிறுவன் ஹேறால்ட் மீது அபாண்டப் பழி சுமத்தினான். குறிப்பிட்ட அந்த நேரத்தில் ஹேறால்ட் வேறு ஓர் இடத்தில் விளையாடிக் கொண்டிருந்தான். இந்தப் பழிச்சொல்லைக் கேட்டதும் அவனுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. தந்தையிடம் போய் விஷயத்தைச் சொல்லி கால்டுவெல்லைத் தண்டிக்கும்படி வேண்டினான்.

பெரியவர் சிரித்தார். ''நாம் இந்த ஊரில் பரம்பரையாக வசித்து வருபவர்கள். கால்டுவெல் குடும்பம் சமீப காலத்தில் இங்கு வந்து சேர்ந்த ஒன்று. ஹேறால்ட் குடும்பத்தைப் பற்றி நன்கு தெரிந்தவர்கள் இப்படிப் பேச மாட்டார்கள். இந்த அற்ப விஷயத்தை விட்டுத் தள்ளு'' என்று சொல்லி விட்டார்.

சிறுவன் ஹேறால்டுக்கு ஒரே ஏமாற்றம். ஊர்க்காரர்கள் குறிப்பிடுவது போல் தன் தந்தை அப்படி ஒன்றும் வீர தீர புருஷரில்லை என்று நினைக்க ஆரம்பித்தான். அவர் ஒரு கோழை, பயந்தாங்கொள்ளி என்ற முடிவுக்குக்கூட வந்து விட்டான்.

சிறுவன் ஹேறால்ட் இளைஞன் ஹேறால்ட் ஆனான். பிறகு அவன் சில காலம் குடும்பத்தை விட்டுப் பிரிந்து கலிபோர்னியாவில் போய்த் தங்கியிருந்தான். முதல் உலக யுத்தம் ஆரம்பமான காலம். போர்வீரனாகத் தன்னைப் பதிவுசெய்து கொண்ட ஹேறால்ட் ஐரோப்பாவுக்குக் கப்பல் ஏறுவதற்குமுன் ஒரு தடவை பெற்றோர்களைப் பார்த்துவிட்டுப் போக ஊருக்கு வந்திருந்தான்.

ஒரு நாள் முன்னிரவு நேரம். ஒரு நண்பனுடைய வீட்டு முகப்பில் ஹேறால்டும் அவனுடைய இதர பழைய நண்பர்களும் அமர்ந்து உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது திடீரென்று தெருவுக்கு மறு பக்கத்துக் கோடியில் இரண்டு தடவைகள் துப்பாக்கி வெடிக்கும் சத்தம் கேட்டது. நீக்ரோ இனத்தைச் சேர்ந்த சாம் மேசன் என்பவனுக்குச் சொந்தமான ஒரு சில்லறைச் சாமான் கடை இருந்த பகுதியில் இருந்துதான் அந்தச் சத்தம் வந்தது.

ஹேறால்டும் அவன் நண்பர்களும் அந்தத் திசையை நோக்கி விரைந்தார்கள். அதற்குள் அங்கு கூட்டம் கூட ஆரம்பித்து விட்டது. வெள்ளையர்களுக்கும் நீக்ரோக்களுக்கும் கைகலப்பு ஏற்பட்டு, நீக்ரோக்கள் இரண்டு வெள்ளையர்களைச் சுட்டுக் கொன்று விட்டார்கள் என்ற வதந்தி காட்டுத் தீ போல் பரவி விட்டது. உண்மையில் நடந்தது, சாம் மேசன் கடையில் கலாட்டாசெய்த இரண்டு வெள்ளையர்களை வெளியேற்ற யாரோ ஒரு சிப்பந்தி வெட்டவெளியை நோக்கித் துப்பாக்கியால் சுட்டிருக்கிறான். அவ்வளவுதான்!

பொதுமக்களின் ஆவேசமும் கூட்டமும் நிமிடத்துக்கு நிமிடம் அதிகரித்தன. சாம் மேசன் கடையை இழுத்து மூடிக் கொண்டு வீட்டில் போய் ஒளிந்து கொண்டான். கூட்டத்தினரோ சாம் மேசனை இழுத்துக் கொண்டு வந்து அவனை அங்கேயே அடித்துக் கொல்ல வேண்டும் என்று துடித்தார்கள்.

போலீஸ் அதிகாரியும் வந்து விட்டார். கூடியிருந்தவர்களைக் கேள்வி கேட்க ஆரம்பித்தார். கூட்டத்தினருக்கு எரிச்சல் அதிகமாயிற்று. 'சாம் மேசன் சுட்டால் என்ன? அவன் வேலையாட்கள் சுட்டால் என்ன? உடனே அவனை இழுத்து வந்து அடிக்க வேண்டும்' என்று ஆரவாரம் செய்தார்கள். போலீஸ் அதிகாரி தயங்கினார். கேள்வி கேட்பதில்தான் ஈடுபட்டாரே தவிர சாம் மேசன் வீட்டை நோக்கிப் போய் அவனைப்

பிடிக்க முயலவில்லை. பக்கத்துச் சந்தில் இருக்கும் தன் வீட்டில் சாம் மேசன் சரியான ஆள் பலத்துடன் துப்பாக்கிகள்சகிதம் இருப்பதாகவும் வதந்தி கிளம்பியது.

போலீஸ் அதிகாரியின் விசாரணையைக் கவனித்துக் கொண்டிருந்த ஹேறால்டை யாரோ கையைப் பிடித்துக் கூப்பிட்டார்கள். ஹேறால்ட் திரும்பிப் பார்த்தான். அவன் தந்தை நின்று கொண்டிருந்தார். அவர் சமிக்ஞை செய்ததைப் புரிந்து கொண்டு ஹேறால்ட் அவரைப் பின்தொடர்ந்தான். இருவரும் கூட்டத்தை விட்டு விலகி சாம் மேசன் இருந்த சந்தை நோக்கி நடந்தார்கள். ஹேறால்டின் தந்தையும் சாம் மேசனும் நெடுநாளைய நண்பர்கள்.

பெரியவர் சாம் மேசன் வீட்டுக் கதவைத் தட்டினார். சாம் மேசனின் மனைவி பயத்துடன் கதவைத் திறந்தாள். ''உன் புருஷனை வெளியே வரச் சொல்'' என்றார்.

''ஐயையோ! அவர்கள் எல்லாருமாகச் சேர்ந்து அவரைக் கொன்று விடுவார்களே!'' என்று அலறினாள் அவள்.

''ஏன் ? இங்கிருந்தால் மாத்திரம் கொல்லாமல் விட்டு விடுவார்களோ...? அவனை அனுப்பு வெளியே'' என்று கண்டிப்பாகச் சொன்னார். பயத்தால் நடுங்கிக் கொண்டே சாம் மேசன் வெளியே வந்தான். மூவரும் சந்து திருப்பத்துக்கு வந்தார்கள்.

சாம் மேசன் கூட்டம் கூடியிருக்கும் இடத்துக்கு எதிர்ப் பக்கமாகத் திரும்பினான்.... ''மேசன்!'' என்று கர்ஜித்தார் பெரியவர். ''கூட்டத்தை நோக்கி நட ! இன்னும் சில நிமிஷங்களுக்குள் உன்னை அவர்கள் பார்க்கவில்லையானால் வெறியில் உன் வீட்டையும் குடும்பத்தையும் நாசமாக்குவார்கள். அல்லது நீயும் நானும் சேர்ந்து எதிர்த்திசையில் போவதைப் பார்த்தாலும் அவர்களுக்கு ஆத்திரம் வரும்! என் கூட வா!'' என்று கண்டித்து விட்டுப் போலீஸ் அதிகாரியைச் சூழ்ந்து நிற்கும்கூட்டத்தை நோக்கி நடந்தார்.

சாம் மேசன் வருவதைப் பார்த்தவுடன் கூட்டத்தினர், ''குத்து, வெட்டு! கொல்!'' என்ற கோஷத்துடன் அவனை நோக்கிப் பாய்ந்தனர். போலீஸ் அதிகாரி அவர்களை அடக்கி ஒரு பக்கம் நிறுத்தி விட்டுத் துப்பாக்கியைக் கையில் பிடித்தபடி ஹேறால்டின் தந்தையைப் பார்த்து, ''மேசனை என்னிடம் ஒப்படையுங்கள். இனி என் பொறுப்பு'' என்றார்.

பெரியவர் அலட்சியமாக, எதிர்பாராத வகையில் ஒரு கையால் துப்பாக்கியைத் தரையை நோக்கித் தள்ளி வைன்றிவிட்டு மற்றொரு கையால் அந்த அதிகாரியின் விலாவை அழுத்தினார். அந்தக் கையில் ஒரு கூர்மையான சிறு கத்தி இருந்ததை ஹேறால்ட் பார்த்துப் பதறினான்.

அவர் நிதானமாகப் பேசினார். ''உனக்கு நேரடியாகப் போய் சாம் மேசனைப் பிடிக்கவோ அழைத்து வரவோ தைரியமில்லை. இங்கே பயந்து நின்று கொண்டிருந்தாய். அவனை அழைத்து வந்த பிறகு நீ பொறுப்பேற்றுக் கொள்ள வருகிறாய். நான் அவனை இப்போது நேராக நீதிபதியின் வீட்டுக்கு



அழைத்துப் போகிறேன். அங்கு வந்து பேசிக் கொள்ளுங்கள் எல்லாரும்'' என்று சொல்லிவிட்டு சாம் மேசன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு நடந்தார்.

கூட்டத்தினர் சிலையாக நின்றுவிட்டார்கள். ஆரவாரமும் கூச்சலும் சட்டென்று அடங்கிப் போயிற்று. மறுபேச்சில்லாமல் அவர்களும் நீதிபதியின் வீட்டை நோக்கி நடந்தார்கள்.

நீதிபதி மறு நாள் காலையில் விசாரணையை வைத்துக் கொள்ளச் சம்மதித்தார். ஆனால் இன்றைய இரவில் சாம் மேசனைப் பாதுகாப்பான இடத்தில் வைக்க வேண்டுமே. உள்ளூர் ஜெயிலில் வைத்தால் ஆத்திரமடைந்த ஜனங்கள் ஜெயிலுக்கே தீ வைத்து அவனை உயிருடன் கொளுத்தி விடுவார்கள். அப்புறம் விசாரணைக்கு இடமேது? நீதிபதி திகைத்தார்.

''சாம் மேசனை இன்று இரவு பாதுகாப்பது என் பொறுப்பு. அவன் இன்று இரவுப் பொழுதை என்னுடன் கழிப்பான். இந்த ஊர் ஆசாமி ஒருவனுக்காவது என் வீட்டை நெருங்கும் துணிவு கிடையாது'' என்றார் ஹேரால்டின் தந்தை. நீதிபதி அதற்கு ஒப்புக் கொண்டார்.

அன்று இரவு சாம் மேசன் ஹேரால்ட் வீட்டில் நிம்மதியாகத் தூங்கினான். அன்று இரவு ஹேரால்ட் வீட்டின் கதவு தாளிடப் படவேயில்லை!

மறு நாள் காலை நீதி ஸ்தலம் கூடியது. போலீஸ் அதிகாரி முன் இரவிலேயே விசாரணை செய்ததில் சாம் மேசன் யாரையும் சுட்டுக் கொல்லவில்லை என்று தெரிந்து கொண்டார். கோர்ட்டில் சாம் மேசன் மீது எந்தவிதக் குற்றச்சாட்டும் இல்லை என்று சொல்லி விட்டார்.

ஹேரால்டின் தந்தையும் சாம் மேசனும் கம்பீரமாகக் கைகோத்து வெளியே வந்தார்கள். மேசனை வீட்டில் கொண்டு போய் விட்டு விட்டு வந்தார் பெரியவர்.

ஹேரால்டின் கண்களில் தன் தந்தை மகா வீர புருஷராகத் தோன்றினார். ''உங்கள் தைரியத்தைக் கண்டு நான் பிரமித்துப் போனேன்'' என்றான் ஹேரால்ட் அவரிடம்.

''இது தைரியமில்லை! வீரத்தில் ஒரு ரகம்! எதிர்பாராத வகையில் ஒரு காரியம் நடக்கும்போது ஜனங்கள் பிரமித்துச் செயலிழந்து நின்று விடுவார்கள். நான் அதைப் பயன்படுத்திக் கொண்டேன். இந்த வயதில் நான் இத்தகைய துணிவைக் காட்டுவேன் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. வீரம் என்பது அழிப்பதற்கு மாத்திரமில்லை. ஆக்கத்துக்கும் பயன்படும். இந்தக் காலத்தில் நீங்கள் இதை மனோதத்துவம், துணிவு என்று சொல்லுவீர்கள். நாங்கள் இதை வீரம் என்று நினைக்கிறோம்'' என்றார்.

சில ஆண்டுகள் முன் யாரைக் கோழை என்று ஹேரால்ட் நினைத்தானோ, அவரை அவனுடைய அகக் கண், ஒரு வீர புருஷனாகப் பீடத்தில் ஏற்றி வைத்தது.

ஆதாரம்: 'டைஜஸ்ட்'



## கேன் – கேன்

உணர்ச்சிகளைக் கிளறிவிட்டு மக்களின் ஒழுக்கத்தைக் கெடுக்கும் என்று ஒருவகை நடனத்துக்குத் தடை விதிக்கிறது சர்க்கார். இது 1896ல் பாரிஸ் நகரில். ஆனால் மக்களின் ஆதரவைப் பெற்ற அந்த நடனமோ இரவு ஹோட்டல்களில் ஆடப்படுகிறது. கேன்-கேன் என்ற இந்த நடனம் ஆடுவதில் வல்லவளான கட்டழகி ஒருத்தி. அவளது காதலன் ஒரு வழக்கறிஞன். அவள் நடத்தும் ஹோட்டலில் அந்த நடனம் பிரமாதப்படுகிறது. புதிதாகப் பதவி ஏற்றுள்ள நீதிபதி, சட்டத்தின்படி வாழத் துடிக்கும் ஓர் இளைஞர். இந்த நடனக் கலைஞர்களைக் கைது செய்து தண்டித்துவிட வேண்டுமென்று துடிப்புடன் செயல்படுகிறார். ஆனால் அவரே அந்த நடனக்காரியின் கட்டழகில் மயங்கிவிடுகிறார். முடிவு: அவருக்குக் காதலும் கைகூடவில்லை, தண்டிக்கவும் முடியவில்லை. அந்த நடனத்துக்கு இருந்த தடையும் நீக்கப்படுகிறது.

இப்படியொரு சிறு கதையைக் கொண்டு சங்கீத, நடன, உல்லாச, சிருங்கார, நகைச்சுவை அடங்கிய வண்ணப்படமாகத் தயாரித்திருக்கிறார்கள். நடன சுந்தரியாக ஷெர்லி மெக்லேனும் அவள் காதலனாக பிராங்க்ஸினட்ராவும் பிரமாதமாக நடித்திருக்கிறார்கள். லூயி ஜூர்டான், மாரிஸ் செவாலியர் ஆகிய பிரபல நட்சத்திரங்களும் நிரம்பட நடிக்கும் இந்தப் படம் எழுபது மில்லிமீட்டர் திரைக்கு ஏற்றபடி எடுக்கப்பட்டிருக்கிறது. இனிமையான இசை, இந்தப் படத்தின் சிறப்புகளில் ஒன்று.



# வசீகரத்தையும், பெருமிதத்தையும் கொடுக்கும் நறுமணம் உங்களுக்கு பாமாலிவ் லவண்டர் டால்க் உபயோகிப்பதால்.

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான லெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான லெண்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்டாம்...இன்று பாமாலிவ் லவண்டர் டால்க் மட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்தினாலும், பெருமிதத்தினாலும் உங்கள் உடலைச் சொகுசாகப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக்கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய வசீகர நறுமணத்தினுல் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**




புதிய, நவீன காஸ்மெடிக் டின்!




PT.G.8 TAM.

மற்றும் பாமாலிவ் டால்க் டீலக்ஸ் — மயக்கும் 17 லெண்டுகளின் அற்புதமான கலவை

# இலக்கிய நோக்கு 1965

## அழியாக் கோலம்

கொங்கு நாட்டை நிலைக்களமாகக் கொண்டு நாவல்கள் எழுதி வருபவர் திரு ஆர். சண்முகசுந்தரம். கைவிரல் எண்ணிக்கைக்குள் அடங்கிவிடக் கூடிய சிறு சிறு நாவல்களே அவரது படைப்புக்கள். ஆனால் அவை நிர்த்தாட்சண்யமான விமர்சகர் க.நா.சு.வின் புகழ்ச்சிக்கும் பாத்திரமானவை என்பதுதான் ரசமான விஷயம்! கடைசியாக, வெளிவந்துள்ள அவரது நாவல் 'அழியாக் கோலம்' அவரது படைப்புக்களிலேயே அளவில் பெரியதும், தரத்தில் சிறந்ததும் ஆகும்.

''நீ அறியாதவைகளைப் பற்றி எழுதாதே'' என்று காலம் சென்ற சாமர்செட் மாம் இந்தியாவின் தலைசிறந்த எழுத்தாளரான கே. ஏ. அப்பாஸ் அவர்களுக்கு அறிவுரை கூறினாராம். தாம் அறிந்தவைகளையெல்லாம் சுவாரசியமாகவும் இலக்கிய நயம் படவும் சொல்லிவிட எல்லா எழுத்தாளர்களுக்கும் தெரிந்து விடுகிறதா என்ன? அந்தக் கலையைத் தம் அடிமையாக ஆக்கி வைத்துக் கொண்டு, தாராபுரம் ஜில்லாவில் கீரனூர் என்ற கிராமத்தை உருவாக்கி அதில் தம் பாத்திரங்களை உலவவிட்டு, அவர்களில் ஆசாபாசங்களையும், அபிலாஷைகளையும் நிறைத்து, மனப் போராட்டங்களையும், ஊர்ப் பூசல்களையும் சிருஷ்டித்து அவைகளில் வாசகர்களை மூழ்கடித்து நம்மையும் அவர்களோடு அழ வைத்து, சிரிக்க வைத்து, நாவலை முடித்துக் கீழே வைக்கும் வரையிலும் ஒரு மாய லோகத்தில் நம்மைச் சஞ்சரிக்க விடுகிறார் திரு சண்முகசுந்தரம் அவர்கள்.

நாவலில் இடம்பெறும் கதாபாத்திரங்கள் எல்லோருமே நல்லவர்கள். உள்ளொன்றும் புறமொன்றும் இல்லாத கிராமாந்தரத்துக் கபடமற்ற மக்கள். கதாநாயகனையும், வில்லனையும் படைத்துத்தான் கதை சொல்ல வேண்டும் என்ற நியதியை வெட்டிமுறித்துப் புதைத்து விட்ட கதைகளில் இதுவுமொன்று.

மழையில்லாத பூமி கொங்குநாடு. ஆனால் நெஞ்சீரம் இல்லாத மக்களல்ல அவர்கள். தங்கள் ஊரின் பெருமை பேசும் போது தங்கள் ஊர்க்காரர்கள்செய்த கொலைகளையும், அடாவடித்தனங்களையும் கணக்கில் எடுத்துக் கொண்டே பேசுகிறார்கள். ஆனால் வீணுக ஈ, எறும்புக்குக்கூடத் தீங்கெண்ணாதவர்கள்.

நாம் பிறந்த மண்ணை எப்படி நேசிக்கிறார் ஆசிரியர்! அன்னை பூமி வாரித் தரும் சோளமும், பருத்தியும், புகையிலையும் மட்டுமல்ல அவருக்குத் தெரிவது. அவள் தரும் கோவைப் பழமும், வேம்பின் விதையும்கூட அவருக்கு அற்புதச் செல்வங்களாகத் தெரிகின்றன. வறண்ட அந்த நிலப்பகுதி அவருக்கு எத்தனை வகை இன்பத்தை அளிக்கிறது! ''ஒவ்வொரு மரத்துக்கும் ஓர் இசை உண்டு! வேப்பமரம் காற்றில் அசைகையில் ஒருவித இசையை எழுப்புகிறது. தென்னங்கீற்றுகளின் நடனம், பூவரசின் படபடப்பு, வேலாமரங்களின் கோஷ்டி கானம்'' என்று இயற்கையை அவர் வருணிக்கிறார்; அநுபவிக்கிறார்.

எத்தனையோ உவமைகள். எளிய, ஆனால் கனமான உவமைகள் நாவல் முழுதும் சிதறிக் கிடக்கின்றன. உதாரணத்துக்கு ஒன்று. ''நாய்க்கு எந்த இடத்தில் அடிபட்டாலும் அது காலை நொண்டும். கொஞ்ச நாளாக மாரக்காளுக்குப் பிடிக்காத எது நடந்தாலும் 'எல்லாம் உங்களால் வந்த வினைதான்' என்று கணவனை நொந்து கொள்வாள்!''—ராக்கியாக் கௌண்டர் அறியாமல் செய்த தவறால் மனம் விண்டு போன மாரக்காளின் மன நிலை எத்தனை அற்புதமாக, அப்பட்டமாக எடுத்துக் காட்டப்படுகிறது!

கதை ஒரு துன்பியல் கதை. சம்பவக் குவியல் இல்லாத கதை. ஒரு நாவலுக்கு மெருகூட்ட, அதைக் கவர்ச்சியுடையதாக்கச் சம்பவங்கள் ஒரு நிர்ப்பந்தமில்லை என்பதை நிரூபிக்கும் கதை. மக்களின் வாழ்க்கையை ஊடுருவி நோக்கி, அதை வாசகர்கள் நெஞ்சில் ஊடுருவ வைப்பவனே கலைஞன். ஆர். சண்முகசுந்தரத்துக்கு அந்தக் கலை கைகூடியிருப்பதை அவரது எல்லா நாவல்களிலும் காண முடியும். ஆனால் அதன் பூரணத்துவத்தை நாம் காண்பது 'அழியாக் கோல'த்தில்தான்.

வை. ரங்கநாதன்

பிரசுராலயம் : இமயம் பதிப்பகம், நாகப்பட்டினம்

## புதிய வார்ப்புகள்

சமுதாயத்தின் நலிவில் உழலும் எந்தப் பாத்திரத்தையும், எந்தப் பிரச்னையையும் எடுத்துக் கொண்டு கதை உருவகம் செய்யும் ஓர் இலக்கியகர்த்தா ஜெயகாந்தன். சேரியின் நடுவில் அவர் உணர்வுத் தென்றல் இழை

போடி அங்கே ஒரு 'கரு'வை முத்துக் குளித்து வரும்! நாம் முகம் களிக்கும் எந்தப் பல்லவி களையும் அவர் அகம் நோக்கினுல் அங்கே ஒரு படைப்புத் தொழில். பாத்திரங்களின் தரத்தைப் பற்றிக் கவலை என்ன? பாத்திரங்கள் தாங்குகின்ற கருத்துக்கள், தருகின்ற கருத்துக்கள், உலவுகின்ற தரம்தானே நமக்குத் தேவை!

'புதிய வார்ப்புகள்' புத்தகம் ஏழு கதைகளைத் தாங்கி உலவுகிறது. அக்கதைகளுக்கு மகுடம் வைத்தாற்போல் ஒரு சிறந்த கதையை முதன்மையான கதையை முதலில் இடம் பெற வைத்திருக்கிறார்கள். அது 'புதிய வார்ப்புகள்'....

இது கதை:

'இந்து-வேணு' — உலகம் தோன்றிய நாள் முதல் இன்றுவரை அங்கீகரிக்கப்பட்டு நிராகரிக்கப்பட்டு வரும் 'காத'லில் சிக்குண்டவர்கள். காதல் காந்தத்தால் ஈர்க்கப்பட்ட இந்துவைக் கோப வெறி கொண்ட தந்தை ராமபத்திரன் தம் வீட்டில் சிறை வைக்கிறார். நடைப்பிணமான அவளைத் தேடி அவள் நாயகன்—அவள் தகப்பனாரால் சிறை சென்று மீண்ட வேணு — வருகிறான். இந்துவைச் சந்தித்து ஆறுதல் கூறிச் செல்வதற்காக வருகிறான். காலம் பொய்த்தனவேயொழியக் காதல் பொய்க்காத அவர்களின் சமர்ப்பணங்களால் தன் பெற்றோரை வெறுத்து இந்து வேணுவோடு வெளிக் கிளம்புகிறாள். தாய் குஞ்சம்மாள் இந்த 'அஞ்சாமையை'த் தனக்குள்ளேயே வெறுத்தாலும் இதயபூர்வமாக அவர்களை வாழ்த்தி அனுப்புகிறாள். புதிய பிறவிகளாக — சுதந்திரப் பறவைகளாக அவர்கள் கட்டவிழ்த்துப் பறக்க விடப்படுகிறார்கள்.

கதை என்றால் அதன் வெளிச் சுவர்கள், வெளி வட்டம் இவ்வளவுதான்! ஆனால் 'இந்தக் கதைக்குள்ளேயே உலகானுபவங்களைப் புகுத்திவிட முடியுமா என்ன?' என்ற ஐய வினாவுக்குச் சவால் விடுகிறார் ஜெயகாந்தன். முடியும் என்று நிரூபித்துக் காட்டுகிறார் அவர்.

குஞ்சம்மாள் உள்ளார்ந்த சம்மதத்தோடு அவர்களுக்கு விடை கொடுக்கிறாள்.

இதை ராமபத்திரன் என்ற உலோகம் தாங்குமா? என்ற கேள்விக்கு ஜெயகாந்தன் பதில் தருகிறார்:

''மனிதனே ரொம்பப் பழைமையான உலோகம்தான். காலம்தான் அவனைப் புதிது புதிதாக வார்க்கிறது. வாழ்க்கையின் அந்த நிர்ப்பந்தத்துக்கு முடிந்தவர்கள் வளைகிறார்கள். வளைய முடியாதவர்கள் நொறுங்குகிறார்கள்.

''வளைந்தாலும் சரி, உடைந்தாலும் சரி, காலம் புதிது புதிதாய் மனிதனை வார்த்துச் செல்கிறது. அந்தக் குடும்பம் வாழ்க்கையின் வார்ப்புக்கேற்ப வளைந்திருக்கிறதா நொறுங்கி இருக்கிறதா? அல்லது இரண்டுமே நிகழ்ந்திருக்கிறதா?

''டாக்டர் வந்த பின் தெரியும்!''

—ஆம்! எழுத்துலகில் ஜெயகாந்தன் ஒரு புதிய வார்ப்பு. அவர் நடை புதியது, சொல் புதியது, தருகின்ற தரம் புதியது, தீர்க்கின்ற தாகம் புதிது! —இளசை அருணு

பிரசுரம்: மதுரை, மீனுட்சி புத்தக நிலையம்

## ஆற்றின் மோகம்

ராஜாஜி எழுதிய இப்புத்தகத்தில் இடம் பெற்றுள்ள தலைப்புக்களில் 'அச்சமின்மை தரும் நாணம்' என்ற தலைப்பின் கீழ் கூறப்பட்டுள்ள உயர்ந்த தத்துவங்களே என் மனத்துக்குப் பிடித்தவை. அந்தத் தத்துவங்களின் சுருக்கம் இதுதான்: ''வேதாந்தமே நாட்டு மக்களின் ஆணி வேர்; வேதாந்தத்துக்கு முதல்நூல் உபநிஷத்து: பிரபந்தங்கள்வேதாந்தத்தைப் பல வழிகளால் விளக்குகின்றன. ஞானத்துக்கு முதற் படி நான் வேறு, தேகம் வேறு என்பதை உணர வேண்டும். இதை உணர்ந்தால் வேதாந்த வாழ்க்கை தோன்றும்; உண்மையைக் காண அறிவும் ஆராய்ச்சியும் போதாது: நற்குணமும் சீலமும் வேண்டும். உலகம் உண்மையே; உலகம் பொய்யல்ல. ஒரே ஆத்மாவானது பலவிதமான உடல்களைப் பல பிறவிகளில் தரிக்கிறது. பரம் பொருளை அடைவதே மோக்ஷம். உண்மையை விட்டுத் தூர விலகாமல் அதை அணுகுவதே விடுதலைக்கு வழி; வினையும் பயனுமாக நடைபெறுவதே விதி; சுபாவ குணங்களை வென்று விடுதலைக்கு வேண்டிய முயற்சி செய்தால் ஆத்ம சுதந்திரம் கிடைக்கும். ''ஐயமுண்டு பயமில்லை மனமே.'' இத்தகைய கருத்துக்களைத் தன்னகத்தே கொண்டு விளங்கும் இப்புத்தகம் எனக்கு, ஏன், யாவருக்கும் பிடித்தமானது என்பதில் ஐயமில்லை.

—சா. இராஜகோபால்

பிரசுரம்: பாரதி பதிப்பகம், சென்னை—17

**பரிசு பெறும் விமர்சனங்கள் :**

**முதல் பரிசு ரூ. 30**

**அழியாக் கோலம் – வை. ரங்கநாதன்**

---

**இரண்டாம் பரிசு ரூ. 20**

**புதிய வார்ப்புகள் – இளசை அருணு**



## பொன் விலங்கு

பொன் விலங்கு கல்கி வாசகர்களுக்கு அறிமுகமான கதை என்பதோடு கருக்கமான விமர்சனம் என்ற வார்த்தைகளும் என் கைகளுக்கு இதன் கதையைச் சொல்ல விலங்கிடுகின்றன.

கடுங்கோடையில் ஈர மணல் காலடியில் குறுகுறுக்க, தென்னங் கீற்றுப் பந்தலில் நிழ் நின்று விளாமிச்சை வேர் மணக்கும் குளிர்ந்த நீரைக் குடிப்பதிலுள்ள சுகம்தான் திரு மணிவண்ணனின் இந்நாவலைப் படிக்கும் போது ஏற்படுகிறது.

இக்கதையிலும் காதல் வருகிறது. ஆனால் அது கடற்கரைக் காதலாகவோ, சினிமாக் கொட்டகைக் காதலாகவோ, ஒரே கோப்பையில் உள்ள 'ரோஸ் மில்க்'கை உறிஞ்சிக் குடிக்கும் ஹோட்டல் காதலாகவோ இல்லாமல் உயர்ந்த பண்பான காவியக் காதல் தான் இந்நாவலில் இடம் பெறுகிறது. கதா நாயகனும், நாயகியும் பத்தே பத்து முறைகள்தான் சந்தித்துப்பேசியிருக்கிறார்கள்.

மேலும் நாவல் முழுதும் சிறந்த மேற்கோள்கள் நட்சத்திரங்கள் போல் சுடர் விடுகின்றன. 'யாயும் ஞாயும் யாராகியரோ?' என்ற குறுந்தொகைப் பாடலிலிருந்து பாரதியார், தாகூர், கீட்ஸ், பைரன் போன்ற உயர்ந்த அறிஞர்களின் கருத்துக்கள் நம்மை மகிழ வைக்கின்றன.

மோகினி சத்தியமூர்த்தியிடம் கொண்ட அன்பைத் தெரிவிக்கும்போது கூறிய உணர்ச்சி மயமான வாக்கியங்கள் மனத் திரையில் அழியா இடம் பெற்றுவிட்டன. கோயிலில் இருவரும் சந்தித்தபோது அவனிடம் ''ஆதரவற்றது எல்லாம் ஏழைதான். ஆதலால் உண்மையும் ஏழையாயிருப்பதில் தவறில்லை'' என்று கூறிய உறுதியும்,

''இந்த வீட்டில் நீங்கள் எடுத்து வாசிப்பதற்காகவே பரிசுத்தமான வாத்தியம் இதோ இருக்கிறது'' என்று கூறிய தூய்மையும்,

முருகன் படத்துக்குச் சூட்டிய மாலை அவன் கழுத்தில் விழுந்துவிட்டவுடன் ''அதை எங்கே போடவேண்டும் என்று நான் விரும்பினேனோ அங்கேயே விழுந்துவிட்டது'' என்று கூறிய அன்பும்,

அவன் மதுரை ஆஸ்பத்திரியில் அடிபட்டுக் கிடந்தபோது, ''நான் மானசீகமாக உங்களுக்கு வாழ்க்கைப்பட்டு விட்டேன். சாகும் போது உங்கள் மனைவியாகவே சாவேன்'' என்ற கற்புத் திண்மையும் நம்மை மெய் சிலிர்க்க வைக்கின்றன.

மோகினியின் சிதையில் பூவும் மஞ்சள் குங்குமமும் போட்டுவிட்டு நின்ற சத்திய மூர்த்தியின் கால்களில் நெருப்புத் துண்டம் ஒன்று வந்து விழுந்து சுட்டபோது படிப்பவர் இதயங்களையும் அது சுட்டு விடுகிறது.

— எஸ். இந்திரா

வெளியிட்டவர்: வள்ளுவர் பண்ணை
சென்னை—35

## பொன் மலர்

பொன்னால் உருவாக்கப் பெற்ற புதுமலர் டாக்டர் சங்கரி. பொன் இல்லாவிட்டால் அவள் படித்திருக்கவோ, டாக்டராகி யிருக்கவோ, சுயமாக இயங்கி யிருக்கவோ முடியாது. பணத்தின் அருமை — பணத்தின் வலிமை — பணத்தின் பெருமை யாவும் அவளுக்கு நன்றாகத் தெரியும்.

அவ்வாறே அதன் சிறுமைகளையும், கொடுமைகளையும், வைதாரித்தனங்களையும் பழக்கத்தால் அறிந்து கொண்டவள் அவள். இன்றைய சமூகத்தின் பயங்கரத் தொத்து வியாதியான பேராசைப் பேயுடன் அவள் தனித்துப் போராடத் துணிந்து விட்டாள்.

அழுகிக் கிடக்கும் இன்றைய சமுதாயத்தின் மன வளர்ச்சிக்கு மிகவும் தேவையான டானிக் இந்த நவீனம். மனிதத் தன்மைக்கும் மனிதனிடமுள்ள விலங்கு உணர்ச்சிகளுக்கும் நடைபெறும் நிரந்தரமான போரில் மனிதத் தன்மையின் சார்பில் நின்று போராடி வருபவர்கள் இலக்கியவாதிகள். இந்நேர்மைப் போராட்டத்தில் திரு அகிலன் அவர்கள் பெற்ற வெற்றியின் சின்னமே 'பொன் மலர்'.

கதாம்சத்திலும் வலுவான பாத்திரப் படைப்பிலும் இந்த நவீனம் ஒப்புயர்வற்றதாகத் திகழ்கிறது.

''நாங்கள் வாழவில்லை; வாழ்வதாக நடிக்கிறோம். துன்பத்தை ஐந்து நிமிஷங்கள் மறக்க

---



பல் பிடுங்கும் வைத்தியர் :

**''நீங்க என்ன கேலிச் சித்திரக்காரரா?''**

**''ஆமாம்!''**

**''அப்ப நீங்கள் எங்களைச் சித்திரிக்கிற மாதிரியே உங்க பல்லை நான் இப்ப பிடுங்கப் போறேன்!''**

---

தினைத்தோம், அதன் பலன்தான் இது'' என டாக்டர் சங்கரியிடம் விரக்தியுடன் கூறும் ஏழைத் தாயின் சோகத் தவிப்பை—ஏழைமையில் தாய்மை எய்திய அவளது நிர்ப்பந்த சந்தோஷத்தை — ஆசிரியர் படம் பிடித்துக் காட்டும் விதம் கண்ணீரை வர வழைக்கிறதே !

''காசுக்காக ஆண்கள் செய்யும் ஆன்ம விபசாரம் அருவருக்கத்தக்க அளவுக்கு வளர்ந்து விட்டது. இது பயங்கரமான தொத்து நோய்'' என்கிறார் நாவலாசிரியர்.

உண்மையில் இந்நூல் பணத்தின் பெருமையைப் பேச வந்த நாவல். பணத்தின் வலிமை-பணத்தின் செழுமை — பணத்தின் அருமை இதை ஒவ்வொருவரும் உணர வேண்டும் என்பதைக் கூறும் நவீனம்.

எந்த வெற்றிக்கும் அடிப்படை பணம்.

''பணத்தைக் கொண்டு பணம் பண்ணும் திருமூர்த்தி, பணத்துக்கு இன்னொரு பெயர் நாணயம் என்பதை மறந்தே விட்டான்!

''பணம் என்பது திருமகளின் தூயசக்தி. அது இருந்தாலே உலகத்தில் நீ விரும்பும் நற்பணிகளைத் தடையின்றிச் செய்ய முடியும். அதிகமாக உழைத்து நியாயமான வழியில் பொருள் தேடு. எதிலும் சிக்கனமாக இரு.

''மன வளர்ச்சி பெறாதவர்களிடமுள்ள பொருள் வளர்ச்சி சமுதாயத்தைக் கெடுக்கக் கூடியது. திருமகள் குலமகள்—அவளை விலைமகளாகக் கருதுவோரிடம் விழிப்புடன் இரு.''

இவை போன்ற மணிவாசகங்கள் வாழ்க்கைக்கு எத்துணை இன்றியமையாதவை!

பணத்தைப் பற்றியும் உடலைப் பற்றியும் இந்நூலில் ஒழுக்கத்தோடு சிந்திக்க வைக்கிறார் ஆசிரியர் திரு அகிலன். இதுவே அவரைச் சூழ்ந்துள்ள சமுதாயத்துக்கு அவர் செய்யும் அன்புப் பணி.

பொன்னுக்குரிய கடின உறுதியும் மலருக்குள்ள மென்மையும் ஒருங்கே இணைந்த ஒப்பற்ற பாத்திரம் டாக்டர் சங்கரி. பொன்னின் பயனும் மலரின் தூய்மையும் கலந்த மங்கை அவள். பொன்னின் ஒளியும் மலரின் நறுமணமும் ஒன்றாய்க் கலந்த செந்திரு.

இலக்கிய உலகத்தில் காலத்தின் தேவையைப் பூர்த்திசெய்யும் இந்த நவீனம், ஒப்பற்றதொரு பொன் மலர் !

— எஸ். பெருமாள்

பொற்கொடி வெளியீடு. விற்பனை உரிமை: பாரி புத்தகப் பண்ணை, சென்னை — 5.

## தேன் மழை

அருமையான தொண்ணூறு கவிதைகளைக் கொண்ட கவிஞர் சுரதாவின் தேன் மழை ஓர் அழகான கவிதை நூல். தேன் மழையில் எளிமையான வார்த்தைகளைக் கொண்டும் பொருத்தமான உவமைகளைக் கொண்டும் பாமாலைகள் கட்டப்பட்டுள்ளன. பதினாறு பெரும் தலைப்புக்களில் தொண்ணூறு கவிதைகள் தெவிட்டாத தேனாகத் திகழ்கின்றன.

ஒவ்வொரு கவிதையிலும் கவிஞரின் சொல்லாட்சியும் தமிழ்ப் புலமையையும் நன்கு காண முடிகிறது. காரணப் பெயர்கள் என்ற தலைப்பில் அசோகனது பெயருக்குக் காரணத்தைக் கவிதையில் வடிக்கிறார் கவிஞர்:

> சோகம் என்றால் துயரமென்பது பொருள்
> சோகந் தருவோன் சோகன் அவ்வாறு
> சோகந் தராதவன் அசோகன் ஆவன்

திரு வி. க.வைப் பற்றி.....

> எழுத்தினில் இனிமை வைத்தார்
> எண்ணத்தில் விருந்து வைத்தார்

எனச் சொல்கிறார். மேலும்,

> காதலைத் தேடுமுன் கவித்தொகை தேடு
> கற்பனை வேண்டுமெனில் கம்பனை நாடு...

என்னும் வரிகளைப் படிக்கும் போது கம்பனையும் கவித்தொகையையும் மனம் உண்மையாகவே நாடுகிறது. ''இன்பம்'' என்று சிலவற்றைக் கவிச் சுவையோடு கூறுகிறார்:

> பழந்தமிழ் கற்றல் இன்பம்
> பலநாடு சுற்றல் இன்பம்
> எழுந்திரு புதுமை தன்னை
> ஏற்றிடல் வாழ்வுக் கின்பம்

''தேன் மழை''யில் நிறைந்து கிடக்கும் கவிதைகளுள் 'இதோ சிறந்த கவிதை' எனத் தேர்ந்தெடுப்பது கடினம். ஒவ்வொரு கவிதையும் ஒவ்வொரு விதத்தில் சிறப்புடன் விளங்குகிறது. தேன் மழையில் நீங்கள் எப்படிப்பட்ட கவிதைகளை எதிர்பார்க்கிறீர்களோ, அப்படிப்பட்ட கவிதைகளை ருசிக்கலாம்.

— க. ரவீந்திரன்

பிரசுரம்: சேகர் பதிப்பகம், சென்னை—1.

## இதுவன்றோ பண்பாடு !



பிரெஞ்சுக்காரர் ஒருவர் கடனில் மூழ்கிப் போனார். தம்முடைய உடைமைகள், புத்தகங்கள், கலைப் பொருள்கள் எல்லாவற்றையும் விற்றுக் கடனை அடைப்பதில் அவர் முனைந்திருந்தபோது நண்பர் ஒருவர் அவரைப் பார்க்க வந்தார்.

வீட்டை ஒருமுறை சுற்றிப் பார்த்த நண்பர், 'எதற்காகப் பீப்பாய் பீப்பாயாக மதுவை வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? அவற்றையும் விற்றுத் தீர்த்தால் நிறையப் பணம் கிடைக்குமே?' என்று யோசனை தெரிவித்தார்.

'நன்றாக இருக்கிறதே நீங்கள் சொல்வது? ஆயிரம்தான் நஷ்டம் வந்தாலும் நம் பண்பாட்டை விற்கலாமோ?......சேச்சே!' என்று பதிலளித்தார் அந்தப் பிரெஞ்சுக்காரர்!

—எஸ். வி.

## அக்பரும், புகையிலையும்

அக்பர் புகையிலையை வெறுத்தார். ஆனால் அவருடைய மந்திரி பீர்பால் புகையிலை போடுவதை மிகவும் விரும்பினார்.

அக்பர் ஒரு நாள் பீர்பாலோடு உரையாடிக் கொண்டிருந்தார். அப்போது கழுதை ஒன்று குப்பை மேட்டில் எதை எதையோ சாப்பிட்டுக் கொண்டிருந்தது. ஆனால் அதில் கிடந்த புகையிலைத் துண்டை மட்டும் தொடவில்லை.

இதைக் கண்ட அக்பர் குத்தலாக பீர்பாலிடம் கூறினார்: ''பார்த்தீர்களா இந்தக் கழுதைகூடப் புகையிலையைத் தீண்ட மாட்டேன் என்கிறது.''

உடனே பீர்பால் ''கழுதைக்குத்தான் புகையிலை பிடிக்காது!'' என்றார்.

தி. குமாரராக.





## ஏன் அழ வேண்டும்?

என் தங்கைக்கு மூன்று வயது இருக்கும். இப்பொழுதுதான் பேச ஆரம்பித்திருக்கிறாள். போன வாரம் நான் அவளைத் தூக்கி வைத்துக் கொண்டிருந்தபோது திடீரென்று என் மூக்குக் கண்ணாடியைப் பிடித்து இழுத்தாள். நான் உடனே, ''ஐயோ, கண்ணாடி!'' என்று கூச்சலிட்டேன். அதற்குள் அவள் கண்ணாடியைக் கீழே போட்டுவிடாதபடி என் தம்பி அதைப் பிடுங்கிக் கொண்டான். ''நல்ல காலம், மாதக் கடைசியும் அதுவுமாகக் கண்ணாடி உடைந்திருந்தால் வேறு கண்ணாடிக்கு யாரிடமாவது கடன் வாங்கிப் பதினைந்து ரூபாய் அழவேண்டும்'' என்று கூறினேன். சற்று நேரம் கழித்து என் தங்கை மழலை மொழியில், ''எதற்குப் பதினைந்து ரூபாய் அழவேண்டும்? பதினைந்து ரூபாய் சிரிக்கக் கூடாதா?'' என்றாள் சந்தேகத் தொனியில்.

ஆர். பாண்டுரங்கன்




**பொன் மொழி**

இன்றைய பைத்தியக் காரத் தனத்துக்குக் காரணமாக இருப்பது நேற்றைய நிகழ்ச்சிகள். நாளைய மௌனம், தோல்வி, மனச் சோர்வு அல்லது வெற்றி எல்லாமே நேற்றில் அடங்கியவைதான்.

- உமர்கய்யாம்

## மகனே, மறந்தாயோ?

தனது மகனது இருபத்தோராவது பிறந்த நாளன்று வாழ்த்துத் தெரிவிக்க விரும்பிய தாய் இரவு இரண்டு மணிக்கு டிரங்கால் மூலம் தன் ஆசிச் செய்தியைக் கூறினாள். தூக்கம் கலைந்த மகன் ஆத்திரத்தில், ''வாழ்த்துச் சொல்ல உனக்கு இரவு இரண்டு மணிதானா அகப்பட்டது? இந்த வேளையில் ஏன் தொல்லை கொடுக்கிறாய்?'' என்று கேட்டான்.



அதற்குத் தாயார், ''இருபது வருடங்களுக்கு முன்னால் நீயும் எனக்கு இந்த வேளையில்தானே தொல்லை கொடுத்தாய்!'' என்று விடையிறுத்தாள்.

- தமிழ்நாவரசன்

## தேசிய முத்திரை !

இரண்டாவது உலகப் போர் நிகழ்ந்த காலத்தில் ஒரு கப்பல், குண்டுத் தாக்குதலுக்கு இலக்காகிக் கடலில் மூழ்கி விட்டது. அந்தக் கப்பலிலிருந்து உயிருடன் தப்பிய எட்டு நபர்கள் மாத்திரம் நீந்திப் போய் அருகில் உள்ள ஓர் அனாமதேயத் தீவில் கரை ஏறினார்கள். அவர்களில் இருவர் இங்கிலாந்தைச் சேர்ந்தவர்கள். இருவர் ஆஸ்திரேலியர்கள். இருவர் பெல்ஜிய நாட்டினர். மற்ற இருவர் அமெரிக்கர்கள்.

யுத்தம் முடிந்த சமயத்தில் அந்தத் தீவின் மீது எதிர்பாராமல் பறந்து சென்ற விமானம் ஒன்று அவர்களை மீட்கும் நோக்கத்துடன் கீழே இறங்கியது. அந்த விமானி கண்ட காட்சி இதுதான்:



இரு அமெரிக்கர்களும் கூட்டுச் சேர்ந்து அந்தத் தீவைப் பங்கிட்டு எப்படி வீடு கட்டும் மனைகளாக விற்பனை செய்யலாம் என்று ஒரு கார்ப்பொரேஷன் தொடங்கியிருந்தார்கள். அதற்கான மூலதனம் கொடுக்க பெல்ஜியக்காரர்கள் சம்மதித்திருந்தார்கள். இரு ஆஸ்திரேலியர்கள் குதிரைப் பந்தய மைதானத்தை எங்கு நிர்மாணிக்கலாம் என்று திட்டமிட்டுக் கொண்டிருந்தார்கள்.

அந்த இரண்டு பிரிட்டிஷ்காரர்கள் மாத்திரம் பரஸ்பரம் யாரும் அறிமுகப்படுத்தி வைக்காத காரணத்தால் வெவ்வேறு திசைகளைப் பார்த்துக் கொண்டு ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தார்கள் !



## "திருடினுயா? பாதுகாப்புநிதிக்குப் பணம் கொடு!"

நாட்டில் உள்ள நெருக்கடி நிலைமையை உத்தேசித்து, கொலை, கொள்ளைகளில் ஈடுபடுவதில்லை எனத் தீர்மானித்திருக்கிறது ஒரு கூட்டம். இவர்கள், பிஜ்னோர் ஜில்லாவில் உள்ள பகர்பூர் கார்ஹி கிராமத்தில் வசிக்கும் 'நட்' என்னும் 'குற்ற பரம்பரை'யைச் சேர்ந்த ஆதிவாசிகள். எவராவது இந்தத் தீர்மானத்தை மீறினுல் என்ன தண்டனை தெரியுமா? மீறும் நபர், தேசியப்பாதுகாப்பு நிதிக்கு ஐந்நூறு ரூபாய் கட்டாயமாகக் கொடுக்க வேண்டும்!

ஆதாரம் : பயனீர் தகவல் : என். சீனிவாசன்

"சுரேஷ்! நாம் இன்னும் எத்தனை நாட்களுக்கு ஒருத்தருக்கும் தெரியாமல் பீச்சிலேயும், சினிமாவிலேயும், ஹோட்டலிலேயும் சந்தித்துக் கொண்டிருப்பது? இதற்கு ஒரு முடிவு கட்ட வேண்டாமா?"

"எங்கப்பா, எனக்கு ஒரு நல்ல இடத்தில் பெண் பார்த்திருக்கிறார். அந்தக் கல்யாணம் ஆன உடனே இதற்கு முடிவு ஏற்படும். கவலை வேண்டாம், கண்ணே!"



## இடம்தானே வேண்டும்!

இரங்கூன் எக்செல்சியர் திரைப்பட அரங்கில் உதயசங்கரின் நடனம். உதய சங்கர் நடனம் என்றால் கேட்பானேன்? ஏராளமான கூட்டம். கொட்டகையிலுள்ள நாற்காலிகளின் எண்ணிக்கைக்கு மேலாகவே சீட்டு விற்று விட்டார்கள். ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்த ஒரு வங்காளி இளைஞர் ஏதோ ஒரு வேலையாகத் தியேட்டரின் ஒருபுறத்தேயுள்ள வெளித் திண்ணைக்குச் சென்றார். அவர் சென்றதுதான் தாமதம். புதிதாக வந்த ஒருவர் அந்த நாற்காலியில் அமர்ந்தார். சிறிது நேரம் கழித்து அந்த வங்காளி இளைஞர் திரும்பி வந்த போது, அதில் வேறொருவர் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தார். எவ்வளவோ கூறியும் அவர் நகருவதாகக் காணோம். சண்டை வலுத்தது. நாற்காலியில் உட்கார்ந்திருந்தவர் அந்த இளைஞரைப் பார்த்து, 'உமக்கென்ன வேண்டும்?' என்று கேட்டார்.



'எனக்கு நீர் உட்கார்ந்திருக்கும் இடம் வேண்டும்' என்றார் இளைஞர்.

'இடம்தானே வேண்டும்? வேறொன்றும் வேண்டாமே?' இப்படிக் கேட்டுவிட்டு, உட்கார்ந்திருந்தவர் எழுந்து தமது நாற்காலியைத் தூக்கித் திரைப்படக் கொட்டகையின் சுவர் ஓரத்திலுள்ள வேறு இடத்தில் போட்டுக்கொண்டு உட்கார்ந்து விட்டார். பிறகு அவர் அந்த வங்காளி இளைஞரைப் பார்த்து, 'நண்பரே, தங்கள் இடம் காலியாக இருக்கிறது. அன்புகூர்ந்து தாங்கள் பயன்படுத்திக் கொள்ளலாம்' என்றார். அந்த வங்காளி இளைஞரின் முகத்தைப் பார்த்துச் சிலர் அனுதாபப்பட்டனர். சிலர் நகைத்தனர்.

ஆதாரம்: உலகம் சுற்றும் தமிழன்
— தகவல் : அடந்தை பாண்டியன்

## 'சிக்கெனப் பிடித்தேன்...'

'நியூ யார்க்கர்' பத்திரிகையின் ஆரம்ப காலத்தில் அதன் உதவி ஆசிரியர்களில் ஒருவராக இருந்தவர் டோரதி பார்க்கர். அந்தக் காலத்தில் பத்திரிகையின் நிர்வாகச் செலவுகளில் மிகுந்த சிக்கனத்தைக் கடைப்பிடித்து வந்தார் அதன் ஆசிரியர்.

ஒரு நாள் ஆசிரியர் எங்கேயோ சுற்றி விட்டு ஒரு ஹோட்டலுக்குள் நுழைந்த போது டோரதி பார்க்கர் தம் சிநேகிதிகள் நால்வருடன் அங்கே அரட்டை அடித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதைக் கண்டார். நேரே டோரதி பார்க்கரிடம் வந்தவர், "என்ன இது, ஆபீசுக்குப் போய் வேலை பார்க்காமல் இங்கே இப்படி வெட்டிப் பொழுது போக்குகிறீர்களே!..." என்று கடிந்துகொண்டார்.

"இல்லை. நான் ஆபீசுக்குத்தான்போயிருந்தேன், ஒரு கட்டுரை எழுதலாமென்று. ஆனல் ஆபீஸ் பென்சிலை வேறு யாரோ உபயோகப் படுத்திக் கொண்டிருந்தார்கள். அதனுல் தான் அப்புறம் பார்த்துக் கொள்ளலாமென்று வந்து விட்டேன்!" என்று பதிலளித்தார் டோரதி! —எஸ். வி.



# வீரசாவர்க்கர்

**என். பி. கரே**

மூந்நூறு ஆண்டுகளுக்குமுன் மொகலாயர்களின் பிடியிலிருந்து பாரதத்தை விடுவிக்கவும் இந்து தர்மத்தைக் காப்பாற்றவும் மகாராஷ்டிரத்திலே ஒரு ஜீவன் உதயமாயிற்று. அன்னை பவானியின் ஆலயத்திலே, அவள் திருவடியிலே அமர்ந்து அதற்காக வீர சபதம் எடுத்துக் கொண்டது. அது மட்டுமல்ல; இருபது வயதுக்குள்ளே தாரணக் கோட்டையைத் தன் வசப்படுத்தியும் கொண்டது. அந்த ஜீவனின் பெயரைக் கேட்டாலே இந்தியனின் உடலிலே வீரம் பீறிட்டுக் கொண்டு கிளம்பும். தோல்வியே காணாத சூழ்ச்சியே வாழ்வாக வாழ்ந்த ஆலம்பரு ஔரங்கசீப்பின் நிம்மதியைக் குலைத்த அந்த மாவலி வீரன், மகாராஷ்டிர ஜீவன் சத்ரபதி சிவாஜி மறுபடி இந்தப் பாரத பூமியில் பிறந்தார்! ஏன்?

அன்னியரின் பிடியில் இன்னமும் தன் அரமை நாடும் அன்னை பவானியும் அடிமைப்பட்டுக் கிடப்பதைக் கண்டு மனம் பொறுக்கவில்லை சத்ரபதி சிவாஜிக்கு. ஆகவே மறுபடியும் தன் தாய் நாடான மகாராஷ்டிரத்திலே அந்தணர் குடும்பத்திலே வந்து அவதரித்தார் அவர். ஏற்றமிகு இந்திய நாட்டை—மக்களை — அந்நியர்கள் அடிமைகளைப் போல நடத்தி ஆளுவதைக் கண்ட அவர் துர்க்கையின் ஆலயத்துக்குப் போய் நாட்டு விடுதலைப் போராட்டத்தில் தனது உடல், பொருள், ஆவி அனைத்தையும் அர்ப்பணம் செய்வதாகச் சபதம் செய்தார். பாரதத்தின் விடுதலையைப் பெறுவதற்குப் போராடுவதற்காக ஒரு ரகசிய சங்கத்தையும் ஸ்தாபித்தார்.

சாவர்க்கர் என்று பெயர் கொண்ட இந்தத் தீரர், வீர சிவாஜியின் வழித் தோன்றலல்லவா? விடுதலைப் போராட்டத்தின் எந்தக் கட்டத்திலும் இந்த இளைஞர் முதல்வராக நின்றார். சுதேசி இயக்கத்தில் அந்நியத் துணிகளை அம்பலத்தில் கொளுத்திய முதல் மாணவர் சாவர்க்கர்தான். அதற்காக பெர்குஸன் கல்லூரியிலிருந்து வெளியே அனுப்பப்பட்டார். பி. ஏ. பட்டத்தைப் பெறச் சாவர்க்கர் தகுதி பெற்று விட்டிருந்த போதிலும் பம்பாய் சர்வகலாசாலை அதனை அவருக்குக் கொடுக்க மறுத்தது. அதற்கு முன்னால் இப்படி ஒரு விநோதம் இச் சர்வ கலாசாலையின் சரித்திரத்திலேயே நடந்ததில்லை! அது மட்டுமா? 'பாரிஸ்டர் அட் லா பட்டம்' வாங்கத் தகுதி பெற்றும் அரசாங்கம் அவருக்கு அதைத் தருவதற்கு மறுத்தது. 1857ம் ஆண்டு இந்திய மக்களின் இதயம் விடுதலை வேண்டி எரிமலையாகக் குமுறி வெடித்தது. முதல் முழக்கமிட்டதன் நினைவாக அந்த நாளைத் திருநாளாகக் கொண்டாடிய முதல் இந்திய தேசபக்தர் இவர்தான். அதுவும் எங்கே? சிங்கத்தின் குகைக்குள்ளேயே. ஆங்கில ஆட்சியின் தலைமைப் பீடமான லண்டனிலே! 1907ம் ஆண்டு. இத்தகைய துணிச்சல் மிக்க இவரை அரசாங்கம் சும்மா விட்டு வைக்குமா? இரண்டு முறை ஆயுள் தண்டனை அடைந்த முதல் இந்தியப் புரட்சிக்காரர் இவர்தான். புரட்சிக்காரர் என்று லண்டனில் கைதாக்கப்பட்ட சாவர்க்கரை விசாரணை செய்ய இந்தியாவுக்கு அழைத்து வந்தார்கள். வீரத்தின் விளைநிலமான இவர் அந்த நிலையிலும் தம் சாகஸத்தைக் காட்டத் தவறவில்லை. கப்பல் மார்ஸேல்ஸ் அருகே போய்க் கொண்டிருக்கும்போது காவலர்களின் கண்ணிலே மண்ணைத் தூவி விட்டுக் கப்பலிலிருந்து கடலில் குதித்து நீந்தியே சென்று பிரெஞ்சு நாட்டின் மண்ணிலே கரையேறினார். ஆனால் சட்ட விரோதமாக பிரிட்டிஷ் போலீஸார் பிரெஞ்சு நாட்டில் இருந்த சாவர்க்கரைக் கைது செய்தனர். இது விஷயம் சர்வதேச நீதி மன்றத்துக்குக் கொண்டு வரப்பட்டபோது, முதன் முதலாக இந்திய விடுதலை பற்றிய செய்தி உலக மக்களின்



கவனத்துக்கும் கொண்டு வரப்பட்டது. ஐரோப்பாவில் இந்திய விடுதலைக்கான புரட்சிகளைப் பரவச் செய்த முதல்வர் சாவர்க்கர் தான். இவரது தோழரான மதன்லால் டிங்ரே, இந்திய விடுதலைக்கு வைரியாக இருந்த ஸர் கர்ஸன் வைலி என்ற ஆங்கிலேயரைச் சுட்டுக் கொன்றார். இந்திய நாட்டிலா? இல்லை. லண்டனிலேயேதான். டிங்ரேயின் இந்தத் துணிகரச் செயலைக் கண்டித்து ஒரு பொதுக் கூட்டம் நடந்தது. அதில் டிங்ரேயின் துணிச்சலைக் கண்டிக்கும் தீர்மானங்கள் கொண்டுவரப்பட்டன. அப்போது சாவர்க்கர் அந்தத் தீர்மானங்களைத் துணிவோடு எதிர்த்தார். அந்த விஷயம் நீதி மன்றத்தில் இருக்கும்போது, டிங்ரே குற்றவாளி என்று ருசுப்பிக்கப்படாதபோது அவர்மீது கண்டனத் தீர்மானம் கொண்டு வருவது சட்ட விரோதம் என்று வாதாடினார். இந்தச் செயலுக்காகச் சில ஆங்கிலேயர்களால் அவர் தாக்கப்பட்டுச் சித்திரவதைக்குள்ளானார். இந்த நிலையிலும் தம் உறுதியைத் தளர்த்தவில்லை. பணிந்து போகவில்லை. இந்த அதிசய மனிதரின் மற்றொரு சகாவான சேனாபதி பாபட்லால் வெடிகுண்டுகள் செய்வதில் வல்லவர். தேசியப் புரட்சியின் போது அலிபூர் வெடிகுண்டு வழக்கில் இந்த வல்லவரின் பெயர் ஒரு சாட்சியினால் கூறப்பட்டிருக்கிறது. இந்தத் திறமைசாலி பாபட்லாலை இந்தக் காரியத்துக்குத் தேர்ந்தெடுத்துச் செயல்படுத்தியது யார்? இந்திய தேசிய விடுதலைப் புரட்சி இயக்கத்தின் ஆணி வேராக இயங்கிய வீர சிவாஜியின் மறு பிறப்பான தீரர் சாவர்க்கர்தான். லண்டனில் உள்ள இந்தியா மாளிகையின் பிரதான புருஷராக இருந்து கொண்டே புரட்சிக்குப் புத்துயிரூட்டி வந்தார்.



விடுதலை பெற்ற பாரதத்தின் சரித்திரத்தை எழுதும் போது வீர சாவர்க்கரின் பெயரை அதில் பொன்னெழுத்துக்களால் பொறிக்க வேண்டும். அத்தகைய சாகஸங்கள் நிறைந்தது அவரது வாழ்க்கை. அரசியலில் மட்டும்தானா? சமூக வாழ்விலும் சாவர்க்கர் செய்துள்ள சாதனைகள் தனித்தன்மை வாய்ந்தவை. ஜாதிப் பாகுபாட்டையும், தீண்டாமையையும் வெறுப்பவர் சாவர்க்கர். அந்தமானிலிருந்து இவரை விடுதலை செய்ததும் ரத்னகிரியை விட்டு பம்பாய் அரசாங்கத்தின் அனுமதி இல்லாமல் எங்கும் போகக் கூடாது என்று தடை விதிக்கப்பட்டது சாவர்க்கருக்கு. இருந்த போதிலும் இந்த வீரர் சோம்பிக் கிடக்கவில்லை. சமூக சேவைக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டார். ஜாதி பேதம்,





தீண்டாமைக் கொடுமை ஆகியவைகளின் அடித்தளத்தையே அசைத்து ஆட்டம் கொடுக்கும்படியான காரியங்களைச் செய்யலானார் சாவர்க்கர். ரத்னகிரியில் பாழடைந்து கிடந்த பாகோஜி கீர் என்ற ஆலயத்தைப் புதுப்பித்துக்கட்டி அதற்கு 'பதிதபாவன மந்திர்' என்று பெயர் இட்டு அங்கு ஜாதி இந்துக்களும் தாழ்த்தப்பட்டவர்களும் ஒன்றாக வழிபடும்படியாகச் செய்தார். பல தடவை சமபந்தி போஜனத்துக்கு ஏற்பாடு செய்து அதை வெற்றியாக்கி வைத்தார்.

புரட்சியாளரான வீர சாவர்க்கர், சமூக சேவகர் சாவர்க்கர், தலைசிறந்த எழுத்தாளரும் கூட. எழுத்திலே சரளம், அதன் கருத்திலே நெருப்பு. கருத்துக்களைச் சொல்லும் முறையே சவுக்கடியைப் போல. எழுத்தின் முழுச் சக்தியையும் பயன்படுத்திக் கொண்டவர் சாவர்க்கர். இருபத்தைந்து வயது இளைஞராக இங்கிலாந்தில் இருந்த போது 1857ம் ஆண்டுப் புரட்சியைப் பற்றிய அற்புதமான சரித்திரத்தை எழுதினார். பிரிட்டிஷாரால் 'சிப்பாய்க் கலகம்' என்று வர்ணிக்கப்பட்ட அந்த முதல் முழக்கத்தை அது 'இந்திய விடுதலைப் போர்' என்றும் வெறும் 'கலகம்' அல்ல என்றும் நிரூபித்துக் காட்டினார். பிரிட்டிஷார் தங்களுடைய சுயநலத்துக்காக இந்திய மக்களின் இந்த தேசிய எழுச்சியைக் கலகம் என்று வர்ணித்தனர். இந்தியர்களால் தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ள முடியாது என்ற அவநம்பிக்கையை உண்டாக்குவதற்காக 'சிப்பாய்க் கலகம்' என்ற கற்பனையை எழுப்பி இருந்தனர். இதை உடைத்தெறிந்த முதல் இந்தியர் சாவர்க்கர்தான். மக்களின் மனத்தில் எழுப்பப்பட்டிருந்த இந்தத் தவறான எண்ணத்தைச் சாவர்க்கரின் புத்தகம் தகர்த்துவிடும் என்பதை உணர்ந்த பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் இந்தப் புத்தகம் வெளிவராதபடி தடை விதித்தது. உலகத்திலேயே சாவர்க்கருடைய இந்தப் புத்தகத்துக்குத்தான் பிறப்பதற்கு முன்பே கொல்லப்பட்ட தனிப் பெருமை கிடைத்தது! பிரிட்டிஷ் போலீசார் இந்தப் புத்தகத்தின் கையெழுத்துப் பிரதிகளைக் கைப்பற்றுவதில் தீவிரமாக இருந்தார்கள். ஆனால் சாவர்க்கரும் அவருடைய நண்பர்களும் லண்டனில் போலீசாரின் வலைவீச்சிலிருந்து தந்திரமாக அந்தக் கையெழுத்துப் பிரதியைத் தப்ப வைத்து அச்சேற்றிப் புத்தகமாக்கி விட்டார்கள். 'எரிமலை' வெடித்

தது. இந்திய மக்களின் இதயம் கனன்றது. புரட்சிக் கனல் வீசலாயிற்று. சிப்பாய்க் கலகம் என்ற வர்ணனையின் பின்னால் ஒளிக்கப்பட்டிருந்த பிரிட்டிஷாரின் அட்டூழியங்கள் அம்பலமாக்கப்பட்டன.

வீர சாவர்க்கர் அபாரமான ஞாபகசக்தி படைத்தவர். அந்தமான் தீவில் அரசியல் கைதியாக இருந்தபோது அவருக்கு அரசாங்கம் காகிதமோ, எழுதுகோலோ வழங்கி வசதியாக வைத்திருக்கவில்லை. சிறையில் இருந்தாலும் சிந்தனையும் கற்பனை சக்தியும் சும்மா இருக்குமா? சாவர்க்கர், தமக்குக் கவிதா ஆவேசம் ஏற்படும்போது உருவாகும் எண்ணக் குவியல்களைக் குறித்துக் கொள்வதற்கு ஏதுமில்லாத நிலையில் சிறைச்சாலையின் சுவரில் ஆணியினாலோ முள்ளினாலோ செதுக்கிக் கொள்ளுவார். முழுக் கவிதையும் இப்படி உருவானதும் அதை மனனப்படுத்தி இதயத்தில் எழுதிக் கொண்டு விடுவார். சாவர்க்கரின் இந்த வற்றாத ஞாபக சக்தியினால் மராத்திய மொழி அற்புதமான கவிதைகளால் தன்னை அழகுபடுத்திக்கொண்டிருக்கிறது. சாவர்க்கர் மராத்தி மொழியில் சில நாடகங்களும் விசேஷமான கட்டுரைகளும் எழுதியுள்ளார். அவருடைய சுயசரிதையும் வேறு சில புத்தகங்களும் மராத்தி இலக்கியத்தை வளப்படுத்துகின்றன.

முஸ்லிம்களைத் திருப்திப்படுத்தும் காங்கிரஸின் திட்டத்தைச் சாவர்க்கர் வெறுத்தார். ஆகவே காங்கிரஸிலிருந்து விலகி ஹிந்து மகாசபையில் சேர்ந்து அதை முன்னணிக்குக் கொண்டு வருவதற்கு முயன்றார். மகா சபையின் ஆண்டுக் கூட்டங்களுக்கு ஐந்து ஆறு தடவைகள் தலைமை தாங்கித் தம் கட்சியின் கொள்கைகளை நாடு முழுதும் பிரபலப்படுத்துவதற்குத் தீவிரமாகப் பிரசாரம் செய்யலானார். ஒவ்வொரு ஹிந்துவும் வீரனாக மாறவேண்டும் என்பது அவரது கனவு.

1947ம் ஆண்டு ஜூலை மாதம், இங்கிலாந்தின் பாராளுமன்றத்தில், அன்றையப் பிரதம மந்திரியாக இருந்த திரு ஆட்லி அவர்கள் இந்திய சுதந்திரச் சட்டத்தைக் கொண்டு வந்து பேசியபோது, இந்திய ராணுவம் தங்களிடம் விசுவாசமாக இல்லாததே தாங்கள் பாரத மண்ணை உதறிவிட்டுக் கிளம்புவதற்கு முக்கிய காரணம் என்று அப்பட்டமாகக் குறிப்பிட்டார். பிரிட்டிஷாரிடம் இந்திய ராணுவத்துக்கு இருந்த விசுவாசத்தைப் பற்றி லண்டனில் சந்தேகப்படுவதற்கான காரணம் இல்லாமலும் போகவில்லை. அது வெள்ளையர்களை இந்திய மண்ணிலிருந்து விரட்டியடிப்பதற்காக இந்திய சுதந்திர ராணுவத்தைத் திரு சுபாஷ் போஸ் அவர்கள் அமைத்து டில்லி நோக்கி முன்னேறி நடந்ததுதான். இத்தகைய துணிகரமான செயலுக்கு சுபாஷ் போஸை ஊக்குவித்த ஒரு சக்தி வீர சாவர்க்கர்தான் என்று சொன்னால் மிகையாகாது.

இந்திய விடுதலைக்கு வித்திட்டு உழைத்த ஒப்பற்ற எத்தனையோ பேர்களில் துன்பங்களை மன உறுதியோடு தாங்கிக் கொண்டு தியாகங்கள் புரிவதில் முதன்மையாக விளங்கியவர் சாவர்க்கர். பாரத ரத்தினங்களில் இவரைக் கோஹினூராகக் கொள்ளலாம்.

—ஐ. பி. எஸ். ● தமிழாக்கம்: கௌசிகன்

---

## உயிரின் விலை

வாழ்வதையே பெரிதாக நினைத்துக் கொண்டிருக்கும் நாம், வாழ்வின் முடிவான சாவை, அதுவும் குறிப்பாக ஓர் உயிரின் விலையைப் பற்றிச் சிறிதும் நினைத்துப் பார்ப்பதில்லை.



ஆதியில் குகைகளில் வாழ்ந்த ஆதிவாசிகளுக்கு, அவர்கள் தங்களது முரட்டு ஆயுதங்களைக் கொண்டு தங்களது எதிரிகளைக் கொன்றபொழுது அவர்களுக்குப் பணம் என்ற வகையில் எந்தச் செலவும் ஏற்படவில்லை. ஆனால் வரலாற்றில் புகழ் பெற்ற ஜூலியஸ் சீசருக்குத் தனது ஓர் எதிரியைக் கொல்ல ஆன செலவு 69 சென்ட் (சுமார் ரூ. 345).

பிரிட்டனுக்கு எதிராக பிரெஞ்சுக்காரர்களுக்குத் துணையாக நின்று தனது சேனையைப் பலப்படுத்தி, சரித்திரத்திலேயே முதலாவதாக பீரங்கி போன்ற ஆயுதங்களை உபயோகப்படுத்திப் போரிட்டு மாண்டுபோன ஜோன் என்னும் செக்கோ நாட்டு அரசருக்கு ஆன செலவில் அவரது நாடே தீராத வறுமையில் ஆழ்ந்தது என்றால் ஓர் உயிரைக் கொல்ல அவருக்கு ஏற்பட்ட செலவு சொல்லத் தேவையில்லை.



பேரரசன் நெப்போலியன் காலத்தில் இன்னும் ஆயுதங்களிலும் விலைகளிலும் முன்னேற்றங்கள் ஏற்பட்டன. அவனுக்குத் தனது விரோதி ஒருவனைக் கொல்ல ஆன செலவு 2,083 டாலர் (சுமார் ரூ. 10,415) ஆக உயர்ந்தது.

முதல் உலகப் போரில் டாங்கி மற்றும் விஷ வாயுக்களை உபயோகித்துச் சண்டையிட்ட காலத்தில் ஓர் உயிரைக் கொல்ல ஆன செலவு 14,853 டாலர் (சுமார் ரூ. 71,915)

இரண்டாம் உலகப் போரில் இத் தொகை 194,444 டாலராக உயர்ந்தது. (சுமார் பத்து லட்சம் ரூபாய்.)

என்ன மலைக்கிறீர்கள்? தற்பொழுது நடக்கும் வியட்நாம் யுத்தத்தில் ஓர் உயிரை (கொரில்லாவை) கொல்ல ஆகும் செலவு 65 லட்சம் ரூபாய்!



ஆதாரம்:
பாபுலர் சயன்ஸ்

அனுப்பியவர்:
பழ. வெள்ளியங்கிரி

# பெப்ஸோடெண்டின் 'இரியம் ப்ளஸ்'

## உங்கள் பற்களை சுத்தம் செய்து வெண்மை பளிச்சிடச் செய்யும்

எப்படி என்று பாருங்கள் : பெப்ஸோடெண்டில் மட்டுமே அற்புத நுரையை உண்டுபண்ணும் 'இரியம் ப்ளஸ்' உள்ளது. இது விஞ்ஞான முறைப்படி பிரத்தியேகமாக கண்டுபிடிக்கப்பட்ட சேர்க்கைப் பொருளாகும். இதனால் ஏராளமாக அற்புத நுரை உண்டாகி உங்கள் வாயின் உட்புறம் முழுவதையும், பற்களையும் நன்றாக சுத்தம் செய்யும்... பெப்பர்மிண்டைப் போல வாய்க்கு குளிர்ச்சியும், புத்துணர்ச்சியும் ஊட்டும். 'இரியம் ப்ளஸ்'ஸின் தனிப்பட்ட சக்தியால் பற்கள் இயற்கை வெண்மையுடன் பிரகாசிக்கும். அற்புத வெண்மை அளிப்பது பெப்ஸோடெண்டின் தனிப்பட்ட தன்மை.

இந்துஸ்தான் லீவர்
லிமிடெடின்
ஓர் உன்னத தயாரிப்பு






# 8

அனைவரும் தன்னைக் கண்டால் ஒதுங்கிப் போவதற்கு என்ன காரணம் என்பதை நாணு ஆராய வேண்டிய அவசியமில்லை. அவனுக்கு அது தெரியும். அவர்கள் மட்டுமா, இப்போது அவனே தன்னைக் கண்டு ஒதுங்கினான். கூடத்தில் பேசிக் கொண்டிருந்தவர் சீதாவின் அப்பாவாம். பெரிய வக்கீலான அவரிடம் அல்லவா வழக்கு சிக்கிக் கொண்டு விட்டது! சந்தர்ப்பமும் சாட்சியமும் அவனைக் குற்றவாளிக் கூண்டில் ஏற்றி விட்டன. சாட்சி கிடக்கட்டும். மனச்சாட்சி கொல்கிறதே உள்ளிருந்து! இதற்குத் தப்ப முடியுமா அவனால்?

நாணு சாப்பிடப் போகவில்லை. படுக்கையில் புரண்டு கொண்டே மனத்தைப் புரட்டிப் புரட்டி அரற்றிக் கொண்டிருந்தான். ஜெகுவின் மீது குற்றத்தைச் சாட்டித் தப்பிக்க அவனுக்கு ஆசையில்லை. அத்நாவின் காதை எட்டி விட்டது என்பதற்காகவும் அவன் தன் பிழையை மறைக்கப் போவதில்லை. பிழை பிழைதான். அதற்குரிய தண்டனையை அவன் அநுபவித்தே தீர வேண்டும். அம்மா சொல்வாளே, 'தப்புச் செய்வதுகூடப் பாவமில்லை. அதை மறைப்பதுதான் பாவம்' என்று. அவள் இது மட்டுமா சொன்னாள்? இன்னும் எவ்வளவோ சொல்லியிருக்கிறாள். அதையெல்லாம் நினைத்துப் பார்த்தால் அவனுக்கே தன் மீது அவமானமாக இருக்கிறது. 'கெட்ட பழக்கம் சீக்கிரத்திலே ஒட்டிக் கொள்ளும். நல்லது இலேசில் வராது. உலகத்திலே ஆசைக்கும் சபலத்துக்கும் அழிகிறவர்கள்தான் அதிகம். உயர்ந்த லட்சியம் எத்தனை பேருக்கு உண்டாகிறதப்பா?' என்று கேட்பாளே, அது உண்மை என்று அவனே சாட்சிபூர்வமாக நிற்கிறான்.

அம்மா இருந்தவரையில் அவனுக்கு ஒரு காப்பு இருந்தது. அம்மா போனதும் அது போய் விட்டது.

உயர்ந்த இலட்சியம் வேண்டாம். தீய எண்ணமாவது பழக்கமாவது இல்லாதிருக்கலாமே....!

அதுவும் இல்லை.

இரவு முழுவதும் வேதனையில் தலை வைத்து, நாணத்தில் முகம் மூடி, ஆற்றாமையில் உடலைப் புரட்டி விசாரணையில் உள்ளத்தைத் தோய்த்து நாணு சாம்பினான். ஒன்றுமே தெரியாமல் ஒன்றையும் தெரிந்து கொள்ளாமல் இனியும் அவன் வாழ்வது அர்த்தமற்றது என்று தோன்றிற்று. கமலா முகத்தைத் திருப்பிக் கொண்டதில் என்ன தப்பு? அவனைக் கொண்டாடுவாளா, பின்னே?

காலையில் எழுந்திருக்கும்போது மணி எட்டாகியிருந்தது. அவ்வளவு நேரம் அவன் தூங்கியதே கிடையாது. ஒரு துறையில் முறை தவறியவனுக்கு எல்லாமே தவறித்தான் போகுமோ?

ருக்கம்மா கொடுத்த காப்பி கசந்தது. அதைவிடக் கசந்தது அவள் முகம்.

கூடத்திலிருந்த அமைதிகூடக் கசந்தது. அத்தை வழக்கம்போல் கூச்சலிட்டுக்கொண்டிருந்தால் தேவலை என்று எண்ணினான். அவள் போடுவது கூச்சல் இல்லை. மனத்தைத் திறந்து கொட்டுகிற பாய்ச்சல். அதுகூட இந்த அமைதிக்குப் பதிலாக நன்றாகவே இருக்கும்.

மாடிக்கே வந்தான். கமலாவின் அறைக்குள்ளும் மௌனம் நிலவியது. பாட்டைக் காணோம். நடனத்தைக் காணோம். இதற்கெல்லாம் காரணம் இன்னதென்று அவனுக்குத் தெரிந்திருந்தாலும் அதுதானா என்று உறுதி செய்து கொள்ள வேண்டும் என்று எண்ணினான். அவளாக அழைத்தாலன்றி அந்த அறைக்குள் நுழைவதில்லை என்ற வைராக்கியத்தை உதறிவிட்டுக் கமலாவின் எதிரில் அவன் போனான். அர்த்தமற்ற வைராக்கியம்தானே அது? அவள் உணர்ச்சி வசப்படுகிறவள். அதைப் பெரிதுபடுத்தலாமா....?




''என்ன?'' கமலா சிடுசிடுத்தபடி கேட்டாள். அவன் நுழைந்ததை அவள் விரும்பவில்லை.

அவள் விரும்புவாள் என்று அவன் எதிர்பார்க்கவுமில்லை. ''நீ ஏன் என்னவோ போலிருக்கிறாய், கமலா?'' என்று கேட்டான்.

''எப்படி இருக்க வேண்டும் என்று நீதான் கற்றுக் கொடேன்'' என்று சீறினாள் அவள்.

நாணு அயரவில்லை. அவன் இனி இதற்கெல்லாம் அயரப் போவதில்லை என்று முடிவு செய்து விட்டான். ''கமலா! நீ கோபமாக இருக்கிறாயே, ஏன்?'' என்றான்.

''அதுஎன் இஷ்டம்'' என்றாள் அவள். சொல்லி விட்டுக் கேலிப் புன்னகை தவழ அவனைப் பார்த்தாள். ''இங்கு எல்லாரும் அவரவர் இஷ்டப்படி இருக்கும்போது நான் மட்டும் என் இஷ்டப்படி இருக்கக் கூடாதோ?'' என்று கேட்டாள்.

முன் போல் அந்த வார்த்தைகள் அவனைக் குத்தின. எந்த உறுதியை வேண்டினானோ, அது கிடைத்து விட்டது. ஆனால் அவனுடைய உறுதி குலைந்து போய் விட்டது அதனால். கமலாவுக்கு 'அது' தெரிந்திருக்கிறது. தெரியாமல் போகுமா?

'' எனக்கு எதுவுமே பிடிக்கவில்லை.'' அவள் அலுத்துக் கொண்டாள்.

அதற்கு அவன்தான் காரணமோ? நாணு ஏக்கத்தோடும் கவலையோடும் அவளையே பார்த்தான். ''எனக்கும் எதுவும் பிடிக்கவில்லை, கமலா!'' என்றான். சொல்லும்போது குரல் கம்மிற்று. ''ஆனால் உனக்கு ஏன் அப்படி? பாட்டும் நடனமுமாக இருக்கிற நீ மாறிப்போவானேன்?'' என்று கேட்டான்.

''என்னைக் கேட்கிறாயோ? உனக்குத் தெரியவில்லை?'' என்று திருப்பிக் கேட்டாள் அவள்.

''எனக்கு எதுவுமே தெரியவில்லை, கமலா!'' — மனம் விட்டு அவன் சொன்னான்.

கமலா நிமிர்ந்து உட்கார்ந்தாள். ''தெரியா விட்டால் இப்போதாவது தெரிந்து கொள்... நீ வந்த பிறகு எல்லாமே மாறிப் போய் விட்டன.''

அவன் வந்த பிறகா மாறி விட்டன எல்லாம்? நாணுவுக்கு இந்தக் குற்றச்சாட்டு வேதனையைத் தந்தது. அதே சமயம் அதில் உண்மை இருப்பதாகவும் தோன்றிற்று. அவன் வரவால் சில மாற்றங்கள் ஏற்பட்டுத்தான் விட்டன. அவனுள்ளும் சில மாற்றங்கள் ஏற்பட்டுத்தான் விட்டன.

"அப்பாகூட அல்லவா மாறிவிட்டார் உன்னாலே... வக்கீல் மாமாவோடு நேற்று அவர் எவ்வளவு சண்டை போட்டார் தெரியுமா? உன்னால் ஒரு பெரிய யுத்தமே நடந்தது இங்கே... அதெல்லாம் உனக்கு எப்படித் தெரியும்?"

நாணு திகைத்து விட்டான். அத்தான் அவனுக்காக வக்கீல் மாமாவோடு வாதாடினாரா? சற்றும் எதிர்பாராத கோணம் அல்லவா அது! யாருக்காக யார் வாதாடுவது? அவன் குற்றவாளிதானே! அவனுக்காக வாது எதற்கு?

"உனக்குப் பரிந்து அப்பா பேசவும் அத்தை வந்துவிட்டாள் சண்டைக்கு. அவளையும் அப்பா சும்மா விடவில்லை. அவருக்கு இவ்வளவு கோபம் வந்து நான் பார்த்ததே இல்லை...!"

"எனக்கு இதெல்லாம் தெரியாது கமலா!"

"உனக்கு ஏன் தெரிய வேண்டும்? உனக்காக அப்பா எல்லாத்தையும் தம்மேல் போட்டுக் கொள்கிறாரே, அப்புறம் நீ ஏன் தெரிந்து கொள்ள வேண்டும்?"

வெறுப்பை உமிழ்ந்தாள் கமலா.

"உன்மேல் அவருக்கு இவ்வளவு பிரியம் இருப்பது நேற்றுத்தான் தெரிந்தது. என்னிடம்கூட அவருக்கு இவ்வளவு அன்பு கிடையாது. உன்னிடம் உயிரையே வைத்திருக்கிறார். நீயோ அந்த ஜெருத் தடியனோடு சுற்றுகிறாய்... அப்படிச் சுற்றினால்கூட உன்னை அப்பா புகழ்வார் போலிருக்கிறது!"

இப்படிச் சீறிய கமலாவுக்கு அவன் முன்னால் நிற்கவே பிடிக்கவில்லை. சட்டென்று வெளியே போய் விட்டாள்.

நாணுவைப் புதிய குழப்பம் பற்றிக் கொண்டது. பழைய விசாரம் விலகி அதற்கு இடம் விட்டது.

அவன் இருந்ததைக் கவனியாமல் உள்ளே வந்தாள் சீதா. திரும்பிவிட எண்ணியவள் மேஜை மீது கிடந்த புத்தகத்தைப் புரட்டியவாறே, "அப்பா சொன்னபோது நான் நம்பவில்லை, நாணு... நீ ஏன் ஜெருவோடு சேர்ந்தாய்?" என்று கேட்டாள் மிகுந்த அநுதாபத்தோடு.

"சேர்ந்ததால் எனக்குப் பல விஷயங்கள் புரிய ஆரம்பித்திருக்கின்றன, சீதா!" என்றவன் "ஆனால் இனி அவனோடு சேரப் போவதில்லை" என்று முடித்தான்.

நாணு அங்கிருந்து வெளியேறிவிட்டான். கமலா வருவதற்குள் அங்கிருந்து போய்விடுவது நல்லது. சீதாவிடம் குறிப்பாகத் தன் மனத்தை வெளியிட்டதில் அவனுக்குச் சற்று ஆறுதல் பிறந்தாற்போல் இருந்தது. அவ்வளவு போதும். அவள் புரிந்து கொள்வாள். ஆனால் அந்த அமைதிக்கு ஆபத்து எதிரே காத்திருந்தது. ஜெரு நின்றான் அங்கே.

"நீ ரொம்ப லக்கி பாய், நாராயணு... உன்மீது இங்கே பலபேர்கள் அன்பு காட்டுகிறார்கள். நான் ஒரு அன்-லக்கி ஃபெலோ" என்று கூறினான்.

அந்த அதிருஷ்டம் ஜெருவுக்கு வியப்பைத் தரலாம். நாணுவுக்கு வேதனையையே தந்தது என்பதை அவன் எப்படி அறிவான்? அத்தானின் அன்பை அவன் சூறையாடிவிட்டதாகக் கமலா எண்ணுகிறாள் அல்லவா? அந்த அன்புக்குத் தான் அருகதையற்றவன் என்று அவன் எண்ணுகிறான் அல்லவா?

"ஏன் என்னவோ போல் இருக்கிறாய்?" நாணுவின் முக மாறுதலைக் கண்ட ஜெரு கேட்டான்.

"தயவுசெய்து என்னைத் தனியே இருக்க விடுவாயா, ஜெரு?" என்றான் நாணு.

"அதுதான் நடக்காது. அழுது மூக்கைச் சிந்துவது எனக்குப் பிடிக்காத ஃபிலாஸபி."

அவனுடைய தத்துவங்களையும் அவற்றின் பெருமைகளையும் கேட்க நாணு தயாராக இல்லை. எனவே அங்கிருந்து அகன்று தன் அறைக்குள் புகுந்தான். ஜெரு ஒரு கணம் திகைப்புற்றவனாய், நண்பனையே பார்த்துவிட்டுத் தொடர்ந்து வந்து, "நாராயணு, எக்ஸ்க்யூஸ் மீ... சிகரெட் பிடிச்சட்டது வெளியே தெரிந்து போய்விட்டது என்று தானே வருத்தப்படறே?" என்றான்.

"இல்லை..." என்றான் நாணு.

"பின்னே ஏன் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டிருக்கிறாய்?"

"வெளியே தெரிந்துவிட்டதால் எனக்கு வருத்தமில்லை. ஒரு கெட்ட பழக்கத்துக்கு ஆசைப்பட்டதுக்காக வருத்தப்படறேன், ஜெரு."

"ப்பூ! இந்த ஸிம்பிள் விஷயத்துக்கே இவ்வளவு வருத்தப்பட்டால் அப்புறம் 'லவ்' மேட்டர்லே எப்படி...?"

"தயவுசெய்து போய் வா, ஜெரு, எனக்கு இந்தப் பேச்செல்லாம் பிடிக்கவில்லை."

"மை காட்! ஒரு ராத்திரிக்குள்ளே இத்தனை மாறுதலா? என்னால் நம்ப முடியவில்லையே!"

"ஜெரு, தயவு செய்து...." நாணு தலை நிமிர்த்தி நண்பனைப் பார்த்தான். ஜெருவின் வெகுளித்தனமோ, கேலிப் பேச்சோ இனி அவனை ஈர்க்காது என்பதைச் சொல்லிவிடத் துடித்தான். அவனுடைய வழி வேறு, ஜெருவின் வழி வேறு. ஆயிரம் தவறுகள் செய்துவிட்டு அவற்றை மறைக்காமல் பவனி வரக்கூடிய அந்தஸ்து ஜெருவுக்கு இருந்தது. ஆனால் ஒரு தவறு செய்தாலும் தலையை வெளியே காட்ட முடியாத அநாதை நிலை நாணுவுடையது. இருவர் வாழ்வும் தனித் தனியே இயங்க வேண்டியவை. இதையெல்லாம் ஜெருவுக்கு எப்படி உணர்த்துவது? "எனக்கு மனசு சரியாக இல்லை... நீ போய் வா" என்று மட்டுமே மீண்டும் சொன்னான்.

"மனசு சரியாப் போகணும்னு கொஞ்ச தூரம் வாக்கிங் போய் வரலாமே!"

"நான் வரவில்லை."

ஜெருவுக்கு இப்போதுதான் சற்றுப் புரிந்தது போலிருந்தது. "நல்லது... நீ வர மாட்டாய். ரொம்பவும் மிரண்டு போய் விட்டாய் போலிருக்கிறது! எனக்கு இதெல்லாம் சகஜம்... வாழ்க்கையே ஒரு விளையாட்டு எனக்கு.. பாவம், உன்னையும் என் வழியிலே ஏன் இழுக்கணும்? நான் வரேன்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான்.

நல்லவேளையாக அவன் போனானே என்றிருந்தது நாணுவுக்கு.

தனிமை நாணுவுக்கு வேண்டியிருந்தது. மனசைத் துவைக்கவும் உலரப் போடவும் அது தேவை.

ஆனால் அவனுக்குத் தனிமை கிட்டாது போலிருந்தது. ருக்கம்மா வந்து விட்டாள். முன்னிரவில் அவன் சாப்பிட வரவில்லை என்பதும் காலையில் காப்பிக்கு வந்த போதுகூட ஒரு வார்த்தை பேசாமல் திரும்பி விட்டான் என்பதும் அவளை உறுத்தின. அதைவிட வேறொன்று அவள் நெஞ்சை உறுத்திக் கொண்டிருந்தது. நாணுவை அவளுடைய பொறுப்பில்லவா பண்ணையார் ஒப்படைத்திருந்தார்!

"கடவுள் உன் பங்கில் இல்லாவிட்டால் நேற்றோடு உன் கதை முடிந்திருக்கும். பண்ணையார் மனத்தில் சுந்தரி எந்த நேரமும் இருந்ததால் உன்னைப் பற்றி வக்கில் மாமா புகார்செய்ததைஅவர் லட்சியம் செய்யவில்லை. ஜெருவின் சகவாச தோஷத்தினால் நீ பிசகிவிட்டாய் என்று அடித்துப் பேசினார். ஆனால் அத்தைக்கு வந்து விட்டது கோபம்! வாயில் வந்தபடி பேச ஆரம்பித்து விட்டாள்!" என்று விளக்கினாள்.

ஏற்கனவே கமலாவின் வாய் மூலம் சிறிதளவு அப் போராட்டம் பற்றி அறிந்திருந்ததால் நாணு வியப்படையவில்லை. அவளுக்காக அத்தான் வாதாடியது பற்றி மட்டுமே ருக்கம்மாவிடம் கேட்டான்.

"என்ன அப்படிக் கேட்கிறாய் நாணு? அவர் மனசு ரொம்பப் பெரிசடா. உன்னைச் சொந்தப் பிள்ளைக்கு மேலாக அவர் நினைத்துக் கொண்டிருக்கிறார்!" என்றாள்.

நாணுவுக்கு அதைக் கேட்க என்னவோ போலிருந்தது. கமலாவின் பொறுமை நன்கு புரிந்தது.

"'இன்னமுமா சுந்தரியின் ஜபம் ஓயவில்லை! என் பிள்ளை தத்தாரி. அவனாலே உன் சுந்தரியின் பிள்ளை கெட்டுவிட்டானாக்கும்? நான் இனிமேல் அரை விநாடி இந்த வீட்டில் தங்க மாட்டேன்' என்றாள் அத்தை. அடங்காத பிள்ளையைப் பெற்று விட்டு வாய் வேறே அவளுக்கு....'என்னவோ, சிறு வயதிலே சேர்மானம் சரியாக இல்லாமல் தப்பு நடப்பதில்லையா? அதைத் திருத்திக் கொள்வதை விட்டு விட்டுக் கூச்சல் போடுவானேன்?' என்றார் பண்ணையார். அவள் அதை ஏற்பாளா? சுந்தரியைத் திட்டுகிற ஆத்திரத்திலே பண்ணையாரையே திட்டினாள். நீ அவருக்குப் பிள்ளையாக,

சொத்துக்கு ஆளாக வந்திருக்கிறாயாம். இன்னும் என்னென்னவோ... அதையெல்லாம் என் வாயாலே சொல்ல ஆகாது.''

நாணா வெலவெலத்துப் போனான். இந்தப் பழிச் சொல் வைத்தியரின் வீட்டில் அவன் காதில் விழுந்ததால்தான் விஷக் குப்பியைத் தேடி எடுத்து வந்தான். அது மறந்துவிடவில்லை. அவனைப் பற்றி யார் எது வேண்டுமானாலும் சொல்லட்டும். கவலை யில்லை. அவனுடைய அம்மாவைப் பற்றிச் சொன்னால் அவனால் தாங்க முடியாது.

வக்கீல் மாமாவுக்குச் சங்கடமாய்ப் போய் விட்டதாம். நீதிபதியே குற்றவாளியாவது எந்தக் கோர்ட்டிலும் நிகழாத அதிசயம். இந்த வீட்டில் அது நிகழ்ந்தது. நீதிபதியாகத் தண்டனை வழங்க வேண்டிய அத்தான் பழியைத் தம் தலையில் போட்டுக் கொண்டாராம். அத்தையைப் பார்த்து, ''கல்யாணி, யாரையும் நான் குறை சொல்லவில்லை. அந்தப் பையன் உயர்த்தி, ஜெகு தாழ்த்தி என்கிற வேற்றுமை கிடையாது எனக்கு... வாஸ்தவத்தில் என்மீதுதான் எனக்கு வருத்தம் ஏற்படுகிறது. உலகத்தில் மிக மிகத் தாழ்ந்த பிறவி எடுத்து விட்டேனம்மா. என்னுடைய மனசை வேதனைப்படுத்தாதே'' என்றாராம்.

அவரா தாழ்ந்த பிறவி? ஏன் அப்படித் தம்மைத் தாமே தாழ்த்திக் கொள்கிறார்? நாணாவுக்கு அதிசயமாக இருந்தது.

இந்தப் போராட்டத்துக்குப் பிறகு அத்தான் மனம் உடைந்து போய்த் தம் அறைக்குள் கதவை மூடிக் கொண்டு விட்டாராம். ஒரு வாய் ஆகாரம் கூடச் சாப்பிடவில்லையாம். காப்பி மட்டும் குடித்தாராம். யாரும் அவரை நெருங்க அஞ்சுகிறார்களாம். கந்தனை விட்டு முதலியாரை அழைத்து வரச் சொல்லி அவரோடு ஏதோ வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தாராம். என்ன பேசினார்களோ தெரியாது. அத்தையானால் உயில் எழுதுகிறார் என்கிறாளாம் கேலியாக.

ருக்கம்மா இவ்வளவையும் சொல்லி அவனையும் கண்டித்துவிட்டுக் கீழே போனாள். அப்புறமாவது தனிமை வாய்த்ததா? இல்லை. கந்தன் வந்து அத்தான் கூப்பிடுவதாகச் சொன்னான்.

நாணா அவருடைய அறைக்குள் கால் எடுத்து வைக்கவே நாணினான்.

''உட்கார்'' என்றார் அவர்.

அவன் உட்காரவில்லை. மரியாதையாக நின்றான். அவரை நிமிர்ந்து பார்க்க முடியவில்லை. தலை தாழ்ந்திருந்தது.

''நேற்று ஜெகுவுடன் சேர்ந்து புகை பிடித்தாயா நாணா?'' – அவர் கேட்டார்.

அவரா கேட்டார்? அம்மாவே கேட்பது போலிருந்தது அவனுக்கு. குரலில் அந்தக் கனிவு இருந்தது.

''என்னை மன்னித்து விடுங்கள் அத்தான்.. தெரியாமல் செய்துவிட்டேன். இனிமேல் அவனோடு சேர மாட்டேன்'' என்றான்.

அவர் சிரித்தார். ''அவனோடு சேர வேண்டாமென்று நான் சொல்லவில்லை. ஒருவரோடு சேருவதால் நாம் கெட்டுப் போகத் தான் வேண்டுமா? அவர்களை நல்லவர்களாக ஆக்க முடியாதா?... போகிறது... இதை விசாரிக்க உன்னை நான் கூப்பிடவில்லை. வேறு ஒரு முக்கியமான செய்தி இருக்கிறது. அதைச் சொல்லத்தான் உன்னைக் கூப்பிட்டேன்'' என்றார்.

அத்தை சொன்னது போல உயிலாக இருக்குமோ என்ற சந்தேகம் எழுந்தது அவனுக்கு. வேறு என்ன முக்கியமான செய்தி இருக்க முடியும்? காதைத் தீட்டிக்கொண்டான் அவன்.

''உன் அப்பா இங்கு வருவதாகக் கடிதம் எழுதியிருக்கிறார்.''

நாணாவுக்கு உடல் முழுதும் மின் அலை பாய்ந்தாற் போலிருந்தது. அப்பா வரப் போகிறாரா? அவனுடைய அப்பாவா? இதை விடச் சிறந்த உயில் வேறு இருக்க முடியுமா? எவருடைய முகத்தை அவன் இத்தனை காலமும் பார்த்ததே யில்லையோ, எவர் அவனையும் அம்மாவையும் கல்யாணி அம்மாள் போன்றவர்களின் பேச்சுக்கெல்லாம் ஈடு கொடுக்க வைத்துவிட்டுப் போய்விட்டாரோ, அந்த அப்பாவா வருகிறார்! வரட்டும். முகத்தில் அறைந்தாற்போல், 'இத்தனை நாட்கள் வராமல் இப்போது மட்டும் ஏன் வந்தீர்கள்? நான் இருக்கிறேனா இல்லையா என்று பார்க்கவா?' என்று கேட்க வேண்டும்.

''ஆனால்... சில காரணங்களால் அவர் இப்போது இங்கே வர வேண்டாம் என்று நான் நினைக்கிறேன்...'' அத்தான் தொடர்ந்தார். ''அவர் வரவேண்டாமென்று நான் எழுதி விட்டேன்.''

பொக்கென்று போய்விட்டது அவனுக்கு.

''அவர் வராமலிருப்பதே நல்லது. இத்தனை காலமும் அவரா உன்னைக் காப்பாற்றினார்? இல்லையே...''

இந்தக் காரணம் நாணாவுக்கு ஏற்றதாகத் தோன்றவில்லை. இத்தனை காலமும் அத்தான் தான் காப்பாற்றினார். ஆனால் அப்பாவின் ஸ்தானத்துக்கு உயிர்த் தொடர்பு உண்டு. அது தன்னைத் தானே காப்பாற்றிக் கொண்டு எந்தத் தடையையும் உடைத்துக் கொண்டு காலப் பிரமாணத்தை நிர்மூலமாக்கி வெளிப்பட்டே தீரும். இல்லாவிட்டால் நாணாவுக்கு இத்தனை புளகிதமும், ஆறுதலும் எழுந்திருக்குமா? அவர் வரமாட்டாரென்றதும் உடலை விட்டு ஒரு பகுதி நழுவியே போய்விட்டது போல் அதிர்ச்சி உண்டாகுமா?

''அவரை நீ பார்க்காமல் இருப்பது உனக்கும் நல்லது, நாணா... காலம் வரட்டும். அது வரையில் காத்திருப்பதில் தவறு கிடையாது. இப்போதைக்கு நான்தான் உனக்கு அப்பா... தெரிகிறதா?... இதைச் சொல்லத்தான் கூப்பிட்டேன். உனக்குச் சில முக்கியமான செய்திகள் தெரிந்திருக்கத்தான் வேண்டும். இல்லையா?''

நாணாவுக்கு நேற்று இரவிலிருந்து உளைந்த மனம் அறுந்து கீழே விழுந்தாற்போலிருந்தது. அவரை வெறிக்கப் பார்த்தான். கண்ணில் நீர் முட்டிற்று. நெஞ்சில் தீ கனன்றது. இந்த முக்கிய செய்தியை அவர் கூறாமலேயே இருந்திருக்கலாமே! இதனைத்

தாங்கும் வயது வந்துவிட்டதா அவனுக்கு? வயதே வந்திருந்தாலும் இதை எவ்வாறு அவனால் தாங்க இயலும்?

''நீ போகலாம்'' என்றார் அத்தான்.

சிலர் குழந்தைகளை அழவிட்டு வேடிக்கை பார்ப்பதுண்டு. அத்தானுக்கும் அந்த ஆசை வந்து விட்டதோ!

வெளியே வந்த நாணு அங்கே சுவரோடு சுவராகக் கமலா நிற்பதைக் கண்டான். ''என்னைச் சொன்னாயே, நீ ஒட்டுக் கேட்கலாமோ?'' என்று கடிந்தான்.

''என் இஷ்டம். நீ யார் கேட்க?'' என்றாள்.

அவன் யாரா? கமலா கேட்ட அந்தக் கேள்வியை அவனே கேட்டுக் கொண்டான் இப்போது. அவன் யார்?

பத்தடிக்குப் பத்தடி அறை இதற்குப் பதில் கூறவில்லை. அது அறை அல்ல—அவனுக்குச் சிறை. ஆமாம். சிறைதான்.

எங்கோ ஒரு பெரிய மண்டபம் தெரிகிறது. அதில் அழகின் வார்ப்பால் ஒரு சிலை தெரிகிறது. சுற்றிலும் பாழடைந்த சூழ்நிலையில் அந்தச் சிலை மட்டும் காலத்துக்கு எவ்வாறு தப்பிற்றோ, நாணுவுக்குத் தெரியவில்லை. பிரமையுடன் அதை நெருங்கிய நாணு திடுக்கிடுகிறான். அது அவனுடைய அம்மாவின் சிலை!

அருகில் சலசலக்கும் அருவியும் அதன்மீது பாலமும் எதிர்க் கரையில் மதில் சூழ்ந்த கோட்டையும் தெரிகின்றன. அந்தக் கோட்டைக்குள் அவனுடைய அப்பா இருக்கிறார். அது அவனுக்குத் தெரிகிறது.

அந்தச் சிலையைப் பெயர்த்துக் கொண்டு பாலத்தைக் கடந்து அக்கரை போக வேண்டுமென்கிற துடிப்பு அவனை உந்துகிறது. சிலையை எடுத்துக் கொண்டான். ஆனால் பாலம் நெருங்க நெருங்க விலகிப் போய்க் கொண்டே யிருந்தது.

நாணு கலங்குகிறான்.

சிலை சிரிக்கிறது!

திடீரென்று எல்லாமே மறைகின்றன. அவன் சிலையைப் பற்றிய பிடியை விடாமல் கீழே, கீழே போய் விழுகிறான்.

சிலை? அது தூள் தூளாகக் கிடக்கிறது!

''அம்மா!'' என்று அலறுகிறான்.

சிலை அழுகிறது. அருகில் ஒருவர் நிற்கிறார். அவர் யார்? அப்பாவா? இல்லை. அத்தான்.

நாணு கண் விழித்துப் பத்தடிக்குப் பத்தடி அறைக்குள், கனவில் கண்ட சிலையை, அருவியை, பாலத்தை, கோட்டையைத் தேடினான்.

கனவுதானா அது?

கனவில்கூட அவன் அப்பா வரமாட்டாரா? கனவில்கூட அத்தான்தான் வருவாரா?

''அய்யோ, அம்மா!'' அவன் அரற்றினான்.

''பையா!'' என்ற குரல் கேட்டது. வைத்தியர் நுழைந்தார் அறைக்குள்.

''வாருங்கள்'' என்றான் நாணு.

கனவில் அழுந்திய நெஞ்சுக்கு இப்போது அவருடைய வருகை ஓரளவு ஆறுதலாக இருந்தது. முதலியார் மனத்துக்கும் மருந்து தரக் கூடியவர்.

வைத்தியர் நாடி பார்த்தார். ''எதையோ மனத்தில் வைத்துக் கொண்டு தவிக்கிறாய். இருதயம் படபடவென்று அடித்துக்கொள்கிறது. படுத்து நிம்மதியாகத் தூங்கு. சரியாகப் போகும்'' என்றவாறே புறப்பட்டார்.

நிம்மதியாகத் தூங்குவதா? நிம்மதியும் தூக்கமும் அவனிடமிருந்து விடைபெற்றன.

''என்னை எதற்காக இங்கே அனுப்பினாய் அம்மா? என்னைச் சுற்றி ஒரு ரகசியத் திரையைக் கட்டி அதில் ஆயிரம் நிழல்களை ஆடவிடுகிறார்களே இவர்கள்! அப்பா வரக் கூடாதாம். அதற்கு இன்னமும் காலம் வரவில்லையாம். இத்தனை காலம் கழித்துமா அந்தக் காலம் வரவில்லை?

''அவர் ஏன் வரக் கூடாது என்பதை இவர்கள் சொல்லவில்லை. வரமாட்டார் என்று மட்டுமே சொல்கிறார்கள்.

''அத்தானை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவர் நிழலில் நான் மனிதனாக வளரவேண்டுமென்று நீ ஆசைப்பட்டாயே! அம்மா, உன் ஆசை பொய்யாகி விட்டது. நீ கண்ட பல கனவுகளைப் போல் அதுவும் பொய்தான். இந்த நிழலில் நாணு வளர முடியாது. இது நிழலும் அல்ல; இருட்டு.

''எனக்கு ஒளி வேண்டும். நான் வளர்வதற்கு உரிய ஒளி இங்கு இல்லை.

''அத்தானை நான் குறை சொல்லவில்லை. எனக்காக அவர் கண்ணீர் உகுத்தார். எனக்காக வக்கீலுடன் வாதாடினார். அத்தையுடன் போரிட்டார். ஆனால் அம்மா, அவருடைய இந்த அன்புள்ளத்தை, என்மீது அவர் காட்டுகிற அன்பை, பிறர் பார்க்கிற பார்வை வேறாக இருக்கிறது. சொல்லப் போனால் எனக்கே அவர் அன்பைக் கண்டு பயம் உண்டாகிறது.

''என்னால் இங்கு இருக்க முடியாது.

''உன் மதிப்புக்குரியவர்தான் என்றாலும் எனக்காக அத்தான், பழியை ஏற்க நான் சம்மதிக்க மாட்டேனம்மா. அவரை நிமிர்ந்து பார்க்க இனி என்னால் ஆகாது. அவருடைய அன்புதான் எனக்கு இங்கு சிறையாக இருக்கிறது.

''சில சமயம் என் நெஞ்சை உமட்டுகிறாற் போல உன்னைப் பற்றிய அவதூறுகளை இங்கே நான் கேட்கிறேன்... ஐயோ, என் காதை எங்காவது தொலை தூரத்துக்கு எடுத்துச் சென்றாலன்றி எனக்கு இந்த வாதனை தீராது.

''இதனால்தானம்மா இந்த அன்பை நான் வெறுக்கிறேன். உன் தெய்வீகத் திருவுருவுக்கு இம்மி மாசு ஏற்பட்டாலும் அதை என்னால் சகிக்க முடியாதம்மா.

''என் முடிவு தவறா அம்மா? சொல்லம்மா... பரந்த உலகத்திலே எனக்கென்று ஓர் இடம் இல்லாமலா போய்விடும்? அதை நான் கண்டுபிடித்துக் கொள்வேன். கண்டுபிடிக்க முடியாமற் போனால், அம்மா, வானுலகில் எனக்காக நீ வாயிற்படியிலேயே நில்.... வந்து விடுகிறேன்.''

மறு நாள் காலையில் நாணு அங்கு இல்லை. வேணுரை விட்டு நள்ளிரவில் அவன் புறப்பட்டுப் போய்விட்டான்.

அவனுடைய வாழ்வின் யாத்திரை புதிய வழியில் திரும்பி விட்டது. (தொடரும்)



# ஊர்வம்பு

- திரு ராமனமூர்த்தியின் நிழலாட்டப் பொம்மை
- ஓவியக் காட்சியில் புரிவதும்......
- ஓவியக் காட்சியில் புரியாததும்.....

## சென்னை ராஜ்ய சங்கீத நாடக சங்கப் பரிசுகள்

ராஜாஜி ஹாலில் சங்கீதத் துறையிலும் இதர கலைத் துறைகளிலும் தலைசிறந்து விளங்கும் இருபத்தோரு பேர்களுக்குப் பதினாலு காரட் பொன் சங்கிலி போட்டு, கதர் சால்வை போர்த்திக் கௌரவித்துக் கொண்டிருந்தனர். இப்படிக் கௌரவிக்கப்பட்ட சங்கீத, நாட்டியத் துறை வித்வான்களில் சிலரால் எழுந்து நிற்கவும் முடியவில்லை. ஏனெனில், கௌரவிக்கப்பட்டவர்களில் முக்கால் வாசிப் பேர் கிடயராகிப் போன பழம் பெரும் வித்துவான்கள். இந்தப் பழம் பெரும் வித்துவான்களைக் கௌரவிக்கும் போது பகவான் இரண்டு மூன்று தடவை ராஜாஜி ஹாலை இருட்டடிப்புச் செய்தார்.

புகைப்படக்காரர்கள் இந்தப் பழம் பெரும் வித்வான்களை இருட்டடிப்புச் செய்ததைக் காணப் பொறுக்காது இந்த நடவடிக்கையை அவர் மேற்கொண்டாரோ, என்னவோ? சங்கீதத் துறையிலிருந்து நாடகம், திரைப் படத் துறைக்கு வந்தபோது தான் புகைப்படக்காரர்கள் வெகு சுறுசுறுப்பாக இயங்கத் தொடங்கினர்.

'சென்னை ராஜ்ய சங்கீத நாடக சங்கம் சொற்பொழிவாளர்களுக்கும் இப்படி மாலை போட்டுக் கௌரவிக்கலாமே!' என்று வேடிக்கையாகக் குறிப்பிட்டார் திரு ம.பொ.சி. —பி.எஸ்.எம்.

## ஓவியக் கண் காட்சி

"இந்தப் படம் எதைக் குறிக்கிறது சார்?" என்று கேட்டார் ஒரு ரசிகர். அது ஒரு நவீன ஓவிய பாணிப் படம்.

"அதுதான் 'இரவின் கூவம்' – சித்திரக்காரரின் மனோபாவம்....."

"ஓஹோ!...." அன்பரின் குரலில் ஏதோ சந்தேகம் திரளுவதைக் கண்டுவிட்ட நண்பர் அந்தப் படத்தை விளக்க முற்பட்டார்.

"என் சந்தேகம் வேறே சார். முதல் ஹாலில் இதே போல, ஆனால் இதைவிடச் சற்றுப் பெரியதாக – அதிகமான வண்ணக் கோடுகளுடன் ஒரு படம் இருக்கிறது. அதை ஒரு நண்பர் 'இந்தியாவின் தலைவாசல்' என்று குறிப்பிட்டார். இரண்டுக்கும் வித்தியாசம் ஏதுமில்லையே என்றுதான்..." தம் சந்தேகம் தமது ரசிகத் தன்மையின் குறைவைக் குறிப்பிட்டு விடுமோ என்ற தயக்கம் ரசிகரின் குரலில் இழையோடியது.

"கூவமும் இந்தியாவின் தலைவாசல் ஆகலாம், சார்!" என்று தமது ஹாஸ்யத்தை உதிர்த்தார் இவர்கள் அருகே நின்றுகொண்டிருந்த ஒருவர்.

இப்படி எல்லாருடைய கவனத்துக்கும் பலருடைய பாராட்டுதலுக்கும் இலக்காகி நூற்றுக்கும் மேலான ஓவியங்களைக் கொண்ட கண்காட்சியொன்று லலித்கலா அகாடமியின் ஆதரவில் நடைபெற்றது. சம்பிரதாய இந்திய







பாணி ஓவியங்கள் முதல் தற்கால நவீன பாணி ஓவியங்கள் வரை பல்வேறு உத்திகளைக் கொண்ட சித்திரங்கள் அந்தக் கண்காட்சியில் இடம் பெற்றிருந்தன. இந்த ஓவியங்கள் அத்தனையும் சென்னைக் கலைக்



"பெரியவர் பெயர் ரெமிங்டன்;
சின்னவர் பெயர் ஹால்டா!"

சங்கத்தினரால் (மெட்ராஸ் ஆர்ட் கிளப்) வரையப்பட்டவை. இந்தக் கலைச் சங்கத்தில் சித்திரத்தைத் தொழிலாகக் கொண்டவர்களை விட வாழ்க்கையின் பல்வேறு துறைகளில் பணிபுரியும் கலை ஆர்வம் கொண்டவர்களே அதிகம். அரசாங்க அலுவலர், தொழில் துறையாளர்கள், ஆசிரியர்கள், குடும்பத் தலைவி இப்படிப்பட்டவர்களிடம் மறைந்து கிடக்கும் கலை ஆர்வத்தை வெளிப்படுத்து வதே இச்சங்கத்தின் குறிக்கோள் என்பதை அறிந்து சித்திரங்களின் தரத்தை ஒப்பிட்ட போது நமக்கு வியப்பாகத்தான் இருந்தது.

## நிழலாட்டமா, பொம்மலாட்டமா?

இலங்கைக்குப் பாய்ந்து கொண்டிருக்கும் அனுமார் ஆகாயத்தில் பறக்கிறார். கடலி னிடையே தோன்றும் அரக்கியின் வாயினுள் தமது பேருருவைச் சுருக்கிக் கொண்டு புகுந்து காது வழியாக வெளிவருகிறார் வாயு குமாரன்.

இத்தகைய ராமாயணக் காட்சிகள் நடந்தது, மாக்ஸ்முல்லர் பவனத்தின் இந்தோ ஜெர்மன் கழகத்தின் ஆதரவில். இதை நிகழ்த்திக் காட்டியவர் ஆந்திராவைச் சேர்ந்த திரு ரமணமூர்த்தி அவர்கள். பாரதத்தின் தொன்மையான கலைகளில் ஒன்று பொம்மலாட்டமும் நிழலாட்டமும். நசித்துப் போன இதற்குப் புத்துயிர் ஊட்டும் முயற்சிகளில் நம் அரசாங்கத்தார் இப்போது ஈடுபட்டிருக்கிறார்கள். இந்தக் கலையில் விசேஷத் திறமை பெற்றிருக்கிறார் ரமணமூர்த்தி. சென்னை மத்திய தோல் ஆராய்ச்சிக் கழகத்தைச் சேர்ந்த இவர் தமது கதாபாத்திரங்களைக் காகிதம் போலப் பாடம் செய்த மெல்லிய தோலினால் ஆக்கி யுள்ளார். இவைகள் தோற்றத்தில் நமது பழங்காலத் தமிழ்ப் புத்தகங்களில் காணப் படும் ஓவியப் படங்களைப் போலிருக்கின் றன. இந்தத் தோல் அட்டைகளில் பல்வேறு வண்ணங்களையும் அலங்காரங்களையும் உண் டாக்கி இவற்றுக்கு உயிர் அளித்திருக்கிறார். ஒளியூட்டியுள்ள வெள்ளைத் திரையின் பின்னால் இந்தத் தோல் அட்டைகளைத் துணியின் மீது வைத்து, குச்சியின் உதவி யால் அதன் அங்கங்களை இயக்கிக் குரல் கொடுத்துப் பேசச் செய்து கூத்து நடத்து கிறார். நிழல் படிந்த மறுபக்கம் உட்கார்ந் திருக்கும் நமக்கு ஒரு மேடை நாடகத்தைக் காணும் பிரமை ஏற்படுகிறது. முல்லர் பவனத்தினர் குறிப்பிட்டுள்ளபடி இது பொம்மலாட்டமல்ல, வண்ண நிழல் ஆட்டம்தான். பாடல்கள், வடமொழிச் சுலோகங்களைக் குறைத்துக் கொண்டால் காட்சி இன்னும் விறு விறுப்பாக அமைய லாம். ரமணமூர்த்தியின் கலைத் திறன் பாராட்டுக்குரியது. — மூர்த்தி

## நிறை குடம்

மலையாள மகாகவி ஸ்ரீ சங்கர குருப் அவர் களுக்கு இந்த ஆண்டு 'பாரதீய கவிஞன்' என்ற பாராட்டும் ஒரு லட்ச ரூபாய்ப் பரிசும் கிடைத்திருக்கின்றன. காசியி லுள்ள 'பாரதீய ஞான பீடம்' என்ற இலக்கியக் கழகம் இப்பரிசை ஏற்படுத்தி யிருக்கிறது. ஒவ்வோர் ஆண்டிலும் இந்தியா வின் பதினான்கு பாஷைகளில் வெளிவந்துள்ள எல்லா இலக்கியப் படைப்புகளிலும் சிறந்த ஒன்றைத் தேர்ந்தெடுத்து, அதற்கு ஒரு லட்ச ரூபாய் பரிசளிப்பதுதான் இந்தத் திட் டத்தின் நோக்கம். 1920 முதல் 1958 வரை இந்திய மொழிகள் அனைத்திலும் வெளிவந் துள்ள அத்தனை படைப்புக்களிலும் கூர்ந்த கவனத்தைச் செலுத்தி அவைகளில் சிறந்த தென இந்தக் கவிதைத் தொகுப்புக்கு ஒரு லட்ச ரூபாயை வழங்க முன்வந்திருக்கிறது, இந்தப் பாரதீய ஞான பீடம். இந்தியாவி லேயே ஒரு கவிதைத் தொகுதி முப்பத்து எட்டு வருட கால இலக்கிய விளைச்சலில், பதினான்கு மொழி இலக்கியங்களுடன் போட்டி போட்டு வெற்றி பெற்று ஒரு லட்ச ரூபாயைப் பரிசாகப் பெறுவது இதுவே முதல் முறை.

மலையாளக் கவிதைத் தொகுதி 'ஓடக் குழல்' வெற்றி பெற்றது, கவிஞர் உலகுக்கே ஓர் உற்சாகமூட்டும் நிகழ்ச்சியாக அமை கிறது. மனிதனின் ஆத்மீக முன்னேற்றத்தை யும் சகவாழ்வு பற்றியும் பேசுவது இக் கவிதைத் தொகுதி. இந்தி, ஆங்கிலம் போன்ற சில மொழிகளில் மொழிபெயர்க் கப்பட்டுப் பரிசுகளும் பெற்றது.

சங்கரர் அவதரித்த காலடிக்குப் பக்கத் தில் ஒரு கிராமத்தில் 1901ம் வருஷம் பிறந்த ஜி. சங்கரகுருப் அவர்களை மலையாளக் கவி ஞர்கள் 'ஜி' என்று அழைக்கிறார்கள். சிறந்த சொற்பொழிவாளரும்கூட. 'திலகம்' என்ற இலக்கியப் பத்திரிகையின் ஆசிரியராக இருந்து நிறைகுடமாக அமைதியாக நம் வேதங்களில் ஆழ்ந்து கவிதை வாழ்வு வாழ்ந்து வருகிறார்.

- இரா. பச்செட்டிக் சுந்தரராஜன்

# பாலுஸேரி பெனிபிட் சிட்பண்ட் பிரைவேட் லிட்.

(நிறுவியது: 1947)

தலைமைக் காரியாலயம் &
ரிஜிஸ்டர்டு ஆபீஸ்:
பாலுஸேரி பில்டிங்
3, சிங்கராச்சாரி தெரு
சென்னை - 5

கிளைகள்:
புது டெல்லி-1, 3& 5
பெங்களூர்-9
கல்கத்தா - 29
பம்பாய் -1 & 22

## ஏலச் சீட்டுகள் - 1966 ஏப்ரல் ஸீரிஸ்

### பம்பாய் கிளைகள்

**கிங்ஸ் சர்க்கிள் கிளை**
விஜய விஹார்
(ஷண்முகானந்தா சபா அருகில்)
17-A, பினாங் ரோடு, பம்பாய்-22 D. D.
போன்: 471455 தந்தி: GROWRICH

ஏலத் தேதி: 10-4-66
சேரக் கடைசி தேதி: 9-4-66

| வகுப்பு | மாதச் சந்தா | மாதங்கள் | சீட்டுத் தொகை |
|---|---|---|---|
| **குறுகியகால சீட்டுகள்** | | | |
| A | 200/- | 25 | 5000/- |
| B | 100/- | 25 | 2500/- |
| C | 50/- | 25 | 1250/- |
| F | 25/- | 25 | 625/- |
| G | 20/- | 25 | 500/- |
| **நீண்டகால சீட்டுகள்** | | | |
| C | 200/- | 50 | 10000/- |
| A | 100/- | 50 | 5000/- |
| B | 50/- | 50 | 2500/- |
| D | 20/- | 50 | 1000/- |

**போர்ட் (Fort) கிளை**
சட்டாம் மான்ஷன் முதல் மாடி
245, P. D. மெல்லோ ரோடு
(G. P. O. அருகில்) பம்பாய் - 1 B. R.
தந்தி: EVERMANS

ஏலத் தேதி: 23-4-66
சேரக் கடைசி தேதி: 22-4-66

| வகுப்பு | மாதச் சந்தா | மாதங்கள் | சீட்டுத் தொகை |
|---|---|---|---|
| **குறுகியகால சீட்டுகள்** | | | |
| B | 100/- | 25 | 2500/- |
| C | 50/- | 25 | 1250/- |
| F | 25/- | 25 | 625/- |
| G | 20/- | 25 | 500/- |
| J | 10/- | 25 | 250/- |
| **நீண்டகால சீட்டுகள்** | | | |
| A | 100/- | 50 | 5000/- |
| B | 50/- | 50 | 2500/- |
| D | 20/- | 50 | 1000/- |

**கிங்ஸ் சர்க்கிள் கிளை:**
வேலை நேரம்: காலை 8 முதல் 10-30 வரை
மாலை 4 முதல் இரவு 8 வரை
வார விடுமுறை நாள் — வெள்ளி

**போர்ட் (Fort) கிளை:**
வேலை நேரம்: காலை 11 முதல்
மாலை 6 மணி வரை
வார விடுமுறை நாள் — ஞாயிறு

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது

**பாலுஸேரி மூலம் சேமிப்புகளைப் பெருக்கி பயனடையுங்கள்**

சகல வீட்டு வசதிகளுடனும் சுகமான பிரயாணத்திற்கு




தி ஷிப்பிங் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா லிமிடெட்

(ஒரு இந்திய அரசாங்கத்தின் நிறுவனம்)

ரிஜிஸ்டர்டு ஆபீஸ்:

ஸ்டீல் கிரீட் ஹவுஸ் 4வது மாடி, டின்ஷாவாச்சா ரோடு, பம்பாய்-1

சென்னை - நாகப்பட்டினம் - ஸ்ட்ரெயிட்ஸ்



# t. S. S. ஸ்டேட் ஆப் மதராஸ்

| சென்னையிலிருந்து | நாகப்பட்டினத்திலிருந்து |
|---|---|
| 15-4-1966 | 16-4-1966 |

அன்று புறப்படும்

இதர விவரங்களுக்கு கீழ்க்கண்ட ஏஜண்டுகளை அணுகவும்

## K. P. V. ஷேக் முகம்மது ராவுத்தர் & கோ.

41 லிங்கி செட்டித் தெரு, சென்னை-1
தபால் பெட்டி நெ. 1264
போன்: 22761-3 தந்தி: "SHIPINDIA"

பண்டகசாலை
நாகப்பட்டினம்
போன்: 272 தந்தி: "SHIPINDIA"




திருவல்லிக்கேணிப் பள்ளிக்கூடம் ஆச்சரியகரமான வகையில் வெற்றி கண்டு விட்டது. சென்னைவாழ் பெற்றோர்கள் பலருக்குத் தங்கள் பெண்களைப் படிக்க வைப்பதில் ஆர்வம் ஏற்பட்டு விட்டது. பள்ளி தொடங்கப்பட்ட 1913ம் ஆண்டின் முடிவில் ஆரம்பப் பள்ளி, உயர்தரப் பள்ளிப் பகுதிகளில் 221 பெண்களும் ஆசிரியைப் பயிற்சிப் பகுதியில் 29 மாணவிகளும் இருந்தனர். இப்போது ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு, 455 மாணவிகளும் 79 மாணவ ஆசிரியைகளும் இருந்தனர். இடம் இல்லாத காரணத்தால் பலருக்குப் பள்ளியில் சேர அநுமதி மறுக்கப்பட்டிருந்த போதிலும் உயர்நிலைப் பள்ளிப் பகுதியில் மட்டுமே 163 பெண்கள் இருந்தனர். இது சென்னை ராஜதானியிலுள்ள வேறு எந்த ஹிந்து உயர்நிலைப் பள்ளியின் மாணவர் தொகையினைக் காட்டிலும் அதிகமானதாக இருந்தது. உண்மையில் பள்ளிக்கு வந்து பார்த்த பலருக்கு ஒரே ஒரு குறைதான் தோன்றியது. அது அந்தக் கட்டடத்தின் பழமையான இருண்ட கோலம்தான்.

ஒருவாறாக, இப்போது அதிலும் மாறுதல் ஏற்படவிருந்தது. சகோதரியும் மிஸ் லின்ச்சும் மிஸ் பிரேகரும் எவ்விடத்தில் பள்ளி அமைய வேண்டும் என்று ஆசைப்பட்டார்களோ அதே இடத்தில் புதிய கட்டடம் கட்டித் தரச் சர்க்கார் சம்மதித்து விட்டனர். விதவை இல்லத்துக்கு அண்மையிலிருந்த காலி மனையில் புதிய கட்டடம் கட்டி முடிக்கப்பட்டு இவர்களுக்குக் கிடைப்பதற்கு இனியும் இரண்டு ஆண்டுகள் பிடிக்கும். எனினும் பள்ளிக்கூடம் கட்டப்படும் என்ற தீர்மானத்தினால் சந்தோஷம் அடைந்த அவர்கள் எல்லோருக்கும், நீண்ட நாட்கள் காத்திருப்பது என்பது ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை. வருங்காலத்தைப் பெரு நம்பிக்கையோடு காணும் நேரம் கடைசியாக வந்தே விட்டது.

அப்போதுதான் அந்தப் புயலும் மூண்டது!

லார்டு செம்ஸ்போர்டு மிஸ் லின்ச்சுக்குச் சொல்லி யனுப்பினார். ஐஸ்ஹவுஸிலுள்ள விதவைகள் விடுதி, குறிப்பாகப் பிராமணப் பெண்களுக்கென்று ஏன் ஒதுக்கப்பட வேண்டும் என்று அவர் கேட்டார். இது போன்ற வித்தியாச மனப்பான்மை மிகவும் அநியாயமானதல்லவா என்றார்.

உண்மையில் அங்கு எந்த விதமான வித்தியாசமும் பாராட்டப்படுவதில்லை என்று மிஸ் லின்ச் பதிலளித்தாள். பிராமணரல்லாத இதர பல தென்னிந்திய ஜாதியினர் பதினேழு, பதினெட்டு வயதுக்கு முன் சாதாரணமாக மணப்பதில்லை என்று அவள் விளக்கினாள். பள்ளிப் படிப்பினால் பயன் பெறக் கூடியவர் குறைந்த வய

றுடையவர்களே. குழந்தை விதவைகள் பிராமண குலத்தில்தான் மிகுதி. பிராமணர்கள் கல்வி பெறுவதிலும் அவர்களுடைய தேவைகளிலும் தனக்கு எவ்வளவு சிரத்தை இருந்ததோ அதே அளவு பிராமணர் அல்லாதாரிடமும் இருந்தது என்பதை அவள் உறுதியாகக் கூறினாள். கிறிஸ்துவப் பெண்களுக்காகவும் பிராமணர் அல்லாத இந்துப் பெண்களுக்காகவும் விடுதிகள் ஆரம்பிப்பதற்குச் சர்க்காரிடம் தான் ஏற்கனவே அனுமதி கோரியிருப்பதைச் சுட்டிக்காட்டினாள். அதிலிருந்து தனக்கு அவர்களிடமும் சிரத்தை உண்டு என்பது தெளிவாகிறது என்று எடுத்துக் கூறினாள். சாரதா லேடீஸ் யூனியன் அங்கத்தினர்களுடனும் சகோதரியுடனும் சேர்ந்து அவள் மீனவர்களின் குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடம் நடத்துவதற்குப் பணம் திரட்ட உதவியிருந்தாள். ஆனால் இதை மிஸ் லிஞ்ச் வார்டு செம்ஸ்போர்டிடம் இப்போது சொல்லிக் கொண்டு இருக்கவில்லை.

லார்டு செம்ஸ்போர்டு திருப்தியடைந்து விட்டார் என்றே தோன்றியது. குறை கண்ட மற்றவர்களும் தாற்காலிகமாகப் பேசாமல் இருந்தார்கள்.

1917ம் வருஷம் வார்டு செம்ஸ்போர்டும் மாண்டேகுவும் திட்டமிடத் தொடங்கிய புதிய அரசியல் நிர்ணயச் சட்டம் 1920ம் வருடம் பூர்த்தியாகியது. காந்திஜியின் தலைமையின் கீழ் இந்திய தேசிய காங்கிரஸ் வரப் போகும் தேர்தல்களைப் பகிஷ்காரம் செய்யத் திட்டமிட்டிருந்தது. சென்னையில் ஏறக்குறைய இதே சமயத்தில் ஜஸ்டிஸ் கட்சி தோன்றியது. அதனுடைய திட்டத்தில் முக்கியமான அம்சம், சென்னை ராஜதானியில் உள்ள பல்வேறு ஜாதியினர் மதத்தினர் மற்றும் வகுப்பினரின் தொகை விகிதாசாரத்தில் அவர்களுக்குப் பொதுப் பணி உத்தியோகங்கள் பகிர்ந்து கொடுக்கப்பட வேண்டும் என்பது. அப்போதுதான் இப் புதுக் கட்சியின் அங்கத்தினர் ஒருவர், விதவைகள் இல்லம் பற்றிய வார்டு செம்ஸ்போர்டின் கண்டனத்தை எடுத்துக்காட்டிப் பத்திரிகைகளுக்குக் கடிதம் எழுதியிருந்தார். ஐஸ்ஹவுஸில் ஜாதி வித்தியாசமின்றி எல்லா விதவைகளும் பொதுவாக அனுமதிக்கப்பட வேண்டும்; இல்லையேல் அதை மூடிவிட வேண்டும்; மணமாகாத பெண்கள் ஒருவரையும் அங்கு வசிக்கக் கண்டிப்பாக அனுமதிக்கக் கூடாது என்றெல்லாம் எழுதியிருந்தார்.

இதைத் தொடர்ந்து, அதை விடக் கொடூரமான நிந்தனை ஒன்று எதிர்பாராத இடத்திலிருந்து வந்தது. திருவல்லிக்கேணிப் பள்ளியைச் சேர்ந்த ஓர் ஆசிரியையே சகோதரி சுப்புலக்ஷ்மி ஜாதி அடிப்படையில் பட்சபாதம் காட்டுகிறாள் என்று குறை கூறி ஒரு தலைவருக்குக் கடிதம் எழுதினாள். ஆசிரியைகள் கூட்டம் ஒன்றுக்குத் தலைமை தாங்கியபோது, மற்றினும் நியாய மற்ற விதத்தில் பிராமணர் அல்லாத பெண்கள் மேல் படிப்புகளுக்குப் போக விடாமல் சகோதரி தடுத்து விட்டாள் என்பது குற்றச்சாட்டு. இரண்டு பெண்கள் — இவர்களில் ஒருத்தி சகோதரி தனக்கு நெருங்கிய நண்பர் என்று நினைத்து வந்த செம்படவர் ஒருவரின் பெண் — பத்திரிகைகளுக்கு இதே போன்ற குற்றச்சாட்டுகளை எழுதியிருந்தார்கள்.

பொதுக் கல்வித் துறை முதல்வருக்கு இந்தக் குற்றச்சாட்டுகளை உத்தியோகபூர்வமாக விசாரிக்கும்படி உத்தரவு வந்தது. ஜாதிமத பேதங்கள் பள்ளியில் இருக்கக் கூடாது என்று எவ்வளவோ பாடுபட்டு ஓரளவு வெற்றியும் கண்டிருந்த சகோதரியும் மிஸ் பிரேகரும் இதைக் கேட்டு மிகவும் கலங்கி விட்டனர். கவனமாகப் பூட்டி வைக்கப்பட்டிருந்த மாணவிகளின் ஜாதி பற்றிய விவரங்கள் இப்போது வெளியே எடுக்கப்பட்டுப் பரிசீலனைக்கு வந்தன. லிஸ்டர் மீது சுமத்தப்பட்ட வீண் பழிகளை எளிதாகத் துடைத்துவிட முடிந்தாலும், பழைய சந்தோஷமான சூழ்நிலை மீண்டும் நிலவுவது சுலபசாத்தியமல்ல என்றே தோன்றியது.

குறைகூறுவோர் அதிகரித்துக் கொண்டே வந்தனர். கிறிஸ்துவப் பெண்களுக்கும், பிராமணரல்லாத இந்துக்களுக்குமுள்ள விடுதிகள் நெருக்கடியான அழுக்குப் பிடித்த திருவல்லிக்கேணித் தெருவில் இருக்க, அதே சமயம் பிராமணப் பெண்கள் மட்டும் சமுத்திரக் கரையில் அழகான மாளிகையில் இருப்பானேன்? தன் பராமரிப்பின் கீழ் இருந்த இளம் விதவைகள் நிற்க நிழலின்றித் தவித்துக் கொண்டிருந்த சமயம் இந்த ஐஸ்ஹவுஸ் எதிர்பாராத விதத்தில் அதிருஷ்டவசமாகக் கிடைத்தது என்று லிஸ்டர் சுப்புலக்ஷ்மி அவர்களுக்குப் புரிய வைக்க முயலுவதில் பயனில்லை. நான்டனில் தங்கித் திருவல்லிக்கேணிப் பள்ளியில் படித்த மற்றப் பெண்களும் அழகான இடத்தில் குடியிருக்க வேண்டும் என்றும் அவளுக்கு ஆசைதான். ஆனால் ஒரு தடவை அதிர்ஷ்டம் அடித்தது போல் இவர்களுக்கும் எதிர்பாராத வாய்ப்புக்கள் கிட்டும் என்று எவ்வாறு நினைக்க முடியும்?

இந்த விஷயமும் ஜஸ்டிஸ் கட்சி அங்கத்தினர்களின் கண்டனத்துக்கு உள்ளாகியது. அவர்களுடைய செல்வாக்கு வளர்ந்து கொண்டே இருந்தது. அடுத்த தேர்தல் வந்த போது அவர்களுக்கு நிறைய இடங்கள் கிடைத்தன. 1921ம் ஆண்டு ஜனவரி மாதம் கவர்னர் லார்டு வில்லிங்டன் ஜஸ்டிஸ் கட்சித் தலைவரை மாகாண அரசு உருவாக்க அழைத்தார்.

லேடி வில்லிங்டன் சென்னைக்கு வந்தது முதல் திருவல்லிக்கேணிப் பள்ளியிலும் பிராமண விதவைகள் விடுதியிலும் மிக்க சிரத்தை எடுத்துக் கொண்டிருந்தாள். கவர்னர் மாளிகையில் பிரமுகர்கள் வந்து தங்கிய போது அவர்கள் முன்னிலையில் ஐஸ்ஹவுஸ் பெண்களைக் கொண்டு கலை நிகழ்ச்சிகள் நடத்தும்படி சகோதரி சுப்பு

லக்ஷ்மிக்குப் பல சந்தர்ப்பங்களில் வேண்டுகோள் வந்தது. கவர்னரின் மனைவி தனித்திருக்க நேரும்போதெல்லாம், மாலையில் காற்று வாங்கக் கடற்கரைக்குச் சென்று அப்படியே ஐஸ்ஹவுஸில் நின்று, சகோதரியுடனும் மற்றப் பெண்களுடனும் பேசிக் கொண்டிருப்பாள். சில சமயம் மாமல்லபுரத்தின் சரித்திர காலத்திய சிற்ப வடிவங்களைக் காண்பதற்கு கவர்னரின் படகில் அவர்களை அழைத்துச் செல்வாள். புதிய பள்ளி கட்டிய பிறகு அதற்கும், அதையொட்டிய ஆசிரியப் பயிற்சிக் கல்லூரிக்கும் இன்றையத் திருவல்லிக்கேணிப் பள்ளிக் கூடத்தின் வளர்ச்சியில் மிகவும் அக்கறை கொண்டிருந்த லேடி வில்லிங்டன் பெயரைத் தான் சூட்ட வேண்டும், அதுதான் நியாயம் என்று எல்லோரும் ஒப்புக் கொண்டார்கள்.

ஜஸ்டிஸ் கட்சியின் அப்போதைய தலைவர் ஸ்ரீ சுப்பராயலு ரெட்டி 1921ம் வருடம் மார்ச் மாதம் ஐஸ் ஹவுஸுக்கு விஜயம் செய்தார். சகோதரியும் சித்தியும் மிஸ் பிரேகரும் இந்த விஜயத்தைக் கவலையோடு எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள். வைதிக மாணவர்களின் ஆதரவுக்காகப் பாடுபட்டுப் பெருமளவுக்குக் கண்டிருந்த வெற்றி பிசு பிசுத்துப் போய் விடுமோ? அந்தப் போராட்டத்தை மீண்டும் ஆரம்பிக்க வேண்டியிருக்குமோ என்று அஞ்சினார்கள்.

ஸ்ரீ சுப்பராயலு ரெட்டி மிகவும் இனிமையாக, நேசு பாவத்துடன் பழகினார். சகோதரி சுப்புலக்ஷ்மியையும், சித்தி வாலாம்பாளையும் அவர்கள் இதுவரை செய்து வந்த அருமையான பணிக்குப் பாராட்டினார். மேலும் அவர்கள் வெகு நாட்கள் ஐஸ் ஹவுஸைத் தொடர்ந்து நடத்த வேண்டும் என்று தாம் விரும்புவதாகக் கூறினார். எனினும் இனி வருங்காலத்தில் இந்த விடுதியில் பிராமணர் அல்லாதாரும் சேர்க்கப்பட வேண்டும், என்றும், விதவைகள் அல்லாதவர்கள் எந்த ஜாதியாக இருந்தாலும் நீக்கப்பட வேண்டும் என்றும் சட்டம் மாறியிருப்பதாகத் தெரிவித்தார்.

சகோதரியும், மிஸ் பிரேகரும் எதிர் பார்த்தது போல் இப் புதிய தீர்மானங்களின் விளைவு அவ்வளவு விரும்பத் தகாததாக இருக்கவில்லை. கல்யாணம் ஆகாத பெண்களுக்கும் சுமங்கலிகளுக்கும் தனி விடுதி ஏற்படுத்த வேண்டும். இதற்குத் தனி நபர்களிடம் நிதி கோரிச் சேகரிக்க வேண்டும். புதிய சட்டத்தின் கீழ் ஐஸ்ஹவுஸில் சேர்க்கப் படுவோரில் புலால் உண்போருக்குத் தனியாகப் போஜன வசதிகள் செய்யப்படலாம். பிராமணர்கள் அல்லாத விதவைப் பெண்கள் பெரும்பாலும் பள்ளிக்கூடத்தில் சேருவதற்கு உரிய வயதினராக இருக்கமாட்டார்கள். முதியோர்களான அவர்களுக்கு ஆசிரியப் பயிற்சி அளிக்கலாம். இவர்கள் எண்ணிக்கையில் மிக அதிகமாக இல்லாவிட்டால் இப் போதுள்ள சூழ்நிலையிலேயே ஒன்றிவிடலாம்.

அவர்கள் அவ்வாறே வாழ்ந்தார்கள். மிஸ் பிரேகர் எனக்கு எழுதுகையில் ''சகோதரியும் பிற பெண்களும் புதிதாக வருபவர்களையும் பிராமணர்களாக்கி விடுவது என்று தீர்மானித்து விட்டார்கள்! அவர்கள் ஆறு பேர்கள் இருந்தார்கள் என்பதாக எனக்கு நினைவு. அதுவரை அங்கிருந்த சந்தோஷச் சூழ்நிலை சிறிதும் மாறவில்லை'' என்று குறிப்பிட்டிருக்கிறாள்.

உண்மையில் இதற்கு முன்பேயே கூடப் பிராமண குலத்தில் பிறவாத ஒருத்தி அங்கு வசித்து வந்தாள்.

அவள் ஒரு ஜமீன்தாரின் மருமகள். இந்த ஜமீன்தார் பிரும்மஞான சபையில் சேர்ந்து விட்டபடியால் சபையின் தலைமை இடமான அடையாற்றில் வீடு எடுத்துக் கொண்டிருந்தார். அவர் பக்தி சீலர், தயாள குணமுடையவர். ஆனால் அவருடைய மகன் —இப்பெண்ணின் கணவன் — கேவலமான, அருவருப்பான ஒரு பிராணி. அவன் பதினாறு பதினேழு வயதே நிரம்பிய தன் மனைவியை மிகவும் சித்ரவதையான முறையில் துன்புறுத்தி வந்தான்.

ஒரு சமயம் அவன் ஐரோப்பாவுக்குச் சென்றிருந்தபோது ஒரு நாள் காலை அவள் வீட்டை விட்டு வெளியேறிக் கடலில் மூழ்கிச் சாவதற்காக எலியட்ஸ் பீச் பக்கமாக நடந்து சென்று கொண்டிருந்தாள்.

அந்தப் பெண் கடற் கரையில் யாரும் இருக்கமாட்டார்கள் என்று எதிர்பார்த்தாள். அவள் கிளம்பும்போது இருட்டாகவே இருந்தது. இப்பொழுது விடியும் சமயம். அவள் தண்ணீரில் இறங்கும் தருணத்தில் ஒரு செம்படவன் தன்னைக் கவனித்துக் கொண்டிருப்

---



அடுத்த இதழில்

**புத்தகத் தொழிலில் சிக்கல்கள்**

—பேட்டிக் கட்டுரை

**கி. வா. ஜ. பற்றி கி. ஜ. ர. வழங்கும்**

—விசேஷக் கட்டுரை

பதைப் பார்த்துவிட்டாள். அதனால் கடலில் இறங்காமல் நேரே நடந்து சென்றான். அவன் அவளைத் தன் கண் பார்வையினின் றும் அகல விடவில்லை. தான் நீரில் மூழ்கி னாலும் அவன் தன்னைக் காப்பாற்றிவிடுவான் என்பதனால் பேசாமல் வீடு திரும்பி விட்டாள் அவள்.

அந்த மீனவன் இவன் யார் என்று அடை யாளம் கண்டு கொண்டு அவன் என்ன செய்ய இருந்தான் என்பதையும் ஊகித்தவனாய் ஜமீன்தாரைப் பேட்டி கண்டு தான் கண் டதையெல்லாம் விவரித்து விட்டான்.

''ஜமீன்தாருக்கு அவருடைய நண்பர்கள் அந்தப் பெண்ணை என்னிடம் ஒப்படைக்கும் படி யோசனை கூறினார்களாம். நான் ஐஸ் ஹவுஸில் அவளைச் சேர்த்துக் கொண்டபோது அவள் மற்ற பெண்களைப் போலவே நன்றாகப் படிக்க வேண்டுமென்று கூறினேன்'' என்று பழைய நினைவில் ஆழ்ந்து அப்பெண்ணின் கதையை எனக்கு விவரித்தார் சகோதரி.

ஆனால் அவளுக்குப் படிப்பே ஏறவில்லை. எப்போது பார்த்தாலும் சகோதரியுடன் தனித்து இருப்பதையும், தன் கஷ்டங்களை அவளிடம் கூறுவதையும் தவிர வேறு ஒன்றை யுமே அவள் விரும்பியதாகத் தெரியவில்லை.

சகோதரி பல மணி நேரம் அவள் கூறு வதைக் கேட்டுக் கொண்டிருப்பாள். அவள் தன் மனத்தைக் குடைந்தெடுத்தவற்றையெல் லாம் கொட்டித் தீர்த்துவிட்டால் பழைய நினைவுகளிலிருந்து விடுபட்டு விடுவாள் என்று நம்பினாள் சகோதரி.

ஆனால் அது நடக்கவில்லை.

''நீ படிப்பில் முன்னேறாவிட்டால் பள்ளிக் கூடத்தில் சேரவும் முடியாது. சம்பாதிக்க வும் முடியாது. அம்மனிதனின் பிடியி லிருந்து நீங்கவும் முடியாது'' என்று சகோ தரி எச்சரித்தாள்.

அந்தப் பெண்ணும் அவ்வாறே உழைத் துப் படிக்க முயன்று பார்த்தாள். ஆனால் வெற்றி காண முடியவில்லை. ஐரோப்பாவி லிருந்து அவள் கணவன் திரும்பி விட்டான். சில தினங்கள் கழித்துத் தன் வக்கீலைச் சுப்புலக்ஷ்மியைப் பார்த்து வர அனுப்பினான்.

அந்த இளம் மனைவி உடனே தன் கணவ னிடம் திரும்ப வேண்டும் என்று அவ்வக்கீல் கூறினார். அவ்வாறு அவள் திரும்பாவிட்டால் அவளைப் பலவந்தமாக அழைத்து வந்து விட்டதாக சுப்புலக்ஷ்மி மீது குற்றம் சாட்டப் படும். கடத்தல் என்ற சொல் உபயோகப் படுத்தப்படவில்லையே தவிர வக்கீலின் சிந் தனைப் போக்கு தெளிவாகப் புரிந்தது.

''அவர் சொல்வது அனைத்தும் பைத்தியக் காரத்தனம் என்று நான் கூறினேன். 'இந்தப் பெண்ணுடைய மாமனாரின் வேண்டுகோளின் படிதான் இவளை இங்கு ஏற்றுக் கொண் டிருக்கிறேன். இவள் இங்கு இருப்பதை நான் யாரிடமிருந்தும் எப்போதும் மறைத்து வைக்கவில்லை' என்றேன். அவள் கணவன் தன் மண வாழ்க்கை உரிமைக்காகக் கச்சேரியில் நியாயம் தேடுவதாகப் பயமுறுத்தினான். ஆனால் அவன் அவ்வாறு செய்யவில்லை. செய்திருந்தால் அவனுடைய கயமை பத் திரிகைகள் எல்லாவற்றிலும் வெளிவந்துவிட் டிருக்கும். அதுதான் அவனை யோசிக்கவும் நிதானிக்கவும் செய்திருக்க வேண்டுமென்று நினைக்கிறேன்.''

''அந்தப் பெண் உங்களுடனேயே இருந்து விட்டாளா?'' என்று நான் சகோதரியை இப்போது கேட்டேன்.

''இல்லை, வெகு நாட்களுக்குப் பிறகு அவள் கணவன் இரண்டாம் தாரமாகக் கல்யாணம் செய்து கொண்டு விட்டதாக அவளுக்குத் தெரிய வந்தது. அச் செய்தியை என்னிடம் சொல்லிவிட்டு அவள் கூறினாள்: 'நான் அவரிடமே சென்று பார்க்கிறேன். எனக்கு ஒரு மகன் பிறந்தால் அவரை விட்டு மீண்டும் வெளியேறி விடுகிறேன். அப்போது அவர் என் வாழ்நாள் முழுவதும் எனக்குத் தேவைப்பட்ட பணத்தைத் தந்துதான் ஆக வேண்டும்.' இவ்விதம் சொல்லிவிட்டு அவள் போய் விட்டாள். அவளுக்குக் குழந்தை பிறந்ததா என்று எனக்குத் தெரியவில்லை. அவளைப் பற்றிப் பிறகு நான் ஒன்றுமே கேள் விப்படவில்லை.''

(தொடரும்)

விக்கோ
உருவாக்கிய
மற்றொரு பிரபல
அழகு சாதனம்

ஒப்பற்ற அழகு வாய்ந்த
விக்கோ டர்மெரிக் வானிஷிங் க்ரீம் ஈடு இணை இல்லாதது. வசீகரத் தோற்றத்திற்கு மிகவும் உதவியாக இருப்பதினால், அது உண்மை மதிப் புக்களைப் பெரிதும் பெற்றிருக்கிறது. மேலும் விக்கோ டர்மெரிக் வானிஷிங் க்ரீமை யாவரும் பயன்படுத்திப் பயன் அடையலாம்.

ஆண்களும், க்ஷவரத்திற்குப் பின் உபயோகப் படுத்தலாம். அதில் சிறப்பு வாய்ந்த கிருமிநாசினி மருந்துகளின் குணங்கள் அடங்கியுள்ளதுடன் சருமத்தைப் போஷித்துப் பாதுகாக்கவல்லது. இது ஒரு அழகு சாதனம் மட்டுமல்ல ரோமம் வளர்வதைத் தடுக்கிறது. இது பண்டைக் கால முதற்கொண்டே அனுபவப்பட்ட விஷயம்.




*STOCKISTS :* MADRAS : R. L. GOWDER & Co., 59, Bunder Street
COIMBATORE : N. DESAI GOWNDER & Co., Avanashi Road
BANGALORE : K. S. GOWDER & Co., Subhedar Chatram Street

# ஜீவகீதம் ஜெகசிற்பியன்

## அத்தியாயம் அறுபத்தாறு

## முடிவு என்ன?

பர்மாவிலிருந்து சமீபத்தில்தான் அகதியாகத் தாயகம் திரும்பியவன் சபேசன். ஆகவே, இந்தியாவிலுள்ள அரசியல் கட்சிகளைப்பற்றிய விஷய ஞானத்தில் அவன் இன்னும் போதிய தெளிவு பெறவில்லை என்பது அவனுக்கே தெரிந்துதான் இருந்தது.

இதைப் புரிந்து கொண்டவள் போல், ''இன்னொரு தகவலையும் சொல்கிறேன்'' என்று அடைத்த குரலில் ஆரம்பித்தாள் சந்தியா: ''அந்தப் போலி அகதி வாலிபனோடும், மலையாளிப்பேர் வழியோடும் இப்போது ஒரு சீனக்காரனும் கூட்டுச் சேர்ந்திருக்கிறான். அவனை நீங்களும் பார்த்திருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் நினைப்பது போல் அவன் அந்தப் பல்கட்டும் 'கிளினிக்'கின் சொந்தக்காரனல்ல; அவனுடைய உறவினன் என்று இவன் எங்கிருந்தோ வந்து சேர்ந்திருக்கிறான்.''

ஒன்றின் மேல் ஒன்றாக விழுந்த இடிகளின் அதிர்ச்சிகளைத் தாளமாட்டாமல் வெலவெலத்துப்போன சபேசன் அவளையே விழியசைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

முகம் சவமாக வெளுத்துக் கிடக்கத் தலை குனிந்து மௌனமாயிருந்த சந்தியா சட்டென்று நிமிர்ந்து, ''ஆமாம்; இந்த விவரங்களையெல்லாம் இப்போது உங்களிடம் நான் ஏன் வந்து சொன்னேன் தெரியுமா?'' என்று துயரம் கப்பிய குரலில் கேட்டாள்.

பிரமை பிடித்தவன் மாதிரி விறைத்து உட்கார்ந்திருந்த சபேசன் ஒரு திமிறலுடன் அவளை நோக்கினான்.

''கவுண்டன்பாளையம் முகாமில் அந்தப் போலி அகதி வாலிபரையும், அவரது மலையாளி நண்பரையும் நீங்கள் பார்த்தபோதே அவர்கள் மீது உங்களுக்கு ஏதோ ஒருவித அச்சமும் வெறுப்பும் ஏற்பட்டதை நான் அறிவேன். பிறகு அவ்விருவரையும் இங்கே என் வீட்டில் பார்த்தபின் இனம் புரியாத ஒரு சந்தேகமும் உங்கள் மனத்தில் முளை விட்டதை



உணர்ந்தேன். இல்லையானால், என் தந்தை உங்களை மறுநாள் தம்மை வந்து பார்க்கச் சொன்னதை நீங்கள் தவிர்க்க நினைத்திருக்க மாட்டீர்கள். ஆனால் எனக்கு அதைப் பற்றியெல்லாம் அவ்வளவு கவலையில்லை. நான் கவலைப்பட்ட விஷயமே வேறு. அதாவது, உங்களின் வெறுப்புக்கும் சந்தேகத்துக்கும் இலக்கான அவ்விருவரோடும் என் தந்தை உறவு கொண்டிருக்கிறார்; அதனால் அவருடன் இருந்து வரும் அவரது சொந்த மகளான என்மீதும் அந்தச் சந்தேகத்தின் நிழலை நீங்கள் படரவிட்டுப் பார்க்கக் கூடும். அப்படி ஒரு நிலைமையை என்னால் கற்பனை செய்து பார்க்கவும் நடுக்கமாகி விட்டது. கடந்த இரண்டு மூன்று தினங்களாக எனக்குத் தூக்கமே இல்லை. அந்த வேதனையிலிருந்து மீளத்தான் வெகு நேரச் சிந்தனைக்குப் பின், இந்த விவரங்களை உங்களிடம் எப்படியும் சொல்லிவிடுவது என்ற தீர்மானத்தோடு இங்கு வந்தேன்.'' — பெரிய பாரத்தை இறக்கிப் போட்டவள் மாதிரி பெருமூச்சுவிட்டாள் சந்தியா.

பனிப் பாறைபோல் முகம் இறுகி உட்கார்ந்திருந்தான் சபேசன். சில விநாடிகளுக்குப் பின் சடாரென்று எழுந்து நின்று, ''இவ்வளவும் பேசுகிறாயே, உன் தந்தையின் விஷயம் என்ன? அவருக்கு இந்தத் தேசத் துரோக நடவடிக்கைகளில் தொடர்பு இல்



லேயா? இல்லையென்றால் அவ்விரு விஷமிகளும் இவருடன் ஏன் அத்தனை நெருங்கிய உறவு வைத்திருக்கிறார்கள்?'' என்று தன்னை மீறிய ஆத்திரக் குமுறலுடன் கேட்டான்.

சந்தியாவின் பூவுடல் கிடுகிடுவென்று நடுங்க ஆரம்பித்து விட்டது. பயப் பிராந்தியுடன் அவனை வெறித்துப் பார்த்தாள்.

''சொல், சந்தியா! உன் தந்தையும் அந்தத் தீய சக்திகளோடு ஒரு கூட்டாளியாக இருப்பவர்தானே?''

சந்தியாவின் நடுக்கம் அதிகரித்தது. மெல்ல எழுந்து நின்றுகொண்டாள்.

''எனக்கு இப்போதுதான் புரிகிறது. உன் தந்தை என்னை ஏன் தம்மை வந்து சந்திக்கச் சொன்னார் என்பது! அவர்களுக்கு வெளி இடங்களிலிருந்து நிறையப் பணம் வருகிறது. அதைக் கொண்டு இங்கே ஏதேதோ சதிக் காரியங்கள் நடத்தத் திட்டமிட்டிருக்கிறார்கள். நான் வறுமையில் உழல்பவன் என்பதையும், வாழ்க்கையில் பல ஏமாற்றங்களைக் கண்டு அகதியாக இந்நாட்டுக்கு வந்து அல்லல்பட்டுக் கொண்டிருப்பவன் என்பதையும் தெரிந்துகொண்டு, என்னைப் பணத்தால் அடித்து அவர்களின் நடவடிக்கைகளுக்குத் துணையாக்கிக் கொள்ள நினைத்திருக்கிறார்கள், இல்லையா?''

பாய்ந்து வந்த சந்தியா அவன் வாயைத் தன் பூப்போன்ற கையால் பொத்திக்கொண்டு முகத்தைத் தோள்பட்டை பக்கமாகத் திருப்பி விம்மி விம்மி அழுதாள்.

அவள் கையை விலக்கி விட்டுச் சற்றே பின்னால் நகர்ந்து கொண்ட சபேசன், ''சந்தியா! உன் மௌனமே எனக்குச் சொல்லி விட்டது, உனது தந்தையும் அந்தப் பயங்கரவாதிகளுடன் கூட்டுச் சேர்ந்தவர் தான் என்று!'' என்றான் அடித் தொண்டையில்.

''இல்லை, இல்லை'' என்று குமுறிய சந்தியா நடுங்கிக்கொண்டு மேலும் சொன்னாள்: ''என் தந்தை அந்தத் துரோகிகளின் கூட்டாளி அல்ல; அவர்களின் கையாள்!''

சபேசன் அவளை வெறித்துப் பார்த்தான். அவள் தொடர்ந்து கூறினாள்: ''என் தந்தையைப் பற்றி நான் ஏற்கனவே உங்களிடம் சொல்லியிருக்கிறேன். அவர் தம் வாழ்நாளில் பல தோல்விகளையும், துன்ப துயரங்களையும் அநுபவித்தவர். சகிக்க முடியாத வறுமையில் உழல்பவர். இவை தவிர, இயற்கையாகவே சுயநலக் குணமும், யார் எதைச் சொன்னாலும் அதைச் சீர் தூக்கிப் பாராமல் அப்படியே நம்பி விடுகிற வெகுளித்தனமும் கொண்டவர். இதையெல்லாம் நன்கு தெரிந்துகொண்ட அந்தப் போலி அகதி வாலிபர் அவரை நன்றாக ஏமாற்றித் தம் கைக்குள் போட்டுக்கொண்டு விட்டிருக்கிறார். பணத்தைக் கொடுத்துக் கொடுத்து அவரை ஓர் அடிமையைவிடக் கேவலமாக ஆட்டிப் படைக்கிறார்.''

இதைக் கேட்ட சபேசனின் குமுறிய மனம் அப்படியே தொய்ந்து தளர்ந்து விட்டது. நெற்றிச் சருமத்தை வருடிக் கொண்டு சில விநாடிகள் மௌனமாயிருந்த அவன், ''அது சரி; இப்போதும் அவர்கள் ஏதேனும் தேச விரோதச் சதித் திட்டம் போட்டு வருகிறார்களா?'' என்று உள்ளார்ந்த பீதியுடன் வினவினான்.

'ஆம்' என்பது போல் தலையசைத்த சந்தியா, ''நான் இங்கு வந்ததன் முக்கிய காரணமே அதை உங்களிடம் சொல்லத்தான்'' என்றாள்.

''சொல், சந்தியா! சீக்கிரம் சொல்!'' என்று துடிப்புடன் கேட்டான் சபேசன்.

அவள் 'முடியாது' என்பது போல் தன் தலையை வேகமாக ஆட்டினாள்.

''என்ன! சொல்ல மாட்டாயா?''

''அதை நான் எப்படிச் சொல்வேன்?'' என்று மறுகிப் புலம்பினாள் சந்தியா. ''நீங்கள் இந்தத் தேசத்தை எந்த அளவுக்கு நேசிக்கிறீர்களோ, அதே அளவு நேசம் எனக்கும் உண்டு. ஆனால்....ஆனால்.. என் தந்தை?.... அவர் மீதும் அந்த அளவு பாசம் எனது நெஞ்சில் உறைந்து கிடக்கிறதே! அதை எப்படித் தவிர்ப்பேன்? அதை எங்ஙனம் மறைப்பேன்?.....''

கனலாகத் தகித்துக் கொண்டிருந்த சபேசனின் உணர்ச்சிகள் இதைக் கேட்டதும் அப்படியே சில்லிட்டு இறுகிப் போயின. தலையைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்துவிட்ட அவன் தனக்குள் முனகுவதுபோல், ''வேண்டாம், சந்தியா! நீ எதையும் சொல்ல வேண்டாம்!'' என்று குமுறினான்.

''இல்லை, இல்லை. நான் அதைச் சொல்லித்தான் ஆக வேண்டும். ஆனால் அதற்கு ஒரு நிபந்தனை.......''

சபேசன் சட்டென்று நிமிர்ந்தான்.

''ஆமாம்; அந்த விவரங்கள் உங்களுக்குத் தெரிய வேண்டுமானால் சொல்கிறேன்; சொல்லி முடித்ததும்.....''

''சொல்லி முடித்ததும்?''

''என்னை இங்கேயே, இப்போதே, உங்கள் கையாலேயே கொன்று போட்டுவிட வேண்டும்! அல்லது.......''

''ஓ..... அவ்வளவு பெரிய காரியத்தை நான் செய்ய வேண்டுமா?'' என்று வேதனையுடன் சிரித்த சபேசன், ''அது இருக்கட்டும், சந்தியா! அல்லது என்கிறாயே, அந்த 'அல்லது' என்ன? அதையும் சொல்லி விடு!'' என்றான் தன்னை மீறிய படபடப்புடன்.

அவள் அவனை நிம்மதியாக ஏறிட்டுப் பார்த்தாள். அப்படிப் பார்த்துக்கொண்டே அவனருகில் நெருங்கி வந்து முழந்தாளிட்டு உட்கார்ந்து அவனது தோள்களில் தன் இரு கரங்களையும் துவளப் போட்டுக்கொண்டு முகத்துக்கு நேரே முகம் வைத்தவாறு கம்மிக் கரகரத்த குரலில் கூறினாள்: ''அல்லது?...... எனக்கு வாழ்வு அளிப்பதாக— என்னை உங்களுடையவளாக்கிக் கொள்வதாக — வாக்குறுதி தாருங்கள்!''

சபேசன் எவ்விதச் சலனமுமின்றி அவளது எழிலார்ந்த நீல வண்ணக் கண்களையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''சொல்லுங்கள்! என்னை நீங்கள் ஏற்றுக் கொள்வீர்களா?''

மெல்ல எழுந்து நின்ற சபேசன் மௌனமாயிருந்தான்.

''உங்கள் வாக்குறுதி வந்தபின் இதற்கு நான் ஒரு வழி சொல்வேன்.''

''அது என்ன?''

''நாளைக்கே நான் வீட்டை விட்டுக் கிளம்பி விடுவதாகத் தீர்மானித்திருக்கிறேன். என்னை நீங்கள் எங்கு வந்து இருக்கச் சொல்கிறீர்களோ, அங்கு வந்து காத்திருக்கிறேன். எங்காவது கண் மறைவான இடத்துக்கு, அல்லது தொலைதூர ஊர்களுக்கு என்னை அழைத்துச் சென்று விடுங்கள். அதன் பிறகு அந்தத் துரோகிகள் என்ன சதித் திட்டம் போட்டிருக்கிறார்கள் என்பதை விவரமாகச் சொல்கிறேன். அதைத் தகர்க்கவும், அவர்களுக்குச் சரியான பாடம் கற்பிக்கவும் நீங்கள் அப்போது எந்த முயற்சியிலும் இறங்கலாம். அதற்கெல்லாம் நானும் உங்களோடு துணை நிற்பேன்.''

தலையைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்த சபேசன் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன் போல் மெல்ல நிமிர்ந்து, ''ஆகட்டும், சந்தியா ! நீ கேட்பதுபோல் அந்த வாக்குறுதியை நான் அளிப்பேன். ஆனால் ஒரு நிபந்தனை...'' என்றான் அமைதியான குரலில்.

''சொல்லுங்கள்! சொல்லுங்கள்!'' என்று அவன் கரங்களைப் பற்றிக் குலுக்கினாள் சந்தியா.

''என்னை நீ நம்புகிறாய்; நானும் உன்னைப் பரிபூரணமாக நம்ப வேண்டும். அதன் பொருட்டு.......''

''அதன் பொருட்டு?''

''நாளைக்கு நீ உன் வீட்டை விட்டுப் புறப்பட்டு என்னிடம் வந்து சேர்ந்த அந்தக் கணமே அந்த வாக்குறுதியை அளித்து உன்னை என் இதயத்தில் வைத்துப் பூட்டிக் கொள்வேன்....!''

சந்தியாவுக்கு என்ன வந்து விட்டது ? அவள் கிறுகிறுவெனச் சுழன்று அப்படியே சபேசனின் மார்பில் வந்து சாய்ந்தாள் !

சில விநாடிகளுக்குப் பின், சட்டென்று நிமிர்ந்த அவள், ''நாளை இரவு சரியாகப் பத்து மணிக்கு மெமோரியல் ஹாலுக்கு எதிரேயுள்ள மரத்தடியில் வந்து காத்திருப்பேன்!'' என்று நெஞ்சு கொள்ளாப் பூரிப்புடன் சொல்லிக்கொண்டே அங்கிருந்து சரேலென வெளியேறிப் போய் விட்டாள்.

★

தூக்கம் எப்படி வரும் ? அன்றிரவெல்லாம் சபேசன் தூங்கவேயில்லை. பொழுதும் புலர்ந்தது. தூக்கமின்மையால் ஏற்பட்ட களைப்புத் தீர நன்றாக நீராடிவிட்டு வந்து வேறு ஆடை அணிந்துகொண்டு சிற்றுண்டி அருந்தி வர வெளியே கிளம்பிய அவன், ''இன்று பிரதர்! நம்மை அடியோடு மறந்துட்டியா?'' என்று ஒரு குலுக்குச் சிரிப்புடன் கேட்டுக்கொண்டே எதிரில் வந்து நின்ற நச்சியைப் பார்த்துத் தயங்கி நின்றான்.

நச்சி அப்படிக் கேட்டது சபேசனுக்கு மிகவும் சங்கடமாகி விட்டது. அசடு வழியச் சிரித்துக் கொண்டே, ''மன்னிச்சுக்க, அண்ணே ! உன்னை மறந்து நான் வராமல் இல்லை. வேலை அதிகம். அலைச்சல். அதான்.....'' என்று இழுத்தான்.



''ஏற்கனவே என் மருமகள் அடுப்புக் கரி. போறாக் குறைக்குக் காப்பியிலே புகாக் ஷுகரை வேறு நிக்காகப் போட்டு நிறைய ஊற்றிக் கொட்டிக் கொள்கிறாள் !''

''பரவாயில்லே, தொரை ! சும்மா ஒரு பேச்சுக்குத்தான் கேட்டேன். உன்னை எனக்குத் தெரியாதா? சரி; வா!'' என்றவாறு அவன் தோளில் கைபோட்டுக் கொண்ட நச்சி, நேரே ஒரு பெரிய ஹோட்டலில் போய் உட்கார்ந்தான். விலை மிகுதியான சிற்றுண்டி வகைகளுக்கு ஆர்டர் கொடுத்தான். அவர்கள் சாப்பிட ஆரம்பித்தார்கள்.

''ஆமாம், பிரதர் ! நீ என்னைத்தான் பார்க்கலே; என் வீட்டுப் பக்கம்கூடப் போய் ரொம்ப நாளாயிடுச்சாமே, நிசந்தானா?''— சிரித்துக்கொண்டே கேட்டான் நச்சி.

''அம்மா அப்படிச் சொன்னாங்களா, அண்ணே?'' என்று தணிந்த குரலில் வினவினான் சபேசன்.

''இல்லே; வேறதான் சொல்லிச்சு!''

சபேசன் பதில் ஏதும் கூறாமல் காப்பியை அருந்தினான். அவனையே சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்த நச்சி, எழுந்து போய்க் கை கழுவிக்கொண்டு திரும்பி வந்து சிகரெட்டைப் பற்ற வைத்தவாறு உட்கார்ந்தான்.

''பிரதர் ! உன்கிட்டே ஒரு விஷயம் சொல்லப் போறேன்; கேட்கிறியா?''

சட்டென்று நிமிர்ந்து அவனைப் பார்த்தான் சபேசன். சிகரெட்டை நன்றாக உறிஞ்சிப் புகையை ஊதி விட்டுத் தலை குனிந்த நச்சி தனக்குள் பேசிக் கொள்கிறவன்போல் தணிந்த குரலில் சொன்னான்: ''எனக்கு அதிகம் பேசத் தெரியாது. எதையும் சுத்தி வளைச்சுச் சொல்லவும் தெரியாது. அதெல்லாம் எதுக்கு? அநாவசியம்.....''

சபேசன் அவன் முகத்தையே கூர்ந்து நோக்கினான்.

அட்டைப் படம்: இக்கதையில் வரும் ஒரு காட்சியையே அட்டைப் படமாகச் சித்திரித்திருக்கிறார் ஓவியர் கல்பனா.

"ஒண்ணுமில்லே; பிரதர்! பயந்துடாதே! எல்லாம் நல்ல சமாசாரந்தான்!" என்று தன் வழக்கமான கோணல் சிரிப்புடன் நிமிர்ந்த நச்சி, "ஆமாம், பிரதர்! உன்னே ரொம்பச் சீக்கிரமா என்னோட 'பிரதர்-இன்-லா'வா ஆக்கிக்கலாம்னு ஆசைப்படறேன்! இன்னு சொல்றே?" என்றான்.

சபேசனின் கையிலிருந்த காப்பிக் கோப்பை நழுவிப் பொட்டென்று மேசைமீது உருண்டது. நல்ல வேளையாக அது உடையவில்லை.

நச்சி இதைக் கவனியாமல் வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக்கொண்டு சிகரெட்டை வேகமாக உறிஞ்சினான்: "சே, இந்த மாதிரி வெட்கம் எனக்கு எப்பவுமே ஏற்பட்டதில்லே!" — தன் தோளை ஒரு குலுக்குக் குலுக்கிக் கொண்டு மேலும் கூறினான்: "என் புத்தி தெரிந்த நாள் முதல் இது வரை நான் யார்கிட்டேயும் எந்த உதவியும் கேட்டதில்லே. ஒரே ஒரு தபா அந்தச் சோமாறி மருதமுத்துகிட்டே போய் ஓர் உதவி கேட்டேன். அதுவும் சும்மா இல்லே; முன்னாலிப் பத்தைபோல் இருபத்தைஞ்சு ரூபா லஞ்சம் கொடுத்துக் கேட்டேன். அப்படிக் கேட்டதுக்குச் சரியான புத்தியும் கொள் முதல் பண்ணிக்கிட்டேன். அதுக்கப்புறம் இன்னைக்கு இப்படி ஒரு சோதனை!.... எல்லாம் விதி பண்ற கமால் இது!..... இன்னு செய்யறது? என் தங்கச்சியை நான் ரொம்ப அதிகமா நேசிக்கிறேன். எனக்கு இந்த உலகத்திலே இருக்கிற ஒரே ஒட்டுறவு. காக்கட்டு அது ஒண்ணுதான். அதனால் அது ஆசைப்படறது. விரும்பறது எதையும் நான் எப்பவுமே நிறைவேத்தித் தராமல் இருந்ததில்லே. இப்ப இதுக்கு இன்னு பண்ணுவேன்? இது என் கையிலே இல்லே, பிரதர்! உன் கையிலே இருக்குது! அந்த ஏழைப் பொண்ணோட வாழ்க்கையே இப்ப உன் கையிலேதான் இருக்குது. இதுக்கு மேலே நான் இன்னு சொல்ல முடியும்?...., எனக்கு ஒண்ணும் சொல்லத் தெரியலே!" — நச்சியின் குரல் கம்மிக் கண்களும் கலங்கின. உடனே அதை மறைக்க, "அடங்க, இஸ்கி! இந்தச் சிகரெட் புகை கண்ணிலே பட்டுட்டா இன்னு எரிச்சல் எரியுது!" என்று கூறித் தன் கண்ணிமைகளில் துளித்து நின்ற நீரைச் சுட்டு விரலால் சுண்டி விட்டான்.

சபேசன் வாயே திறக்கவில்லை. நச்சி ஹோட்டல் பில்லைக் கொடுத்தான். இருவரும் அமைதியாக வெளியே நடந்தனர்.

சற்றுத் தூரம் சென்றதும் திடுமென்று தலை நிமிர்ந்த சபேசன், "அண்ணே! நீ சொன்னதை யெல்லாம் நான் புரிஞ்சுக்கிட்டேன். ஆனால், அதுக்கு என் முடிவைத் தெரிவிக்க ஒரு நாள் அவகாசம் கொடு!" என்று கூறிப் பிரிந்து நடந்தான். (அடுத்த இதழில் முடியும்)



# தெய்விகத் திருமலர்



ஒரு நாள் பாற்கடலில் ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டபடி ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தார் திருமால். அப்பொழுது அவர் நாபியிலிருந்து கமலம் வெளிப்பட்டது. அக் கமலத்திலிருந்தே பிரம்மா உற்பத்தியானார். ஆகவே, சிருஷ்டியின் ஆதியே கமலத்திலிருந்து தொடருகிறது எனக் கூறலாம். இன்றும் லக்ஷ்மி, சரஸ்வதி போன்ற தெய்வங்களோடு தாமரையைச் சம்பந்தப்படுத்துகிறோம்.

இவ்விதம் தெய்வங்களோடு கமல மலரைச் சம்பந்தப்படுத்துவது ஹிந்து மத நூல்கள் மட்டுமல்ல. பழங்கால எகிப்திய தெய்வங்கள் சில கமலாசனங்களில் அமர்ந்திருப்பது போன்ற சிலைகள் பல இன்றும் அந்நாட்டில் உண்டு. இஸ்லாமிய மத நூல்கள்கூட ஏழாவது ஆகாயத்தில் ஆண்டவனின் சிம்மாசனத்தின் வலதுபுறம் ஒரு கமல மலர் இருப்பதாகக் கூறுகின்றன. மகாயான பௌத்தர்களிடையே ஒரு நம்பிக்கை உண்டு. சுவர்க்கத்துக்குச் செல்லும் நல்லவர்கள் அங்கே சென்றதும் அங்கே உள்ள அழகிய தடாகத்தில் மணிகமல மலர்களாக மாறி விடுகிறார்கள் என்பது அவர்கள் நம்பிக்கை.

சீனாவில் பகவான் புத்தரின் ஏராளமான சிலைகள் அவரைக் கமலாசனராக உருவாக்கியவையாகும். கமலாசன புத்தரை அவலோகிதேசுவரர் எனக் கூறுவார்கள்.

திபெத்து நாட்டில், "ஓம் மணி பத்மே" எனப் புத்தரை பூஜிக்கிறார்கள். மத்திய ஆசியாவில் ஸ்டீன் என்ற புதை பொருள் ஆராய்ச்சியாளர் ஒருவர் புத்தரின் மர உருவம் ஒன்றைக் கண்டெடுத்தார். அது ஈரானில் தயாரிக்கப்பட்டதாகும். அதில் புத்தர் பத்மாசனராகவே காட்சி தருகிறார்.

கிரேக்கர்களின் மிகப் பழமையான மத நூல்களில் ஒன்று ஒடிசி என்பதாகும். இதைப் பாடல்கள் உருவில் ஹோமர் (கி. மு. 700) இயற்றினார். கமல மலரைப் புசிப்பவனுக்குத் தன் குடும்பம் வீடு வாசல் சம்பந்தமான சிந்தனைகள் அற்றுப் போய் முக்திமார்க்கத்தில் செல்லுவதாக அந்நூல் கூறுகிறது. சீனாவில் கி. மு. 225ல் இயற்றப்பட்ட (ஷிஹுவாங்தி ஆட்சிகாலம்) நூல் ஒன்றில் முதன் முதலாகக் கமல மலர் பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

தாமரைக்குத் தமிழில் அம்புயம், அம்போருகம், அரவிந்தம், ஆய்மலர், ஆம்பல், இண்டை, கஞ்சம், சரோருகம், சலசம், சாரசம், குது, திருமலர், திருமாலுந்தி, தோடகம், நளினம், நீரோருகம், பங்கயம், பதுமம், பற்பம், புட்கரம், முண்டகம், முளரி, வனசம், வாரிசம் எனப் பலவிதப் பெயர்கள் வழங்குகின்றன. தாமரை மலர், இலை, விதை, வேர் எல்லாமே மருத்துவப் பயன் உள்ளவை. வயிற்றுப் போக்கு, காலரா, காய்ச்சல், ஈரல், சம்பந்தமான நோய்கள், இருதய நோய் இவற்றுக்கெல்லாம் இம் மலர் நல்ல மருந்தாகும்.

— அ. ராம்கோபால்

# வீடெல்லாம் ஈரமா?



ஏஸிஸியின் கசிவைத் தடுக்கும் சேர்க்கைப் பொருள்




# அக்கோப்ரூ:ப் உபயோகிக்கலாமே

சிமெண்ட் 50 கிலோகிராமுக்கு ஒரு கிலோகிராம் அக்கோப்ரூ:ப் கலந்து உபயோகித்தால் நீர்க்கசிவிலிருந்து பரிபூர்ண பாதுகாப்பு கிடைக்கும். சுவர்கள், மேல் தளங்கள், அடித்தளங்கள், ஜலதாரைகள், நீர் சேமிப்புத் தொட்டிகள் இவற்றில் நீர்க்கசிவைத் தடுக்க மிகவும் சிலாக்கியமானது.

அக்கோப்ரூ:ப் உபயோகித்து நீர்க்கசிவைத் தடுங்கள்




உங்களருகில் உள்ள ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆ:ப் இந்தியா லிமிடெடின் கிளையிலிருந்தோ அல்லது அவர்களுடைய வினியோகஸ்தர்களிடமிருந்தோ சப்போதும் உடனடியாகக் கிடைக்கும்

தி அஸோஸியேடட் ஸிமெண்ட் கம்பெனீஸ் ஆ:ப் இந்தியா லிமிடெட்

தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆ:ப் இந்தியா லிமிடெட்

NWT-CMI. 2976A

### காட்சி 2

(ஜோசியர் வாசல். 'தங்க மாளை கடைமணியே விட்டு' என்று பாடியபடி சுப்பாமணி ஜோருக நடையுடன் நுழைகிறான்.)

இரு: டேய் சுப்பாமணி, என்னடா து கூப்பாடு. ஜோலிக்கு வர்ற நேரமா?

சுப்பா: ஏன் சங்கீதம் கூப்பாடா? ஐயோ ரஸிக ரத்தினமே!

இரு: என்னடா வேட்டு?

சுப்பா: என்ன செய்யறது அண்ணு. இன்னிக்கு நாடக ஒத்திகை!

இரு: என்னடா நாடகம் போடறுய்?

சுப்பா: நாடகமில்லே சுவாமி, நிஜம்தான். நான் நாடகக் கம்பெனியிலே சேர்ந்துடப் போறேன். நம்ம சீட்டைக் கிழியுங்க. சம்பளம் பட்டுவாடாப் பண்ணுங்கோ.

### காட்சி 3

(நாடக அரங்கம். ஒத்திகை நடக்கிறது.)

டைரக்டர்: இன்னும் எங்கே ஹீரோயினைக் காணும்?

பாலு: ஹீரோயின் இல்லாட்டி என்ன சார்? நம்ம சுந்தரத்தை டம்மியா வச்சு நடிக்கச் சொல்லுங்க.

என்னை [illegible] வைப்பேன்? என்ன செய்வேன்? நான் [illegible] பிள்ளை குட்டிக்காரன். ஆறு குழந்தைகள். ஏழாவது பிரசவத்துக்கு மனைவியை காந்தி ஆஸ்பத்திரியில் 'அட்மிட்' செய்திருக்கிறேன். அதற்கு அட்வான்ஸ்...!

டை: சட், நான்ஸென்ஸ். என்னய்யா வசனம்? சொந்தச் சரடு விடறே.

சுப்பா: மன்னிக்கணும் டைரக்டர் சார். எங்க ஹோட்டல்லே அடிக்கடி இந்த வசனம் பேசி அதுவே ஞாபகம்.

### காட்சி 4

(கிருஷ்ணய்யர் ஹோட்டல்.)

சுப்பா: நமஸ்காரம் அண்ணு.

இரு: யாருடா அது? வாங்கோ. நடிகர் திலகமா, குங்குமமா?

சுப்பா: ஐயோ அண்ணு! அதுக்கொரு கும்பிடு போட்டாச்சு. உங்க கிட்ட பழைய படி ஸர்வரா....

இரு: ஊஹூம். அது நடக்காது. இந்தக் கிருஷ்ணய்யர் பறைஞ்சா பறைஞ்சதுதான்.

சுப்பா (நகர்ந்தபடி): இது என்ன உலகமடா? இந்த இடத்திலே தினம் நடிச்சேன்.





சுப்பா: நீ என்னய்யா பேத்தறே! நமக்கு ஹீரோயின் இல்லாட்டி டயலாக் பேச வராது. டல்லடிக்கும்.

டை: சரி, அவரைப் பக்கத்திலே வச்சுக்கிட்டு ஒத்திகை பாரும். நீர் யாரு தெரியுமா? மிருகண்டு முனிவர். அது உம்ம சம்சாரம் மருத்துவதி. குழந்தை பிறக்கவில்லேன்னு கவலைப்படற கட்டம்.

சுப்பா: சார், இந்தக் கதை காலத்துக்கு ஒத்தமாதிரி இல்லே.

டை: என்னு மேன் கண்டுட்டே நீ?

சுப்பா: இல்லே. இப்ப எல்லாம் குடும்பக் கட்டுப்பாட்டு 'தீம்'தான் ரொம்ப சக்ஸஸ் புல். அதுக்கு எதிரா நம்ம காட்சி அமைச்சா, சென்ஸார் கத்திரிக்கோல் போட்டாலும் போடுவாங்க.

டை: அது இருக்கட்டும். மிஸ்டர் மிருகண்டு, வசனம் சொல்லும். ''மனைவி மருத்துவதியே! நம்முடைய பிள்ளையில்லாக் குறையை எப்படி வெளியிடுவேன்? உன்னுடைய முகாரவிந்தத்தில் கவலையின் பந்தம் கூடிச் சந்தம் பாடுவதைக் கண்டு அந்தரம்...''

சுப்பா: சார், டயலாக் அரிசிக் 'க்யூ' மாதிரி ரொம்ப நீளம்.

டை: சுத்துக்குட்டி. வசன சீர்திருத்தம் வேறே செய்ய வந்துட்டியா?

சுப்பா: ஸாரி. மனைவி மருத்துவச்சியே! நம்முடைய குழந்தை இல்லாக் குறையை

இப்ப இவருகிட்ட உண்மையைச் சொன்னு நம்ப மறுக்கிறார். நடிப்பு என்கிறார். உலகமே நாடக மேடை. வாழ்க்கையே ஒரு நாடகம். சரி, இவருகிட்ட நடிச்சாத்தான் காரியம் நடக்கும். அண்ணு, கடைசியா ஒரு வேண்டுகோள்.

இரு: என்னடா நோட்டீஸ் விடறே?

சுப்பா: அதெல்லாம் இல்லே அண்ணு. ஒரு கப் காப்பி... அதுவும் அண்ணு கையாலே...

இரு: சரி, சரி. டேய் சாமு, ஸ்டிராங்கா ஒரு கப் காப்பி கொண்டுவா.

சுப்பா (கண்ணை இலேசாக விழித்து, ஈன ஸ்வரத்தில்): அண்ணு, குடித்த காப்பி நுரை சத்தியமாய்ச் சொல்லுகிறேன். எனக்கு வேலை தராட்டா இந்த மருந்தையும் குடிச்சு, 'உணவிலே விஷம்'னு புரளி கட்டி விடப் போறேன். அப்புறம் நாலு நாளைக்கு.... அதுவும் விசேஷ தினம் வர்றது. பிஸினஸ் க்ளோஸ் ஆயிடும்.... என்ன சொல்றேன்?

இரு: அடப் பாவி! எழுந்து உட்காருடா கூத்தாடி. என் கடையிலேயே நாடகமா? பழி, இன்னொரு கப் காப்பி குடிச்சுத் தொலைச்சுட்டு, அந்த டேபிளைக் கவனி.... ஊஹூம், குருவாயூரப்பா!

சுப்பா: வாழ்க முதலாளி! நமக்கு மேடையிலே நடிக்க யோகமில்லே. கடையிலேதான் நம்ம நாடகம். உத்தியோகம் போனதும் நடிப்பாலே... வந்ததும் நடிப்பாலே!



# பித்த பிள்ளை

துரோணன்

மாலை ஏழு மணி சமாருக்குத் தெற்கே விருந்து வரும் பாசஞ்சர் வண்டி, முதலாம் பிளாட்பாரத்தில் வந்து நிற்கிறது. ஒரு மூன்றாம் வகுப்புப் பெட்டியின் கதவைத் திறந்துகொண்டு மெலிந்த உருவமொன்று அவசரம் அவசரமாகக் கீழே இறங்குகிறது. அப்படி இறங்கினவுடனேயே, அது ஓட்டமும் நடையுமாகச் சென்று கையிலுள்ள மூட்டை, பைகள் இரண்டையும் பிரயாணிகள் தங்குமிடத்தின் தூண் அடியில் கொண்டு வந்து போட்டுவிட்டு, மீண்டும் ரயிலை நோக்கி ஓடுகிறது. அங்கே — இறங்கின பாதை யோரத்துக்கு இரண்டு கைகளையும் நீட்டி, ஒரு மனித உருவத்தைத் தூக்க மாட்டாமல் தூக்கிக் கொண்டு பைகள் இருக்குமிடத்துக்கு விரைகிறது. ரயிலுக்கும், இந்த இடத்துக்கும் இடையில் உள்ள தூரம், சற்றேறக் குறைய நூறடி இருக்கும். கையில் தூக்கிவிட்ட உயிர்ச் சுமையைக் கொண்டு வந்து இடத்தில் சேர்ப்பதற்குள்ளாக, வழியில் எத்தனை இடர்கள்? குறுக்கும் நெடுக்குமாக ஓடும் பிரயாணிகள், கூவிச் செல்லும் விற்பனை யாளர்கள், வழியடைத்து நின்று வேடிக்கை பார்ப்பவர்கள், வியப்புடன் விசாரணை புரிபவர்கள், காலைத் தடுமாற வைக்கும் சாமான்கள்—இவ்வளவையும் சமாளித்துக் கொண்டு, அவ்வுருவம் ஓட்டமாக வந்து கைப் பளுவைப் பொறுமையாகக் கீழே இறக்கி அமர்த்தி விட்டு, பொத்தெனத் தரையில் சாய்கிறது. அப்புறம் அதற்கு மேல் மூச்சுக்களின் வேகமும், இரைப்புகளும் அடங்கி நிதானத்துக்கு வரக் கால் மணி நேரமாகிறது.

இப்படி — ஆரம்பத்திலேயே ஒரு மனிதனை - அதிலும் அறிவாளியான யோகியை ஓர் அஃறிணைப் பொருளாக அறிமுகப் படுத்துவதன் காரணம் — அம்மனிதன் விசை கொடுக்கப்பட்ட இயந்திரமாக இருக்கிறானே, அதனால் தான். உயிரும் பேச்சுமுள்ள ஜீவனொன்று சுமையாகத் தூக்கி வரப்படும் நிலையில் அதுவும் அஃறிணையாகத்தானே மாறுகிறது? தூக்கப்படும் உயிர்ச் சுமையான குழந்தையும் இப்படித்தானே?

அவன்தான் ரங்கண்ணு! அவனால் தூக்கப்பட்டு வரும் பொருள் அவனைப் பெற்ற தாயார்தான், வேறு யாருமில்லை — அவனையே பெற்ற அன்னை!

இடது கால் தொடை முதல் பாதம்வரையில் வெண்ணிறக் கவசத்தைப் பூட்டி வைத்தது போன்ற கட்டுடன், கால் நீட்டின வாக்கிலேயே இருக்க, சுமக்கப்பட்டு வரும் அறுபது வயதான பெண் கட்டை அவனுடைய அன்னை. உள்ளே நொறுங்கிப் போயிருக்கும் கால் எலும்புகள் குணமாகிக் கூடி, இனி பழைய உருவாக வேண்டும். இதற்கான இரண்டாம் பயணத்தில்தான் ரங்கண்ணுவை இங்கே சந்திக்கிறோம்.

ரங்கண்ணுவுக்கு இப்போது நாற்பத்திரண்டு வயது. அவனுக்குத் தலைச்சன் பிள்ளை! இந்த வயதிலுள்ளவர்கள் இருபத்தைந்து வயது மதிக்கத்தக்க தோற்றமும் வலிவுமாக எவ்வளவோ பேர்கள் இல்லையா? அது தனியொரு பாக்கியம் — ரங்கண்ணுவுக்குச் சம்பந்தமில்லை! அவனுடைய அவய



வாழ்வு, அவனை வயதுக்கு மேல் மூப்புள்ளவனாகத்தான் காட்டிற்று. இப்போது என்ன, அவனுடைய இரு பத்தைந்தாம் வயதிலேயே நரைக்க ஆரம்பித்துவிட்டிருந்த தலைமயிர் இப்போது பேர்பாதி உதிர்ந்தும், உதிர இருப்பவை வெளுத்தும் இருக்கும் கிராப்புத் தலை. குழி விழுந்த கண்கள், முகவாய்க்கட்டை நீண்டு சப்பைப் பட்டிருக்கும் கன்னங்கள். இப்படிப் பட்ட உருவமாக உள்ள ரங்கண்ணு தான் ஒரு காலத்தில் அமெச்சூர் நாடக சபாவில் அழகான கிருஷ் ணன், அர்ஜுனன், முருகன் வேஷங் களிலெல்லாம் வந்தவன் என்ற உண் மையைச் சொன்னால் யாராவது நம்பு வார்களா? அவனுடைய அழகு, தெம்பு எல்லாவற்றையும் உழைப்பு குடித்து விட்டது—பொறுப்பு அழித்து விட்டது! இப்போது—

ரங்கண்ணுவின் சட்டையிலும், உடையிலும் இரண்டொரு கிழிசலே ரம், தையலையும் காணலாமே தவிர, அழுக்கின் நிறத்தில் அப்பழுக்கைக் காண முடியாதே! அப்படித் தானிருந்தது அவனுடைய கறையற்ற உள்ளமும்.

ஒருக்களித்துக் கிடக்கும் ரங்கண்ணு, உடம்பைப் புரட்டி நெட்டி முறிக்கிறான். கைகளை உதறி விட்டுக் கொள்ளுகிறான்.

''ஐயோ பாவம்! நீங்க இன்னு சாமி? நாங்க இந்த ஸ்டேஷனிலே எத்தினி பேரு இருக்கோம் — ஒரு வார்த்தை கூப்புடக் கூடாது? அம்மாளெல் சௌரிய மாத் தூக்கி வந்து உடுவோமில்லே? ஒன்னாலே முடியுமா இவங்களைத் தூக்க? — '' இவ்வாறாகக் கேட்டபடி நீலச் சட்டையும், சிவப்புத் தலைப்பாகையுமாக வந்து நிற்கிறான் ஒரு கிழப் போர்ட்டர்.

ஒரு கனவான் ரங்கண்ணுவைப் பார்த்தபடி, ''ஸார், இந்த மாதிரி 'பேஷண்ட்'களுக்காகவே புக்கிங் ஆபீஸிலே நாற்காலி, ஸ்ட்ரெச்சர் எல்லாம் உண்டு ஸார். நீங்கள் ஒரு வார்த்தை சொன்னால் போதுமே — போர்ட்டர்கள் தானாகவே எடுத்து வரு வார்களே? உங்களுக்குக் கொஞ்சம் கூடச் சிரம மில்லே.—விஷயம் தெரியாதா?'' என்றார்.

''இவனுக்கு நீங்கதான் புத்தி சொல்லுங்கோ! என் வார்த்தை அவனுக்குக் காதிலியே ஏற மாட் டேங்கறது!'' என அங்கலாய்ப்புப் பொங்க ஓலமிடு கிறாள் தாய்.

ஸ்ரீ ரங்கண்ணு பதிலே சொல்லவில்லை! யோசனை தெரிவித்த கனவானையும், முறையிடு செய்த தாயா ரையும் ஒரு முறை பார்த்துவிட்டு அசட்டுச் சிரிப் புடன் பெருமூச்சு விடுகிறான்.

அவனுக்குத் தெரியாத புது விஷயமோ இது? ஒரு தடவை ரயிலை விட்டு இறக்க — ஏற்ற முழுசாக் ஒரு ரூபாய்க் கூலி! இது — உயிர்ச் சுமையாயிற்றே! இந்த ஒரு ரூபாய்க்காக ரங்கண்ணு பட்ட பாடு — படும் பாடு — படைத்தவனுக்கே தெரியும். அதி லும் இப்போது நாற்காலியுடன் வருவதானால் இரண்டு பக்கத்துக்குமாக, இரண்டு பேர்கள் — இரண்டு ரூபாய் தளர்த்தியாக வேண்டும். வாய் வார்த்தை அநுதாபிகளுக்கு ரங்கண்ணுவின் மௌன பதில் எப்படிப் புரியும்? அவர்களுக்குப் புரியாமல் இருப்பது சகஜம். ஆனால் புரிந்தும், தெரிந்துமாகப் பக்கத்திலேயேயுள்ள ஆத்மாவுக்கு?

''ஏண்டா பையா! வண்டி வர இன்னும் மூணு மணி தேசகாலம் கிடக்கு. நீ கார்த்தாலே ஒன்ப தரை மணிக்கு வாயைத் திறந்தவன். மாயவரம் ஸ்டேஷனிலேகூட நீ ஒன்னும் சாப்பிடாமல் எனக்கு வாங்கித்தொலைச்சே. உன் கண்ணும் மூஞ் சியும் கிடங்கிலே கிடக்கு. நீயும் போய் ஏதாவது ஆகாரம் பண்ணிட்டு வாயேன்.'' தாயார் சொல்லு கிறாள். ரங்கண்ணு பெருமூச்சு விடுகிறான். இந்த ஜாடையைப் புரிந்துகொள்ள வில்லையானாலும், ரங் கண்ணு அவளுடைய பிள்ளையாகவே இருக்க முடி யாதே! சட்டென்று எழுந்திருக்கிறான். கையில் கூஜாவையும் பிளாஸ்கையும் எடுத்துக் கொண்டு சட்டைப் பையைப் பார்த்துக் கொண்டே சாப் பாட்டறையை நோக்கி நடக்கிறான். சற்று நேரத் துக்கெல்லாம் கையில் இரண்டு பொட்டணங்கள், கூஜாவில் வெந்நீர், பிளாஸ்கில் காப்பி — இவற் றுடன் வந்து சேருகிறான்.

தாயார் ஒரு கவளம் விழுங்குகிறாள். அதே சமயம் எங்கிருந்தோ வந்து சேரும் பகாசுர நாய்களில் இரண்டு, சொறி பிடித்த தோஞ்சானில் ஒன்று ஆக மூன்று ஜீவன்கள் பங்கு வசூலிக்க நெருங்குகின்றன.

ரங்கண்ணு எழுந்து நின்று நாய்களை விரட்டிவிட்டு அமருகிறான். தாயார் மறு பொட்டலம் பிரிக்கிறாள். ''ஏண்டாப்பா, நீ சாப்பிட்டியா-உப்புமா, இட்டிலி-ஏதாவது?''

அவன், ''ஊம்'' என்று தலையாட்டிக் கொண்டே கூஜாவில் உள்ள வெந்நீரை டம்ளரில் விட்டுக் கொடுக்கிறான்.

''நீ நிஜமாகத்தான் சாப்பிட்டியா, இல்லே, எனக்காகப் பொய் சொல்றேயா?''

''இல்லேம்மா, நானும் சாப்பிட்டேன்!'' என்று முகம் மலரக் கூறிக் கொண்டே பொட்டலச் சருகுகளைச் சுருட்டி எடுத்துக் கொண்டு கூஜாவுடன் அப்பால் நகருகிறான் ரங்கண்ணு. அப்போது அவன் உள் மனம் கணக்குப் போடுகிறது. இந்த இரண்டு கவளம் உப்புமா, இரண்டு இட்டிலி ஒரு கப் காப்பி—இவற்றுக்குக் கட்டணம் அறுபது பைசா. அவன் சாப்பிட்டிருந்த ஒரு கப் டீக்குமாகச் சேர்த்து எழுபத்தைந்து பைசா—முக்கால் ரூபாய். ஊர் ஸ்டேஷனிலிருந்து இதுவரைக்கும் வழிச் செலவு மாத்திரம் மூன்று ரூபாய்! குழாயில் கையலம்பிக் கொண்டே ஒரு பெரு மூச்சையும் விடுகிறான். மேற்கொண்டு நடக்க வேண்டிய செலவுகள்?

முதலில் இதைவிட்டு நான்காவது பிளாட்பாரம் போய்ச் சேர்ந்தாக வேண்டும்—பதினைந்து தண்டவாளங்களைக் கடந்து. அப்புறம் ஏறக்கூடப் பாதையில்லாமல் அடைத்துக் கிடக்கும் ரயிலுக்குள் ஏறி, இடம் கிடைத்தாக வேண்டும். இந்தக் காரியம் தன் ஒண்டியால் சாத்தியமாகுமா? வேறு என்ன செய்வது? போர்ட்டர், நாற்காலி உதவியில்லாமல் முடியாது. இதற்குச் செலவுத் தொகை?

அப்புறம், ரயில் சென்னை ஸ்டேஷனை அடைவதற்குள் தாயாருக்கு என்னென்ன தேவைகள் எங்கெங்கே ஏற்படுமோ? எழும்பூரை அடைந்ததும், ஸ்டேஷனை விட்டு வெளிப்பக்கம் போய்ச் சேரும் வரையில் போர்ட்டர் கூலி, காலை ஆகாரச் செலவு—அதற்கு மேல் ஆஸ்பத்திரி போய்ச் சேர வாடகைக் காருக்குச் செலவு — அங்கே என்னென்ன விதமான செலவுகள் காத்திருக்கின்றனவோ? எத்தனை நாட்கள் தங்கும்படியிருக்குமோ? இவற்றுக்கெல்லாம் பிற்பாடாக, இதே பிரயாணச் செலவுகளுடன் ஊர் திரும்பி வீடு சேர்ந்தாக வேண்டும்!

கடந்த பத்து நாட்களாக முழுசாக ஓர் ஐந்து ரூபாய் கிடைக்காத காரணத்தால் தானே அந்த மிக்சர் மருந்தை வாங்கிச் சாப்பிட முடியவில்லை? இப்போது? ஒரு ஐந்து ரூபாயா? பலப்பல ஐந்துக்கள்—பலப் பல இரண்டுகள் — பலப் பல ஒன்றுகள்! பெரும் பிரயாசையாக இறைபட்ட கிணற்று நீர் ஒன்றுக்கும் உதவாமல் சாக்கடைக் குட்டைக்குப் போய்ச் சேருகிறதே — அம்மாதிரி தான் இவற்றின் கதி. ரூபாய் ஒன்றுக்கு மாதம் ஒன்றுக்கு ஐந்து பைசா வட்டி; சம்மதிக்கவில்லையானால் மார்வாடிக் கடைப் பணம் மடிக்கு வந்து சேருகிறதா? அந்த மாதிரி சம்மதித்து, மதுரம் இணங்கித் தூண்டி விட்டாளே — அப்படியில்லையானால் இப்போது-வண்டிக்காரன், ஹோட்டல்காரன், ரயில்காரன், போர்ட்டர் என்றெல்லாம் வீச முடியுமா? இன்னும் நாளை இதே போன்ற வகைகளில் பாக்கியும் இருக்கிறது!

பணம் ரங்கண்ணுவின் சட்டைப் பையில் தான் இருக்கிறது. அவனுடைய பொருளாதார நிலைமை இப்போதுள்ள பட்ஜெட் நிலவரம்—இவற்றின் எதிரே அவனுடைய வாயும் வயிறுமா முக்கியம்? அவற்றை அவன் எதிரியாகக் கருதி, கட்டுப்படுத்தி எவ்வளவோ காலமாகி விட்டனவே!

கையில் கூஜா நீருடன் திரும்பி வருகிறான் ரங்கண்ணு.

''ஏண்டாப்பா, அந்த மாத்திரையை யாவது கையிலே கொண்டு வந்தியா? இப்படி இரும ஆரம்பிச்சுட்டியே?'' என்கிறாள் தாய்.

''ஓ, ஆமாம்மா, மறந்தே போய் விட்டேன்; மதுரம் எடுத்து வைத்திருக்கிறாள்'' என்று சொல்லிக் கொண்டே பையைத் திறந்து, அதற்குள்ளிருந்து ஒரு டப்பியை எடுக்கிறான். அதிலிருந்து ஒரு மாத்திரையை எடுத்து, வாயில் போட்டுக்கொண்டு இரண்டு வாய்தண்ணீரையும் உட்கொள்கிறான். அதன் பின்னர் எழுந்து ஸ்டேஷன் மாஸ்டரிடம் போகிறான். சற்று நேரத்துக்கெல்லாம் ஒரு சிவப்பு முண்டாசு போர்ட்டர், அவன் எடுத்து வரும் பிரம்பு சாய்வு நாற்காலி—இவற்றுடன் திரும்பி வந்து சேருகிறான்.

''ஏன் ஸாமி, இந்த மாதிரி ஊனப்பட்டவங்களை வண்டி ஏத்தறத்துக்கு இன்னோர் ஆளு இல்லாம முடியுங்களா? நீங்க இன்னடான்னு ஒரே புடிவாதமா அவனை வேண்டான்னு போகச் சொன்னீங்களே? என்கூட இன்னொரு பக்கம் புடிச்சுத் தூக்கிகிட்டு நாலாவது பிளாட்பாரம் வரையிலே வர முடியுங்களா உங்களாலே? ரயில் வந்து நின்னதும் மறுபடியும் தூக்கிகிட்டுக் கோடிக்குக் கோடியா ஓடி இடம் பார்த்துப் புடிச்சாகணும். உங்களாலே முடியுங்களா?'' இவ்வாறு மீசையைத் தடவியபடி சவால் விடுகிறான் கூலிக்காரப் போர்ட்டர்.

''ஏண்டாப்பா, நானும் உன்னுட்டம் மனுசன்தானே? ஆண்டவன் கொடுத்திருக்கிற கை எனக்கும் இருக்குதல்ல?'' எனப் பதில் சவால் விடுத்தபடி ஒரு தடவை இருமுகிறான் ரங்கண்ணு.

''ஏண்டா ரங்கா, நீ செய்யிற காரியம் உனக்குத்தான் நல்லா இருக்கா? இந்த உடம்போட கூட நீ இப்படி அலட்டிக் கொண்டால் அப்புறம்...''

''அம்மா, நீ பேசாமலிரேன் — உனக்கு ஒன்றும் தெரியாது!'' என வெகு சாந்தமாகப் பதிலளித்துக் கொண்டே அவளது பின்பக்கம் சென்று இடுப்பில் கைகளைக் கொடுத்துத் தூக்குகிறான். கால்கள் இரண்டையும் போர்ட்டர் தாங்கிக் கொள்ள, இருவருமாக அவளை நாற்காலியில் அமர்த்துகிறார்கள். பைகள் இரண்டையும் கூட அவளுக்குப் பக்கத்திலேயே பொருத்துகிறார்கள். பின்னர் போர்ட்டருடன் தொடரும் போர்ட்டராகவே, கைச்சுமையமுக்க, மேல் மூச்சு இரைக்க ரங்கண்ணு நான்காம்



அந்த வீட்டின் மூத்த பிள்ளை அவன். அவனுக்கேற்பட்ட துயரங்களையும் சோதனைகளையும் நெஞ்சைப் பிழியும்படியாக வர்ணிக்கிறார் துரோணன். கடைசியில் மூத்த பிள்ளைக்கு விடிவு பிறக்கிறது. — எப்படி? கதையைப் படியுங்கள், தெரியும்! ❋

பிளாட்பாரம் வந்து சேருவதற்குள்ளாக நாலிடத்தில் வைத்து வைத்துத் தூக்கும்படியாகிவிடுகிறது. போர்ட்டர் கேலி விடுக்கிறான். ஆனால் அவை ரங்கண்ணாவின் கவனத்தில் உறைத்தால்தானே?

சற்று நேரத்துக்கெல்லாம் போர்ட்டர் விடுத்த சவால் உண்மையான அனுபவம் தான் என்பதை ரயிலைப் பார்த்ததும் உணருகிறான் ரங்கண்ணா. என்ஜினை அடுத்த பெட்டி முதல் கடைசிப் பெட்டி வரையில் அடி வைக்க இடமின்றி வழிந்து கிடக்கும் கும்பல்கள். முதற் கோடியிலிருந்து மறுகோடி வரையில் தூக்கிய சுமையுடன் போர்ட்டரின் வேகத்தையொட்டி ஓடுகிறான் ரங்கண்ணா. முடிவாக ஒரு பெட்டியில் உள்ள கருணையாளர்கள் இந்தப் பரிதாபத்துக்கு இரங்கிச் சற்றே ஒண்டி நிற்கிறார்கள். அங்கே—கழிவு அறைக் கதவோரத்தில், கீழ்த் தரையிலே இடம் கிடைக்கிறது. ரங்கண்ணாவுக்கு விழி பிதுற, மேல் மூச்சும் இரைப்பும் உடலை உலுப்பி எடுக்கின்றன. பையிலுள்ள பர்சை எடுத்துத் திறந்து ஒரு ரூபாய் நோட்டை நிரடி எடுத்துப் பார்த்துப் போர்ட்டரிடம் கொடுக்கிறான்.

''நீ இன்னா ஸாமி! பலே சாமர்த்தியமா பண்ணறே?''—ஏளனக் கத்தியபடி போர்ட்டர் அதை வாங்கவே மறுக்கிறான். நல்ல காலமாக ரயில் வேகமாக நகர்ந்து கொடுத்து ரங்கண்ணாவின் மானத்தைக் காப்பாற்றுகிறது. வெகு அலட்சியமாக இடது கையால் அந்த நோட்டைப் பெற்றுக் கொண்டு அந்தப் போர்ட்டர் நிற்கிறான். ரங்கண்ணாவின் மனம் விம்முகிறது. ஆனாலும் நஷ்டத்திலும் லாபமாக அவனுடைய பிரயாணைக்கு ஒரு ரூபாய் மிச்சம்!

ரங்கண்ணா தாயாருக்குத் தலைப் பிள்ளையாக, குடும்பத்துக்கு 'மூத்த அண்ணா'வாக இருக்கிறானே, அது அவன் செய்திருந்த பாபமோ, புண்ணியமோ, தலைவிதியோ எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும். ஆனால் வெளியுலகத்தின் பார்வையிலே-அவன் ஒருவனே அவளுக்குப் பிள்ளையாகக் காட்சியளிக்கிறானே, இதை மட்டிலும் யாரும் மறுத்துக் கூற முடியாது! அவள்-மகராஜியாக வாழ்ந்து பெற்றிருந்த வாரிசுகளில், போனதெல்லாம் போக, இப்போது என்மருக்குத் தாயாக இருக்கும் செய்தியை அவளாகக் கூறினாலொழிய, உலகத்தாருக்குத் தெரியப் போவதில்லை. அவ்வளவும் மூத்த அண்ணாவான ரங்கண்ணாவைப் பொறுத்த வரையில் உதவாக்கரைகள்தான்.

அவன் — பத்தொன்பதாம் வயதிலேயே கையில் பேனாவும், ஏடுமாக உத்தியோக வாழ்வைத் தேடிக் கொண்டவன். அவனுடைய அலுவலக வருஷங்கள் விளையாட்டுப்போல் இருபத்து மூன்றாகி விட்டன. கட்டிக் கொடுத்துள்ள டிபன் பொட்டணத்தையும் மறக்கு மனைவுக்கு இரவு எட்டு மணி வரையில் மன்றாடிவிட்டு, வீட்டு ஞாபகம் ஏற்பட்டவுடன் திரும்பி வரும் ஓர் ஆபீஸ் குமாஸ்தாவுக்கு, மாதம் பிறந்ததும், உருவாகக் கையில் கிடைக்கும் சாதிரம் என்னவாக இருக்கும்? இதில்தான், 'நான்கு பிளஸ் மூன்று' என்ற ரேஷன் கணக்குடன் அவனுடைய குடும்பம் நடக்க வேண்டியிருக்கிறது. இதிலேயே பண்டிகைகள், விருந்து, மருந்து, கலியாணம் என்றெல்லாம் உலகத்தாரைப் போல் நடத்தியாக வேண்டும்.

அவனுக்குத் தீராதவொன்றாக, மார்புவலி நோய் பிடித்து வருஷம் மூன்றாகி விட்டது. வியாதியைப் பாராட்டாமலேயேயிருந்தவன் தான் அவன். நோய் கடுமையடைந்த பின்னர்தானே கவலையும் கருத்தும் கண்ணைத் திறந்து வைக்கின்றன? ஆறு மாதங்களாவது பூரண ஓய்விலிருந்தாலொழிய மருந்துக்கும், மருத்துவத்துக்கும் பயனில்லை என்ற நிலைமையைப் படம் பிடித்துக் காட்டி விளக்கிவிட்டார் டாக்டர். அதற்குப் பிற்பாடுதான், தொடர்ந்தாற்போல் நான்கு மாத ஓய்வு காலத்தைப் பெற்று வீட்டையடைந்திருக்கிறான்.

இரண்டு மாதங்கள் ஓடியிருக்கின்றன. இடுப்புத் துணியையும் கசக்கிக் கட்டத் தெம்பில்லாத நிலையில் உள்ளவனை, இரும்புக் கல்லாய் மாறி, இரவு பகலின்றி உழல வைத்து விட்டதே அவனுடைய விதி? அவனுடைய வியாதி — ?

ஏதோ தாயார் கேட்கிறாள் — சகபாடிகளின் துணையுடன் திருப்பதி யாத்திரை போய் வருவதற்கு. போகச் சம்மதமளிப்பதிலும் சங்கடம், வேண்டாமெனத் தடுப்பதிலும் தடுமாற்றம். எப்படியோ வகையும் செய்து கொடுத்து அவளைப் போகச் செய்தானே, அதற்குப் பலன் என்ன ஆயிற்று? எங்கேயோ போனாள் — சம்பந்தமில்லாத ஊரில் படிக்கட்டிலிருந்து விழுந்து கால் எலும்புகளை நொறுக்கிக் கொண்டாள்—ஆஸ்பத்திரிக்கும் போய்ச் சேர்ந்தாள். யாரோ அடித்த தந்திச் செய்தி வந்து சேர்ந்தது. படுக்கையில் கிடந்த மனிதன்

பதறினான். பணத்துக்கும் காசுக்கும் பஞ்சாய்ப் பறந்து தயார்ப்படுத்திக் கொண்டு ஓடினான். கையில் உள்ள காசுகளைக் கரைத்து விட்டு, காலில் போட்ட கட்டுடன் தாயாரை வீடு கொண்டு வந்து சேர்ப்பித்தான். இப்படி நடந்தது அந்த முதலாம் பயணம். அன்று முதல் அவனுடைய உடைகளையும் அன்றாடம் துவைப்பதிலும், அவனுடைய தேவைகளைப் பூர்த்தி செய்விப்பதிலுமாக அவனுடைய ஓய்வுநாட்கள் பயன்பட்டன. இத்துடன் விட்டதா? கட்டின கட்டைப் பிரித்து, எலும்பைச் சோதித்தாகவேண்டுமே! அதற்காகத்தான் இந்த இரண்டாம் பயணத்தையும் ஏற்றுக் கொண்டான்.

இப்போது ?

மூன்று நாட்கள், காலையும், மாலையுமாகப் பழிகிடந்த பிறகுதான், இந்த இரு ஆத்மாக்களின் பரிதாபம் அரசாங்க ஆஸ்பத்திரிக்குப் புரிந்தது. இந்த மூன்று நாட்களும் மூன்று ஜன்மங்களுக்கோ, அல்லது முந்நூறு ஆண்டுகளுக்கோ பெறக்கூடிய தண்டனையாகக் கழிந்தது ரங்கண்ணுவுக்கு. கடைசியாகப் படம் பிடித்துப் பார்த்தார்கள். எலும்புகள் இப்போதுதான் கூடி வரும் விவரத்தை எடுத்துக் கூறி, மறுபடியும் அதே கட்டு, அதே கெடு முப்பது நாட்களில் வந்து சேருமாறு எழுதியும் கொடுத்துப் போகும்படி செய்தார்கள். இந்த ஐந்து நாட்களின் அநுபவத்தில் ரங்கண்ணு உலகத்தை எவ்வளவோ கண்டு விட்டான்.

நடுக் கூடத்தில் சாய்வுநாற்காலியில் சாய்ந்திருக்கும் ரங்கண்ணு, இருமி இருமிக் குமைந்துவிட்டு, முடிவாக நீண்ட பெருமூச்சுடன் நிமிர்ந்து அமருகிறான். எதிர்ப்பக்கம் காமிரா உள்ளில் மிக சுவாரசியமான பேச்சுக்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. எதிர் வீட்டில் குடியிருக்கும் வம்புக்கார ஸ்திரீ தாயாருக்கு வெகு நாளைய சிநேகம். நடுவில் கொஞ்ச காலம் பேசாமலே யிருந்தவள், இப்போது வலிய வந்து சேர்ந்திருக்கிறாளே— இனி அம்மாவின் பேச்சுக்கு முடிவு எப்படி ஏற்படும்? அப்பேச்சுக்கள் ரங்கண்ணுவின் செவிகளிலும் விழுந்து கொண்டிருக்கின்றன.

''ஏன் சீதா, நீயும்தான் பார்க்கிறாயே. இந்த வீட்டில் எனக்கென்ன சுவாதீனமிருக்கிறது? உலகத்தாரைப் போலத் தாயாரிடம் நாலு காசு பணம் இருக்கணும்—''

ரங்கண்ணுவின் நெஞ்சில் சுரீலெனத் தைக்கிறது! இந்த வீட்டில் அம்மாவின் சுவாதீனம் என்ன விதத்தில் குறைந்திருக்கிறது? அவனோ, மதுரமோ அவளுடைய தேவைகளில் எதை நிவர்த்திக்க வில்லை? அவளிடம் காசு பணம் இல்லாததைப் பற்றி எவருமே கனவிலும் கருதினதில்லையே — ?

கடன் இன்ன இடத்தில்தான் இன்ன வேளையில்தான் வாங்குவது என்றில்லை. அப்படி வாங்கியவற்றைத் திருப்பிக் கொடுப்பதைப் பற்றி அவன் நினைத்துப் பார்க்கவேயில்லை. அப்படியெல்லாம் ஜாடையறிந்து செய்தும், அம்மாவின் நெஞ்சைத் திருப்தி செய்விக்க முடியவில்லையே! பக்கத்துப் பெஞ்சியில் நான்கு கடிதங்கள் கிடந்தன. அவை வருவதற்கு முன்பாகவே அவற்றின் சாராம்சம் என்னவாயிருக்கும் என்பது அவனுக்குத் தெரிந்ததுதான். அவனுடைய உடன் பிறப்புகளைப் பற்றி இனிமேலா அவன் புதிதாகத் தெரிந்துகொள்ள வேண்டும்? அவனுடைய மன அளவில், அவன் யாருக்குமே கடிதம் எழுதி, அம்மாவுக்கு நேரிட்டுள்ள இந்தக் கல்யாணச் செய்தியை அறிவிக்க விரும்ப வில்லை. ஆனால், எழுதாமல்தான் நிம்மதியாக இருந்துவிட முடியுமா வீட்டில்? ஏழு பத்து பைசாக்கள் செலவு! பலன்?

ரங்கண்ணு மூக்குக் கண்ணாடியை அணிந்து கொண்டு மீண்டும் அவற்றை நோக்குகிறான்.

கையில் எடுத்துள்ள இந்த முதல் கடிதம் தம்பி தாமோதரன் எழுதியுள்ளது —

''ரங்கண்ணுவுக்கு அநேக நமஸ்காரம். உன் கடிதம் கிடைத்தது. நம் தாயார் இப்படித் திடீரென எங்கேயோ போய்க் காலை முறித்துக் கொண்டு ஆபத்தான நிலையில் இருக்கிறாள் என்ற செய்தியைப் பார்த்ததும் எங்களுக்கு மனம் படும் பாடு சொல்லி முடியாது. போட்டதைச் சாப்பிட்டு விட்டு, கிருஷ்ணா, ராமா என்று வீட்டோடு இராமல் அவள் ஏன் இப்படியெல்லாம் கஷ்டத்தைக் கொடுக்கிறாள்? உனக்கும் மூன்று மாதங்களாக உடம்பு சௌகரியமில்லை என்று எழுதியிருந்தாய். இந்த நிலைமையில் நீ அவளைப் பட்டணம் ஆஸ்பத்திரிக்குத் தூக்கி, எடுத்து அழைத்துப் போயிருக்கிறாய் என்பதறிந்து மிக வருத்தமாக இருக்கிறது. அம்மாவை இங்கேயாவது அழைத்து வந்து வைத்தியம் செய்வோமென்று பார்த்தால், அவள் ஒப்புக் கொள்ள மாட்டாள்.....''

ரங்கண்ணு இவ்வளவுதான் படித்தான். அதற்கு மேல் படிப்பதற்குத்தான் என்ன இருக்கிறது? போகட்டும், இந்த மட்டில் செய்தி தெரிந்து கொண்டிருந்த அளவுக்கு ஒரு பதிலாவது போட்டானே!

அடுத்த கடிதம் சகோதரிகளில் முதல்வளான பார்வதியிடமிருந்து வந்திருந்தது.

''......உன் கடிதத்தைப் பார்த்ததும் ஒன்றுமே புரியவில்லை, கதி கலங்கி விட்டது. அம்மாவுக்கு இப்படி ஆபத்து நேர்ந்துவிட்டதை இனி பகவான்தான் உன் பங்கிலிருந்து குணப்படுத்தி வைக்க வேண்டும். நானும் அங்கே வந்து பத்து நாட்களாவது இருந்து டாக்டர் சுந்தரத்திடம் கையைக் காண்பித்து வைத்தியம் செய்து கொள்ளலாமென்றுதான் இரண்டு தடவை கிளம்பினேன். முடியவில்லை. உன் கடிதம் வருவதற்கு முதல்நாள்கூடக் கிளம்பினவளுக்கு — சகுனம் சரியாகவில்லை. சோதனை போல் அம்மாவைப் பற்றிய சேதியுடன் உன் கடிதமும் வந்து சேர்ந்தது. பாவம், மன்னிக்குத்தான் ரொம்ப கஷ்டம். குழந்தைகளின் துணிமணிகள், அந்தக் கிழத்தின் கறைத் துணி — எல்லாம் தினசரி தோய்த்துப் போட்டு, அடுப்படியிலும் மன்றாடுவது போதாதென்று. இப்போது அம்மாவுக்கும் எல்லாம் செய்ய வேண்டியிருக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் நானும் அங்கே வந்து—''

இந்தக் கடிதத்தையும் இதற்கு மேல் படிப்பானேன்? தன் உடம்பு, தன் புருஷன், குழந்தை குட்டிகளின் தேகங்கள்தான் மனித தேகங்கள். இவற்றுக்குத்தான் களைப்பு, சோர்வு, நலக் குறைவுகள் என்றெல்லாம் வர முடியும்; பாக்கியெல்லாம் இரும்பாலோ, சிமிட்டிச் சாந்தாலோ ஆனவை என்ற கொள்கையை அநுபவ பூர்வமாகக் காட்டி வருபவளிடமிருந்து, இதற்கு மேலும் அவன் என்ன பதிலை எதிர்பார்க்க முடியும்? எப்படியாவது அம்மா திருப்தியடைந்தாளானால் சரி !

கூடத்தறையிலிருந்து அம்மாவின் பேச்சு காதில் விழுகிறது —

''என்ன பண்றதும்மா? நான் வந்த வழியை அநுபவிச்சுத்தானே ஆகணும்? காலாலும், குத்தலும், குடைசலும், எரிச்சலுமாக, உயிரே போய் வருகிறது. மறுபடியும் பட்டணம் போயாகணும்—இன்னும் மூணே நாள்தான் இருக்கு. என்ன செய்யப் போகிறேனோ? ''

ரங்கண்ணா நீண்ட பெருமூச்சை விடுத்தபடியே கல்லாய்ச் சமைந்து கிடக்கிறான் சிறிது நேரம். மீண்டும் அம்மாவின் பேச்சு —

''நான் என்னத்தைச் சொல்ல? ஒவ்வொண்ணும் ஒவ்வொரு தினுசாகக் கஷ்டப்படறதுகள். எல்லாம் கண்ணீர் விட்டு எழுதியிருக்கிறதுகள்.''

ரங்கண்ணாவின் நெஞ்சை விட்டுப் 'பக்' கென்ற ஒரு சிரிப்பு எழுந்து, உள்ளூறவே அமுங்கியும் விடுகிறது. அந்த மூன்றும் கடிதம் — கண்ணால் எழுதப்பட்டிருந்தவற்றில் இரண்டே வரிகள்தான் அவனது விழிகளில் படுகின்றன —

''........ இந்தச் சந்தர்ப்பத்தில் ஏதாவது பணமாவது அனுப்பி வைக்கலாம் என்று பார்த்தால் தோதுப்படவில்லை. எனக்கு நாளை முதல் 'அவுட்டோர் ஷூட்டிங்' மும்முரம். இப்போது கிளம்பிக் கொண்டிருக்கிறேன். நான் போய்க் கொண்டிருக்கும் விலாசம் எனக்கே தெரியாது!''

பாவம், எவ்வளவு கஷ்டங்கள்! இந்தப் பதில் எழுதுவதற்காவது அவனுக்குச் சந்தர்ப்பம் இருந்ததே, அதைப் பாராட்ட வேண்டுமில்லையா? அத்துடன் 'பணம் அனுப்புவது' என்ற நூதனமான இரண்டு வார்த்தைகளையும் எழுதத் தோன்றிற்றே, இந்த மட்டில் அம்மா பாக்கியசாலிதான்!

மற்றொரு கடிதம்—? அது கடிதமாகவா இருக்கிறது? நெஞ்சை விட்டுச் சீறிப் பறந்து வந்து படிந்துள்ள கனல் பொறிகள் அதிலுள்ள எழுத்துக்கள். அம்மாவின் பாசம் அத்தனைக்கும் முழு உரிமையுள்ள கடைக்குட்டியல்லவா கமலம்? அவள் விடுத்திருக்கிறாள் பலப்பல கேள்விகள் —

''.....அம்மா எங்கே போயிருந்தாள்? ஏன் போனாள்? உன் குடும்பத்தை விட்டு அம்மா போகும்படி அங்கே என்ன நடந்தது? ஏன், அவளை வைத்து ஆதரிக்க வேண்டியது உங்களுடைய கடமையில்லையா? உங்களுக்கும் குழந்தை குட்டிகள் உண்டு என்பதை நினைத்துப் பார்த்து அவளுக்குச் செய்ய வேண்டும். உலகத்திலே எல்லாம் கிடைக்கும் — அம்மா கிடைக்க மாட்டாள். அவளுடைய காலை நன்றாகக் கவனிக்க....

''கல்யாணம் ஆனது முதல் நீங்கள் என்னை அழைத்துச் செய்யாததால், இவ்விடம் என் மாமியார் என்னைக் கொத்தியெடுக்கிறாள். ஆகவே.......''

கடிதத்தைச் சட்டென்று மூடிப் போட்டு விட்டுத் தன் கைகளால் மண்டையை அமுக்கிப் பிடித்தபடி நாற்காலியில் சாய்கிறான் ரங்கண்ணா. ஏறக்குறைய இருபத்திரண்டு வயது வித்தியாசத்தில் உள்ள தங்கை இவள்! தகப்பனாரின் முகத்தையும் சரிவரப் பார்த்தவளில்லை. அண்ணாவின் ஆதரவிலும், மன்னியின் போஷிப்பிலுமாகவே வளர்ந்து, நாலெழுத்துப் படித்து அவர்களாலேயே கல்யாணமும் ஆகி, கண்ணான கணவனையும் அடைந்திருப்பவள் எழுதியிருக்கும் கடிதம் இது! இவ்வளவுக்கும் காரணம் — அம்மாவின் மீதுள்ள பாசம்! இவன் மூத்த அண்ணா!

''என்ன ஸீதா, நீதான் சொல்—இது நியாயமா? கல்யாணமாகி வீட்டை விட்டுப் போன பெண் அது. இன்னமும் — வருஷம் இரண்டாகப் போகிறது. வீட்டுக்கு அழைத்தோம், ஒரு நல்லதைச் செய்தோம் என்று உண்டா அந்தக் குழந்தைக்கு? தாயார் நான் ஒரு கட்டையிருக்கிறேனே? அது மூணு மாசமாகக் குளிக்காமல் இருக்காம் — ''

ரங்கண்ணாவின் இதயத்தை விட்டுப் பலப்பல பெருமூச்சுக்கள் அதிர்ந்து கொண்டிருக்கின்றன. இந்தக் கமலாவின் கலியாணத்துக்காகப் பட்ட கடன்கள்தானே அவனை இன்னமும் நிமிர விடவில்லை? பிராவிடண்ட் பண்டு, பண்டகசாலை, நண்பர்கள் என்று இனி ஒரு வழியிலும் கைநீட்டி வாங்க வழியில்லை. இப்போது மறுபடியும் பண மூட்டையுடன் பட்டணம் கிளம்பியாக வேண்டுமே?

மறுபடியும், தாயாரின் குரல் — தவிப்பாக எழுந்து எதிரொலிக்கிறது — ''ஐயையோ? மதுரமா — இவளா? நாலு மாசமாச்சா? எனக்குத் தெரியவில்லையே! ஐயையோ! அவளுடைய அக்காளைக் கொண்டிருக்கிறாளோ, என்னவோ... வருஷத்துக்கொண்ணாக...''

அடுத்த கணம், ரங்கண்ணா வெருண்டு அதிர்ந்தவண்ணம் நிமிருகிறான்.

மதுரம் இப்போது நான்காம் குழந்தைக்குத் தாயாகிக் கொண்டிருக்கும் செய்தியைப் பற்றின கருத்துத்தான் தாயாரிடமிருந்து வெளியாயிற்று — இப்படி.

ரங்கண்ணா பதைக்கிறான். தாய்க் குலத்துக்கே தலை குனிவான ஏளன இழிவை அம்மாவா கூறுகிறாள்? அவள் வாயால் வெளியாகக் கூடிய வார்த்தைகளா இவை ?

ஐந்து குழந்தைகளுக்குத் தாயாகிவிட்ட தன் விளைவாக, அவனுடைய அக்காள் ஒரு குற்றவாளி — அக்குற்றவாளியின் தங்கையாக உள்ள இவளும் அதே குற்றவாளி! ஏன், மூத்த பிள்ளையாகப் பிறந்திருக்கும் ரங்கண்ணாவே ஓர் ஆயுள் குற்றவாளிதானே? அவனுக்கு வந்திருப்பவளும்கூட!

ஒரு வழியாக அன்றைய உரையாடல் நிகழ்ச்சியை முடித்துக் கொண்டு எதிர் வீட்டுக்காரி வெளியேறுகிறாள்.

மூன்று நாட்களாக வானம் இடியும் புடையுமாகக் காட்சியளிப்பதில் மும்முரப் பட்டு விட்டது. அதற்குப் போட்டியாகவே அலறி எழும் குளிர் காற்று குரல் வளையைப் பிடித்து நெரிக்கிறது.

ஆஸ்பத்திரி வாசலில் அடர்ந்து நிற்கும் ஆலமரத்தடியில் அநாதை போல் கிடக்கிறது அவ்வொற்றை மாட்டு வண்டி. அவ் வண்டியின் எஜமான், அதனுள்ளேயே அடைபட்டு அசந்து கிடக்கிறான். அச்சந்தர்ப் பத்தில் வண்டி தேவைப்பட்ட கிராக்கி யொன்று வந்து அவனைத் தட்டி எழுப்பிப் பேரம் பேசுகிறது.

முக்கால் தூக்கத்தில் உள்ளவன் முனகிய படியே விசாரிக்கிறான். "எங்கே, மோட்டுத் தெருவுக்கா போகணும்? ஏன், முடிஞ்சு போன கேஸோ?"

"என்னய்யா இது? இப்படிக் கேட்கிறே?"

நீண்ட பெருமூச்சுடன் கிராக்கிப் பதி லளிக்கிறது. "இல்லேப்பா, இல்லே. எங்க அம்மாவைத் தூக்கி வெளிக் கட்டாந் தரையிலே போட்டுட்டானுங்க. டாக்டரை நேரிடப் பார்த்து நியாயம் கேட்கலாம்னு காத்துக்கிட்டிருந்தேன்; நியாயம் கிடைக் கல்லே—இப்போ போகணும்—"

"சரி, மூணு ரூவா குடுப்பியாய்யா?"

"ஐயோ, மூணு ரூவாயா?"

"பின்னே இன்னு? மூணுரூவாயிருந்தால் பாரு, இல்லாட்டி நடையைக் கட்டய்யா!"—இத்தகைய பதிலளித்துவிட்டு மீண்டும் முக்கா டிட்டு முடங்கி விட்டான் வண்டி எஜமான்.

மறு நிமிஷமே சவாரி கேட்டவன் சலிப் புடன் மறைகிறான்.

ஆள் அரவமற்ற பசுஞ்சூன்ய வேளை —

புதுக் கப்பி போடுவதற்காகக் குறுக்கே சங்கிலி போட்டுக் கட்டி, வெட்புளிளக்குகள் போடப்பட்டிருக்கும் சாலை. இடை—கொத்திப் போடப்பட்ட கருங்கல் கப்பிகள் மழைநீரில் மஞ்சனமாடிக் கொடுவாளாக நீட்டிக் கொண் டிருக்கின்றன. ஓரப் பாதைகள்; இரண்டிலும் மூட்டு முட்டான சல்லிக் குவியல்கள் சரிந்து கிடக்கின்றன. அரை மைல் தூரத்துக்கு அடி வைக்கப் பாதையில்லை.

ஓர் உருவம் — ஆமாம், அந்தக் கருமை இருளிலும், மனிதனு, பூதமா என்று புலப் படாத வகையில் அசைந்தாடி வருவதை, 'ஓர் உருவம்' என்று குறிப்பிடுவதுதானே பொருத்தம்? அது தலைமுதல், கால் வரையில் சாக்குப் போர்வையால் மூடியிருந்தும் சொட்ட நனைந்து, தோளில் உள்ள சுமை யைத் தூக்கமாட்டாமல் தூக்கிக் கொண்டு ஆவேச நடை போட்டு வருகிறது. காலில் குத்தும் கப்பிக் கல்லின் வலி தாளாமல், 'ஐயோ, அப்பா, அம்மா!' என்று விடுக் கும் அதன் முனகலை யார் கேட்கிறார்கள்?

இதே சமயத்தில் ரங்கண்ணாவின் வீடு கலியாணக் களேபரமாக கலகலப்பைக் கொண்டிருக்கிறது. சகோதரர்கள், கண்ணன் தாமோதரன், ராஜா — இப்படி யெல்லாம் ஒரே சமயத்தில் எதிர்பாராமல் கூடிவிட்டதன் பலனை அங்கே — கலியாணம் போனிராதா?

"ஏண்டா, உனக்கு இப்போது ரயி லேது?" என்று தாமோதரன் கேட்கிறான் கண்ணனிடம்.

"நான் ரயிலில் வரவில்லையண்ணா. ஸ்டுடியோ 'வான்' வந்தது. நாளைக்குத் திருக்காட்டூரிலே ஷூட்டிங். வண்டியிலே யிருந்த பெட்ரோல், மசல் எல்லாம் தீர்ந்து போய் விட்டது. அதற்காக, இங்கே திருப்பினேன். நானும் அம்மாவைப் பார்த்து விட்டுப் போகலாமென்றுதான் ஒரு 'பிரேயில் விசிட்டி'லே வந்திருக்கேன். நாளைக் காலையிலே எட்டாவது மணிக்கு நான் திருக்காட்டூரிலே இருந்தாகணும்!"—இந்தப் பதிலை அளித்து விட்டுத் திருப்பிக் கேட்கிறான் கண்ணன். "நீ எப்போது—எட்டு மணிக்கு செங்கோட்டா வருகிறதே, அதில் வந்தயா?"

"ஆமாம்; இங்கே எட்டரை மணிக்கு வந்து சேர்ந்தேன் — இரண்டு ரூபாய் வண்டிச் சத்தம் ஸ்டேஷனிலேயிருந்து. நாளைக்கு என் மைத்துனன் பெண்ணுக்குக் கலியாணம் நிச்சயமாகிறது. பதினையாயிரம் ரூபாய் எஸ்டிமேட்டிலே கலியாணம்! எல்லாம் நான்தான் இருந்து நடத்தியாகணும்."—தாமோதரனின் செய்தி இது!

காலையில் மின்சார வண்டியில் வந்தேன். என் காலடியில் ஓர் ஐந்து ரூபாய் நோட்டு கிடந்தது. யாருடையது என்று எல்லோரையும் கேட்டேன். யாரும் முன்வரவில்லை. இறங்கும் போது என்னோடு ஒருவர் மட்டும் பின்தொடர்ந்தார். கடையில் அந்த நோட்டை ஆளுக்குப் பாதிச் சில்லறை மாற்றி எடுத்துக் கொண்டோம். வீடு போன பிறகு அது என்னுடைய சொந்த நோட்டுத்தான் என்பது ருசு ஆயிற்று. 'போனது, பாதிக்குப் பாதியாவது தேறிற்றே!' என்று எண்ணினேன். உண்மை என்ன தெரியுமோ? எனக்குக் கொடுத்தது இரண்டு ரூபாய் நோட்டு செல்லாத கள்ள நோட்டு!



"நாம்ப இரண்டு பேரும் இங்கே வந்திருப்பதுகூட அதிசயமில்லே; இந்த ராஜாப் பயலும் வந்து விட்டானே, இதுதான் ஆச்சரியம்! அம்மாவுக்கு இவன் பேரிலும் கமலத்தின் பேரிலும்தான் ரொம்ப உயிர்! கடைக் குட்டிகள் இல்லையா?"

"நான் வந்த செங்கோட்டா வண்டியிலே தான் அவனும் வந்திருக்கிறான். மன்னி கைவற்றல் குழம்பு, ஜீரக ரசம், வடாம், எல்லாத்தையும் ஓர் இறுக்கல் இறுக்கி விட்டுப் படுத்து விட்டான் நிம்மதியாக!"

"மன்னியின் வற்றல் குழம்புன்னால், அது ஒரு தினுசாகப் போதையடிக்கத்தான் செய்யறது. இப்போது எனக்குக்கூட—" கண்ணன் ஒரு நீண்ட ஏப்பத்துடன் வார்த்தையை முடித்துக் கொண்டு கொட்டாவி விடுகிறான்.

"அப்பா தாமோதரா! நீ எங்கே வாங்கினேயோ, இந்த வாழைப் பழத்தைப் போல் என் ஆயுசிலேயே தின்னதில்லே. அவ்வளவு ருசி! இன்னுமிருந்தால் இரண்டு கொடுக்கச் சொல்லேன்!" கொல்லை இடைகழிப் புறத்திலிருக்கும் தொண்ணூறு வயது அத்தைக் கிழம் தீர்க்கக் குரலில் தேவையை விடுக்கிறது!

"ஐயோ, பாவம்! சாகப் போகிற கிழவி! குடு, மன்னி, குடு!" — தாமோதரனின் சிபாரிசும் எழுகிறது.

மதுரம் சமையலறையை விட்டு எழுந்து போய் இரண்டு பழங்களைக் கொடுத்துவிட்டுத் திரும்புகிறாள்.

"ஏன், மன்னி, இதென்ன இப்படி நாழியாகிறதே? அண்ணா எத்தனை மணிக்குப் போனான், எங்கே போனான்? ஆஸ்பத்திரிக்குப் போகிறதாகச் சொன்னானா? ஊரெல்லாம் இருண்டு கிடக்கு; குளிரானால் தாங்கவே முடியல்லே —?"

"அவர் போனதே எனக்குத் தெரியாது. ஏழு மணிக்கு வாசல் பக்கம் போனார். என்னிடம் சொல்லவும் இல்லே. அவருக்காக வைத்த கஷாயம் கிடக்கு, கஞ்சி கிடக்கு. அம்மாவுக்கு ஜுரமாம். ஆஸ்பத்திரிக்குத் தான் போயிருக்கணும்."

"என்னது? அம்மாவுக்கு ஜுரமா? கால் கட்டுப் பிரிச்சு எத்தனை நாளாகிறது?"

"மூணு நாளாகிறது; எலும்பு கூடி விட்டது. இனி மேல் பயமில்லையாம்."

வாசற் கதவு 'தடா'லென்று மோதல் சப்தத்துடன் திறக்கப்படுகிறது. கூடத்துப் பக்கமிருக்கும் அனைவரும் அரிக்கேன் விளக்கின் ஒளியைப் பெரிதாக்கிக் கொண்டு எதிர்ச் செல்கிறார்கள். தோளிலிருந்து தொங்கும் உயிர்ச் சுமையுடன், மூச்சு இரைக்கும் நிலையில் இடித்து மோதிக் கொண்டு பேய்க் கோலமாக உள்ளே நுழைகிறான் ரங்கண்ணா.

"அண்ணா! அண்ணா!"

"அண்ணா! அம்மா!"

"அண்ணா, இதென்ன, ஆஸ்பத்திரியிலேருந்து நீயா தூக்கிண்டு வரே? ஐயோ, ஒரு வண்டி வைத்துக் கொண்டு வரக் கூடாதா? அம்மா — அம்மா!"

மூவர் உதவியுடன் தோளின் சுமையைக் கூடத்துக் கோடியில் இறக்கிக் கிடத்துகிறான் ரங்கண்ணா. பின்னர், மேல் மூச்சும் சுவாசமும், உஸ்ப்ப, கையால் கட்டிக் காட்டி விட்டு, கூடத்து மறு கோடிக்குப் போய்த் தரையில் படுக்கிறான். மதுரம் பரபரப்பாக அம்மாவின் மேலுள்ள ஈர உடைகளைக் களைந்து விட்டு வேறு துணிகளை எடுத்துத் துவட்டிவிட்டுப் போர்த்துகிறாள். அதே சமயம் தூக்கத்திலிருக்கும் ராஜா எழுந்து ஓடி வந்து அம்மாவின் முகத்தருகே அமருகிறான். மற்ற இருவரும் அம்மாவின் உடம்பைத் தொட்டு அசக்குகிறார்கள். அவளுடம்பு நெருப்பாகக் கொதிக்கிறது. கட்டுப் போட்டிருந்த கால் புனர் ஜன்மம் எடுத்துவிட்டது.

மதுரம் பிளாஸ்கிலிருந்த காப்பியைப் பாத்திரத்தில் விட்டுக் கொஞ்சம் கொஞ்சமாக அவளது வாயில் வார்க்கிறாள். மூன்று விழுங்குகள் — அம்மா கண்ணைத் திறக்கிறாள்.

"அம்மா, இதோ பாரு. நாங்கள் வந்திருக்கிறோம். ராஜா வந்திருக்கிறான் பாரு..."

"அம்மா, நான் வந்திருக்கிறேனே, தெரிகிறதா?"

அம்மா உன்னிப்பாக யாவரையும் பார்க்கிறாள். அடுத்த விநாடியே, "அட கண்ணே! ராஜா, நீ வந்தியாடா, என் கண்ணே! இனி, நான் பிழைச்சுடுவேன்" எனத் தலையசைத்துக் கூறிக் கொண்டே, கையை நீட்டி அவனது முகத்தைப் பற்றுகிறாள். கூடத்து நடுவில் படுத்திருந்த குழந்தைகள் மூவரும் எழுந்து வந்து, பாட்டியை நெருங்குகிறார்கள்.

"அம்மா, அப்பா எங்கேம்மா?" நடுப் பயல் ரகு மட்டிலும் அப்பாவைத் தேடுகிறான். அவனுக்கு அம்மாவிடம் இல்லாத பாசம் அப்பாவிடம்!

அதே சமயம் கூடம், தாழ்வாரங்களில் அணைந்து கிடந்திருந்த மின்விளக்குகள் திடீரெனப் புத்துயிர் பெற்று எரிகின்றன. எங்கிலும் ஒளி வெள்ளம். மின்னலுக்கு இரக்கம் வந்து விட்டது.

கூடத்து மறுகோடியில் வந்து படுத்தானே ரங்கண்ணா — அவன் இன்னமும் எழுந்திருக்கவில்லை. மதுரமும் குழந்தைகளும் அவனை நெருங்குகிறார்கள்.

"அப்போவ்!" எனக் கூவிக் கொண்டே அவனை நெருங்குகிறான் ரகு.

ரங்கண்ணா நீண்டு படுத்திருக்கிறான். அவனிடமிருந்து பதிலில்லை. அவன் உடல் நேர் வாட்டத்திலேயே படுத்திருந்தும், முகம் மட்டிலும் பக்கவாட்டிலே சாய்ந்து கிடக்கிறது. மதுரமும் கல்யாணியும் அவனது முகத்தைப் பற்றித் திருப்புகின்றனர். அசையாப் பார்வையாக நிலைத்து நிற்கும் அவனுடைய விழிகளிலே ஓர் ஒளி — செம்மைச் சாயம் படிந்திருந்த உதடுகளிலே தவழும் புன்னகை யொன்று! அடுத்த விநாடியிலே தாய், மகள், இருவர் குரலிலிருந்தும், 'ஐயையோ' என்ற பெருத்த ஓலம் ஒன்றாக வெளிப்படுகிறது.

ரங்கண்ணாவுக்கு உலக வாழ்வு முடிந்து விட்டது! அவனுக்கு விடுதலை. அவனுடைய கட்டைக்கும் பூரண ஓய்வு



# வெற்றித் திருநகர்

அகிலன்

அத்தியாயம் ஆறு

## தனக்குவமை இல்லாதான்

சிறியதொரு நகரமொன்று அப்படியே குடிபெயர்ந்து தெற்கு நோக்கிச் செல்வது போலிருந்தது விசுவநாதன் படை நடத்திச் சென்ற காட்சி. யானைப் படை, குதிரைப் படை, காலாட் படை ஆகிய முப்படைகளும் விரைந்து செல்ல, படையினருக்கு உணவும் ஆயுதங்களும் வழங்குவோர் கூட்டம் தொடர்ந்து சென்றது. நூற்றுக் கணக்கான வண்டிகள் சாரி சாரியாக அவர்களைப் பின்பற்றிச் சென்றன.

பல போர்க்களங்களுக்கு விசுவநாதன் கிருஷ்ணதேவராயரோடு சென்றிருக்கிறான். ஆனால், அவன் தலைமையேற்று நடத்தப் போகும் முதற்போர் இதுதான். முதற் போரே அவனுடைய தந்தைக் கெதிரான போராக அமைந்து விட்டது.

அங்கங்கே அவர்கள் படை வீடுகளமைத்துக் கொண்டு தங்கினார்கள். படை வீடுகளுக்கிடையே பரப்பப் பெற்ற கடை வீதிகளில் வீரர்களுக்கான எல்லாத் தேவைப் பொருள்களும் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்திருந்தான் விசுவநாதன். போர்த் தொழிலைக் கிருஷ்ணதேவராயர் நாட்டின் முதற் கலையாகக் கற்பித்திருந்ததால், அதை ஒட்டிய எல்லாச் செயல்களும் முறைப்படி நடந்து வந்தன. போருக்குப் புறப்படுவதென்றால், வீரர்களைக் கவனிப்பதற்காகப் பல்வகைத் தொழில் செய்வோரும் உடன் செல்வது அப்போது வழக்கமாக இருந்தது.

காஞ்சிப் பெருநகருக்கு வந்தவுடன் அங்கு சில நாட்கள் தங்கி ஓய்வெடுத்துக் கொண்டார்கள். தொடர்ந்த பிரயாணத்துக்கு வேண்டிய பொருள்களையும் நகரத்தில் சேகரித்துக் கொண்டார்கள். விசுவநாதன் அவனுடைய பாசறையிலிருந்து கொண்டு சேர நாட்டுச் சிற்றரசன் உதய மார்த்தாண்டனுக்கு ஓர் ஓலை எழுதி அனுப்பினான்.

''விஜயநகர சாம்ராஜ்யத்தின் உள்நாட்டு ஆட்சியில் தலையிட்டுக் குழப்பம் விளைவிப்பதற்கான துணிவு உங்களுக்குப் பிறந்திருப்பதாக விஜயநகரத்துக்குச் செய்தி கிடைத்திருக்கிறது. சாம்ராஜ்யத்தின் அதிகாரியாக இருக்கும் அதன் ஆணையை மீறும் நாகம நாயக்கருக்கு நீங்கள் படை உதவி செய்யக்கூடும் என்று அறிகிறோம். அப்படி ஏதும் நேர்ந்தால், விஜயநகரத்தின் படைகள் மதுரையோடு நிற்காமல், நேரே சேரநாட்டுக்குள்ளும் நுழைய வேண்டிய அவசியம் ஏற்படுமென முன்னதாகவே எச்சரிக்கை விடுகிறோம்.''

ஓலையை அரியநாத முதலியாரிடம் காட்டினான் விசுவநாதன். அவர் வியப்பும் திகைப்பும் அடைந்து, ''அவனைத் தற்காப்பு நிலைக்குக் கொண்டு வந்து விட்டீர்களே!'' என்றார்.

''ஒரே சமயத்தில் இருவரோடு நாம் போரிட வேண்டிய நிலையைக் கூடுமானவரையில் தவிர்க்கப் பார்க்கிறேன். இதையும் மீறி அவர் அப்பாவுக்கு

உதவி செய்ய முன்வந்தால், நாமும் விஜய நகரத்திலிருந்து படை உதவி பெற்றுக் கொள்வோம். கூடியவரையில் போர் விரிவடைந்து உயிர்ச் சேதமும் பொருள் விரயமும் பெருகாமல் இருந்தால் நல்லது.''

''சக்கரவர்த்திகளோடு பழகிப் பழகி அவர்களைப் போலவே நீங்களும் ராஜதந்திரியாக வளர்ந்து வருகிறீர்கள்!'' என்று கூறிச் சிரித்தார் முதலியார்.

அதைக் கேட்டு மகிழ்ச்சியடைவதற்குப் பதிலாக, ''சக்கரவர்த்திகளுக்கு அவர்களுடைய தந்தையாரோடு போரிட வேண்டிய துர்ப்பாக்கியம் நேரவில்லை; எனக்கு மட்டும் அப்படி நேர்ந்திருக்கிறது'' என்று கவலையோடு கூறினான் விசுவநாதன்.

அரியநாத முதலியார் விசுவநாதனின் போக்கை அவன் விஜயநகரத்திலிருந்து புறப்பட்டதிலிருந்து ஊன்றிக் கவனித்துக் கொண்டுதான் வந்தார். அவனுடைய வழக்கமான வேகமும் உற்சாகமும் எப்போதும் போல் அவன் முகத்தில் காணப்படவில்லை. 'தான் ஆடாவிட்டாலும் தன் சதை ஆடும்' என்று கூறுவார்களே, அதற்கொப்ப அவனுடைய இரத்த ஓட்டமும் தசைநார்களும் துடித்து வருவதை அவரால் உணர முடிந்தது. விஜயநகரத்தை விட்டுத் தாண்டியதிலிருந்து அவனுடைய மனம் ஒரு நிலையில் இல்லை. தெற்கே போகப் போக

முன்னும் ஆசை, பாசம், பற்றுதல், விருப்பு, வெறுப்பு எதுவுமே கூடாதென்பதை நானும் அறிந்திருக்கிறேன். ஆனாலும் என் மனத் தவிப்பை என்னால் கட்டுப்படுத்த முடியவில்லை. என்னுடைய ஆற்றலையே நான் இழந்து வருகிறேனோ என்ற பிரமையும் எனக்கு ஏற்பட்டிருக்கிறது.''

விசுவநாதனின் குரல் தழுதழுத்தது. அவன் உள்ளத்தில் மோதிக் கொண்டிருந்த பேரலைகள் அவனுடைய இமைகளின் ஓரங்களில் முத்துக்களாய்த் திரண்டன.

விசுவநாதனைக் குறை கூறிப் பயனில்லை. விஜயநகரத்தின் கல்விமுறை கிருஷ்ணதேவ ராயர் காலத்தில் அப்படியிருந்தது. பண்பாடு, ஒழுக்கம், நெறி இவற்றை அடிப்படையாகக் கொண்டே அவர்கள் இளைஞர்களை வாழ்க்கைப் போராட்டங்களுக்குப் பழக்கி வந்தார்கள். பெற்றோர், கல்வி பயிற்றுவிக்கும் ஆசிரியர், அரசர் இவர்களிடம் பேரன்பும் பெருமதிப்பும் கொள்ளும்படியாக இளைஞர்கள் கல்வி பயின்ற காலம் அது. அதற்கேற்றாற்போல் பெரியவர்களுக்கும் தங்கள் மனம், சொல், செயல் இவற்றால் இளைஞர்கள் தங்களிடம் அன்பும் பணிவும் கொள்ளும் வகைகளில் நடந்து கொள்ள முயன்றார்கள். விசுவநாதன் தன் பெற்றோரிடம் பேரன்பும் பெருமதிப்பும் கொண்டிருந்ததில் வியப்பில்லை



அவனுக்கு மனச் சுமை பெருகிக் கொண்டே வருகிறது என்பதையும் அவர் கண்டு கொண்டார்.

''முதலியார் அவர்களே! கவலைப்படுவது என்றாலே என்னவென்று நான் அறியாதிருந்தேன். ஆனால் இப்போது கவலை என்றால் எவ்வளவு கொடியது என்பதை நான் அநுபவிக்கத் தொடங்கியிருக்கிறேன். என் அன்னையாரை நான் விஜயநகரத்தில் விட்டு விட்டு வந்திருக்கிறேனே தவிர, அவர்கள் என்னைத் தனியே விடவில்லை. என் இதயத்துக்குள் புகுந்து கொண்டு என்னைப் புழுவாய்க் குடைந்து வருகிறார்கள். அப்பாவை நான் நேரில் காணும் போது, எப்படி என் கரம் வாளை உறுதியோடு பற்றப் போகிறது என்றே எனக்குத் தெரியவில்லை. கடமைக்கு

''இளவரசே!'' என்று விசுவநாதனின் தோளில் கரம் வைத்து அவனை மெல்லப் பற்றினார் அரியநாத முதலியார்; ''பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் நடைபெற்ற பாரதப் போரில், பார்த்தன் கலங்கியது போல் நீங்கள் இப்போது கலங்குகிறீர்கள். பார்த்தனுக்கு வழி காட்டக் கண்ணபெருமான் இருந்தார். எனக்கு அந்த அளவுக்குத் தகுதியில்லை. தங்களுடைய தந்தையார் எனக்குமே தந்தையைப் போன்றவர்'' என்றார்.

''கீதையை நான் படித்திருக்கிறேன். பந்த பாசங்களை மறந்து, அது கடமையைச் செய்யச் சொல்லுகிறது. கடமையைச் செய்வதற்குத்தான் துணிந்து புறப்பட்டேன். ஆனால், கடமை வெறியோடு நான்

போர்க்களத்தில் புகுந்து விட்டால், எங்கள் இருவரில் ஒருவரைத்தான் என் தாய் உயிரோடு பார்க்க முடியும். உயிரோடு நான் அவரைச் சிறைப் பிடிப்பது என்பதோ, அல்லது நான் அவருக்குப் பணிந்துவிடுவது என்பதோ நடவாத காரியங்கள்.''

அரியநாத முதலியார் தமது விழிகளை மூடிக் கொண்டு சிறிது நேரம் பேரமைதியில் ஆழ்ந்தார். பளிச்சென்று அவரது சிந்தனையில் ஒரு மின்னல் மின்னியது போலிருந்தது.

''இளவரசே! நாம் இருவரும் ஏகாம்பர நாதர் ஆலயத்துக்குச் சென்று அவரை வணங்கி வருவோம். நம்முடைய கடமை, ஆசை, பாசம், கவலை எல்லாவற்றையுமே அவர் பொறுப்பில் விட்டு விடுவோம். எல்லா உலகங்களுக்கும் தலைவரான அவரிடம் நாம் சரண் புகுந்துவிட்டு, அவருடைய எண்ணங்களைச் செயல்படுத்தும் கருவிகள் நாம் என்பதை நம்புவோம். நம்முடைய கவலைகளை மறப்பதற்கு அது ஒன்றுதான் வழி'' என்றார் முதலியார்.

விசுவநாதன் இப்போது முதலியாரின் முகத்தில் ஒரு புத்தொளி வீசக் கண்டான். முதலியாரே மீண்டும் பேசினார் :

''திருவள்ளுவர் பற்றி அவ்வப்போது உங்களுக்குச் சொல்லியிருக்கிறேன். தீர்க்க முடியாத சிக்கல்களையெல்லாம் தீர்க்க அவர் எனக்கு வழிகாட்டியிருக்கிறார். 'தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந் தார்க்கல்லால், மனக் கவலை மாற்றல் அரிது' என்றும், 'வேண்டுதல் வேண்டாமையிலான் அடிசேர்ந்தார்க்கு யாண்டும் இடும்பை இல' என்றும் அவர் சொல்லியிருக்கிறார். அந்தப் பொய்யாமொழியின் சொல்லை நான் அப்படியே நம்புகிறேன். வாருங்கள்; இந்த நம்பிக்கையோடு நாம் நம்மை இறைவனது பாதங்களில் சேர்த்து விடுவோம்.''

விசுவநாதன் அந்த இரண்டு குறட்பாக்களையும் திரும்பத் திரும்பத் தனக்குள் சொல்லிப் பார்த்துக் கொண்டான். உடனடியாக மனப்பாடமாகிவிட்ட அந்தச் சொற்களின் பொருள் சிறிது சிறிதாக அவனது இரத்த ஓட்டத்தில் கரைந்து, மூச்சுக் காற்றுடன் கலந்து, அவனது தேகமெங்கும் பரவி ஒரு பரவச நிலையை அவனுள்ளே தோற்றுவித்தது.

வேண்டுதல் வேண்டாமையிலாதனுடைய பாதங்களில் சரணடைந்து விட்டால், கடமைக்குக் குறுக்கே நிற்கும் தாய் தந்தையர் பாசத்தையும் அவனே ஏற்றுக் கொள்வான். அந்தப் பாசத்தால் எழும் கவலைகளைக் கட்டறுக்க அந்தத் தனக்கு உவமையில்லாத ஒருவனால்தான் முடியும். எது நியாயமோ, எது சத்தியமோ, அதை அவன் என் வாயிலாக நிறைவேற்றிக் கொள்ளட்டும்.

''சரி, வாருங்கள் ஆலயத்துக்கு!'' என்றான் விசுவநாதன்.

ஏகாம்பரநாதர் சந்நிதியில் முதலியாரும் விசுவநாதனும் மனம் குவித்து நின்றார்கள். கருவறைக்கு முன்னே ஒரு திரை தொங்கியது; திரைக்குப் பின்னே இருள் சூழ்ந்த கருவறை; அதற்குள்ளேதான் இறைவன் இருந்தான். அங்கு மட்டிலும்தான் அவன் இருந்தானா...?

பளிச்சென்று திரை விலகியது. மணியோசை கலகலவென்று எழுந்தது. கருவறைக்குள்ளே கற்பூரத்தின் ஒளி பொங்கியது. அங்கே, அந்த ஒருவன் தென்பட்டான். அங்கு மட்டிலும்தான் அவன் தென்பட்டானா?

ஏதோ ஒரு திரை விசுவநாதனின் உள்ளத்திலிருந்து திடீரென விலகியது போலவும், அதோடு ஆயிரம் மணிகளின் ஓசை அங்கிருந்து எழுந்தது போலவும், அப்போதே குபீரென அங்கோர் ஒளி வெள்ளம் பொங்கியது போலவும் தோன்றியது விசுவநாதனுக்கு. அந்தக் கணநேரத்து மெய்ச் சிலிர்ப்பில் அவன் இறைவனைத் தனக்குள்ளேயும், வெளியில் அவன் கண்ட எல்லாப் பொருட்களிலும் கண்ணுற்றான். அது ஒரு புதிய அநுபவம் அவனுக்கு. வாய்விட்டு வெளியே சொல்ல முடியாத நுண்மையான அநுபவம்.

ஆலயத்தைவிட்டு அவன் வெளியே வந்த போது அவன் இதயத்தில் அணுவளவும் சுமையில்லை. அதில் அவன் இறைவனைச் சுமந்து கொண்டு திரும்பி வந்தான். கற்பூரத்தின் ஒளி போன்றவனுக்குச் சுமை ஏதும் இல்லையே! இருளாகிய துன்பச் சுமைகளைச் சுட்டெரிப்பவனுக்கென்று தனிச் சுமை ஏது?

## அத்தியாயம் ஏழு

# தூதுவர் வந்தார்

**வி**ஜயநகரத்து அரண்மனையில் சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயரிடம் விசுவநாதன் அவன் தந்தை மீது படையெடுத்துச் செல்வதாக வாக்களித்த செய்தி, மறுநாளே அமைச்சர் வாயிலாக அங்கிருந்து நாகமருக்குப் புறப்பட்டு விட்டது. அந்தச் செய்தியோடு நாகமருக்குப் பல ஆலோசனைகளையும், திட்டங்களையும் வழங்கியிருந்தார் அமைச்சர். அந்தத் திட்டங்களில் ஒன்றுதான் நாகமர் சேரநாட்டு உதயமார்த்தாண்டனின் உதவியைத் தேடிப் பெற வேண்டுமென்பது.

விசுவநாதனின் படைகள் உறையூரை நெருங்கிக் கொண்டிருந்த போதே நாகம நாயக்கருக்குத் தகவல் கிடைத்து விட்டது. ஒவ்வொரு நாளும் அவர் தெற்கிலிருந்து உதயமார்த்தாண்டனை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். விசுவநாதனிடம் அவர் தம் உயிருக்கும் மேலான அன்பு கொண்டிருந்தாலும் அவனிடம் போரிட்டுத் தோல்வியுற

விரும்பவில்லை. அப்படி ஒரு தோல்வி ஏற்பட்டால் அது தம் வயது, பதவி, வீரம் எல்லாவற்றுக்குமே களங்கம் ஏற்படுத்திவிடும் என நினைத்தார். விசுவநாதனை எப்படியாவது வென்று அடக்கித் தம் ஆணைக்குக் கட்டுப்பட்டு நடக்கும்படி செய்துவிட வேண்டுமென்பதே அவர் நோக்கம்.

தெற்கிலிருந்து படைகளோ செய்தியோ மதுரைக்கு வந்து சேரவில்லை. வடக்கிலிருந்து விசுவநாதன் கடல் அலைகளொத்த தன் படைகளோடு மதுரையை நெருங்கிக் கொண்டிருந்தான். பரபரப்படைந்திருந்த நாகம நாயக்கர், முன்பே தம் வீரர்களனைவரையும் ஒன்று திரட்டி ஆயத்தமாக வைத்திருந்ததால், அவர்களைக் கொண்டே வெற்றி பெறப் போவதாக முழங்கத் தொடங்கி விட்டார்.



“ஊர்க் கோடி மடத்திலே நான் காலட்சேபம் செய்யறேன். கேட்பதற்கு ரெண்டு போலீஸ்காரர்களையாவது அனுப்புங்க சார்! தனியா யிருக்கப் பயமாக இருக்கு!”

ராமபத்திர நாயக்கர் தாம் அவருடைய வலது கரமாக விளங்கியவர். அவரை அழைத்து வைத்துக் கொண்டு பின்கண்டவாறு போர் முழக்கம் செய்தார் நாகம நாயக்கர்.

“நம்முடைய படைத் தலைவர்களுக்கும் வீரர்களுக்கும் நீங்கள் இந்த ஒரு விஷயத்தை மட்டிலும் வற்புறுத்திக் கூறிவிட வேண்டும். விசுவநாதனின் படையில் உள்ளவர்கள் நம்முடைய வீரர்களுக்கு அண்ணன் தம்பிகளாகவோ, மாமன் மைத்துனர்களாகவோ, வேறு வகை உறவினர்களாகவோ, நண்பர்களாகவோ இருப்பார்கள். படுகளத்தில் பந்தபாசமோ உறவு முறையோ குறுக்கிட்டு, எவனாவது தன் கடமையில் தவறுவானானால் அவனை நம்முடைய வீரர்களே கொன்று விடலாம்! புறமுதுகிட்டு ஓடி வரும் கோழையாக அவனைக் கருதி, நம் வீரர்களே அவனைக் கொன்று விடலாம் என்று நான் கட்டளை விடுகிறேன்!..... நான்.... நான்.... என்னுடைய சொந்த மகனோடு...... நெடுநாள் வரமிருந்து பெற்ற ஓரே பிள்ளையோடு போரிடுகிறேன் என்பது ஒவ்வொருவனுக்கும் நினைவிருக்கட்டும்!”

தொடங்கும் போது ஆவேசத்தோடு முழக்கம் செய்த நாகமநாயக்கர் முடிக்கும் போது சொற்கள் வெளிவராமல் தடுமாறினார். அவருடைய தொண்டை அடைத்துக் கொண்டு வந்தது. குரலில் நெகிழ்ச்சி புகுந்து அவரை ஆட்டிப் படைத்தது.

“ஆம்; இந்த நாகமன், கேவலம் அவனுடைய மகனிடமே தோற்று விட்டான் என்ற பெரும் பழி எனக்கு வந்து விடக் கூடாது. அன்னியப் பகைவர் மீது பாயும் போது நாம் எவ்வளவு வெறியோடு, மூர்க்கத்தனம் கொண்டு பாய்வோமோ அப்படிப் பாய வேண்டும். அவர்களைச் சின்னாபின்னப் படுத்தி நிலைகுலையச் செய்து சீரழிக்க வேண்டும். சிறு பிள்ளைகள் இடும் — வேளாண்மை வீடு வந்து சேராது என்பதை அவனை அனுப்பி வைத்த சக்கரவர்த்திகளுக்கு நாம் நிரூபிக்க வேண்டும்!”

“கட்டாயம் நாம் வெற்றி பெறுவோம்” என்று நம்பிக்கையோடு கூறினார் ராமபத்திர நாயக்கர்: “அநுபவத்திலும் பயிற்சியிலும் தேர்ந்தவீரர்களெல்லாம் நம்மோடு முன்பே புறப்பட்டு வந்து விட்டார்கள்; விசுவநாதன் அவரைப் போன்ற இளைஞர் கூட்டத்தைத் திரட்டிக் கொண்டு வருவார்; அவர்களுக்கு நம்மைப் போல் போர்முறைத் தந்திரங்கள் தெரிந்திருக்க நியாயமில்லை.”

ராமபத்திர நாயக்கர் உண்மையாகவே நம்பிக்கையோடு பேசினார். போர் வீரர்களும் பிடிவாதமாக இருப்பதால் கட்டாயம் வெற்றி நாகமர் பக்கந்தான் என்று உறுதியோடு கூறினார். ராமபத்திரரின் நம்பிக்கை நிறைந்த பேச்சு மிருதியாக மிருதியாக நாகமருக்கு என்னவோபோல் இருந்தது. அவர் தமக்கு வெற்றி கிடைத்துவிடக் கூடாதே என்று அஞ்சுபவர் போல் தமக்குள் நடுங்கத் தொடங்கினார். அவருக்கே தெரியாமல் அவரது வெற்றி நினைவு அவரை அலைக்கழிக்க முனைந்துவிட்டது.

படுகளத்தில் விசுவநாதன் கொலையுண்டு கிடப்பது போன்றதொரு காட்சி அவர் மனக் கண் முன் தோன்றவே, அவர் சிலிர்த்துக் கொண்டு ஆசனத்திலிருந்து குதித்தெழுந்தார். ராமபத்திர நாயக்கரை ஒரு பகைவரைப் பார்ப்பது போன்ற விழிகளுடன் உற்றுப் பார்த்தார்.

“நாயக்கரே, போதும் நிறுத்துங்கள்!” என்று கத்திவிட்டு, “நான் இந்தப் போரை யாருக்காக நடத்துகிறேன், தெரியுமா?” என்று உறுமினார்.

ராமபத்திரநாயக்கருக்கு ஏதும் விளங்கவில்லை.

“நான் எனக்காக இதை நடத்தவில்லை. அந்த ஒருவனுக்காகத்தான் இத்தனை பாடு படுத்துகிறேன். எவன் என் கையால் தோல்வியடையப் போகிறானோ அவனுக்கே இந்தப் பாண்டிய நாட்டை அளித்து முடிசூட்டு விழா நடத்தப் போகிறேன். நாளைக்கு எனக்கும் உங்களுக்கும் அவனை எதிர்த்து நிற்கப்

போகிற படை வீரர்களுக்கும் அவன்தான் தலைவன் ! இதை நீங்கள் மறந்து விட்டுப் பேசாதீர்கள் !''

நாகம நாயக்கர் இப்படித் திடீரென்று குழம்பித் தவிக்கப் போகிறார் என்று ராம பத்திரர் சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

''தாங்கள் என்ன சொல்லுகிறீர்கள் என்பது என் சிற்றறிவுக்கு எட்டவில்லையே?'' என்று பணிவோடு கேட்டார் அவர்.

''என்ன சொல்லுகிறேனா? இதைக்கூடவா உங்களால் புரிந்து கொள்ள முடியவில்லை?'' என்று அவரிடமே சீறினார். ''விசுவநாதனை எப்படியாவது உயிருடன் பிடித்து வர வேண்டுமென்று சொல்கிறேன். வாள்முனையின் ஒரு சிறு கீறல்கூட அவன் தேகத்தில் விழக் கூடாது என்று சொல்கிறேன். அவனுடைய உடலையோ, உள்ளத்தையோ, செருக்கையோ புண்படுத்தாமல் அவனை என்னிடம் சேர்ப்பிக்க வேண்டுமென்று சொல்கிறேன்!'' என்றார்.

ராமபத்திர நாயக்கர் பாடு இருதலைக் கொள்ளி எறும்பின் பாடாகி விட்டது. படை வீரர்கள் மட்டிலும் பந்தபாசங்களையோ, உறவு முறைகளையோ, நட்டையோ பார்க்காது போர்க்களத்தில் எதிர்ப்போரைக் கொன்று குவிக்க வேண்டும். ஆனால் எதிர்ப்பவர்களின் தலைவனை விசுவநாதனை மட்டிலும், அவன் நாகமரின் குமாரன் என்பதால், ஒரு காயமும் படாமல் கைப்பற்ற வேண்டும்! எப்படி இது சாத்தியமாகும்? எப்படி இந்தச் செய்தியைப் படைத் தலைவர்களிடமோ வீரர்களிடமோ சென்று கூறுவது ?

''விசுவநாதனும் பெருவீரராயிற்றே ? அவரை உயிருடன் கைப்பற்றச் செல்வதென்றால்கூட, அவருக்கு விழுப்புண் ஏற்படுத்தாமல் ஏதும் செய்ய முடியாதே!''

''செய்யத்தான் வேண்டும்! போர்ப் பயிற்சியுள்ளவர்கள், அநுபவமிக்கவர்கள், போர்த் தந்திரம் தெரிந்தவர்கள் என்று நமக்கு நாமே பெருமைப்பட்டுக் கொண்டால் போதுமா? அந்தப் பெருமையை நிலை நாட்டவாவது நாம் இதைச் செய்யத்தான் வேண்டும்!''

சின்னஞ் சிறு குழந்தை போல் பிடிவாதம் பிடிக்க முற்பட்டுவிட்ட நாகம நாயக்கரிடம் எப்படி நடந்து கொள்வதென்று ராம பத்திரருக்குப் புரியவில்லை. அவர் முன்னுக்குப் பின் முரணாகப் பேசுகிறாரென்றோ, அவரது பேச்சு நியாயத்துக்கு விரோதமானதென்றோ, அப்போது அவர் சிந்தனைத் தெளிவோடு நடந்து கொள்ளவில்லையென்றோ எப்படி ராமபத்திரரால் கூற முடியும் ? தவியாய்த் தவித்தார் ராமபத்திர நாயக்கர்.

''அப்படியானால் நாம் வெற்றி பெறுவது மிகவும் கடினம்தான்'' என்று பெருமூச்சு விட்டார் அவர்.

நாகம நாயக்கருக்கு இந்தச் சொற்களைக் கேட்ட பிறகுதான் சிறிதளவு ஆறுதல் பிறந்தது. வெற்றிமுழக்கம் செய்துகொண்டே அவர் தோல்வியையும் வரவேற்று விடுவார் போல் தோன்றியது.

''அரியநாத முதலியார் விசுவநாதனுக்குத் துணையாக வருவதால், நாம் வெற்றி தோல்வி இரண்டுக்குமே சித்தமாக இருப்பதுதான் நல்லது'' என்றார் ராமபத்திரர்.

அரியநாத முதலியாரின் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் நாகமநாயக்கரின் ஆத்திரம் குபீரென்று பொங்கியது.



''கருப்பு மாத்திரை, சிவப்பு மருந்து கொடுக்கிறீர்களே, டாக்டர்! நான் பக்கா காங்கிரஸ் ஆயிற்றே!''

''நன்றி கெட்டவன்! ஒன்றுமில்லாமல் நாடோடியாக விஜயநகரத்துக்கு வந்தவனுக்கு நான் புகலிடமளித்தேன். நான் அவனை மனிதனுக்கி விட்டேன். என்னுடைய மூத்த குமாரனாக எண்ணி வளர்த்தேன். இப்போது அவன் வகிக்கும் பதவி நான் வாங்கிக் கொடுத்தது. இவ்வளவையும் அவன் மறந்துவிட்டான்!''

நாகமநாயக்கரின் மனம் பேதலித்து வருகிறது என்பதை ஐயத்துக்கிடமின்றித் தெரிந்து கொண்டார் ராமபத்திர நாயக்கர். அரியநாத முதலியார் மீது அவர் எவ்வளவு பற்றுதல் கொண்டிருந்தார் என்பதை விஜயநகரமே அறிந்திருந்தது. முதலியாரை யாரும் நாகமநாயக்கர் முன்பு இழிவாகப் பேசி விட்டால், பிறகு அவர்களால் நாயக்கரிடமிருந்து எளிதில் தப்பிவிட முடியாது. 'அவரைப் பற்றி' இவர் இப்படிப் பேசுகிறார்?

வீரர்கள் இருவர் கூடத்துக்குள் ஓடோடி ...ம் வந்தனர். அச்சமும் பரபரப்பும் அவர் ...ளது முகங்களில் காணப்பட்டன.

''அரியநாத முதலியார் அவர்கள் சில வீரர்களோடு வந்திருக்கிறார்கள். தங்களை நேரில் காண வேண்டுமாம்!''

கணப் பொழுதுக்கு முன்பு பேசிய கொடுஞ் சொற்களை மறந்துவிட்டு, அவரை வரவேற்பதற்காக ஓட்டமும் நடையுமாகச் சென்றார் நாகம நாயக்கர். ''முதலியாரே, வாருங்கள்! வாருங்கள்!'' என்று இதயத்திலிருந்து பொங்கும் அன்போடு அவரை வரவேற்றார்.

அரியநாத முதலியார் அவர் கரங்களுக்கு அகப்படாமல், கால்களில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்தார்.

(தொடரும்)

மீனவர்களுக்கு உத்திரவாதம்

# அதிக பிடிப்புகளுக்கு

மிக உறுதியான

# கர்வாரே



நைலான் ஃபிஷ்நெட் ட்வைன்

மிகச்சிறந்த மீன் வலைகளுக்கு

முதல் வருடத்திலேயே முதலீடு திரும்பப்பெறலாம்

[illegible]






கர்வாரே நைலான்ஸ்,
சௌபாத்தி சேம்பர்ஸ்,
ஸாண்ட்ஹர்ஸ்ட் ரோட்,
பம்பாய்-7.



சென்னை விநியோகஸ்தர்கள் :

**மெஸர்ஸ் W. A. பியர்ட்ஸெல் & கோ. பிரைவேட் லிமிடெட்**

8. செகண்ட் லேன் பீச், தபால் பெட்டி நெ. 7, சென்னை -1

ஒவ்வோர் ஆண்டும் செப்டம்பர் மாதம் முதல் வாரத்தில் வரக் கூடிய அந்த அழைப்பிதழ் இந்த வருஷமும் வந்தது. ஆனால் அது இந்த வருஷம் வந்திருக்கக் கூடாது. அதை நம்பி நானும் போயிருக்க வேண்டியதில்லை. ஆனால் எல்லாமே தவிர்க்க முடியாமல் நிகழ்ந்து விட்டன.

என் நண்பர் சத்தியமூர்த்தியிடமிருந்து வரும் அந்த அழைப்பிதழுக்குப் பதினேழு வரு



ஷப் பாரம்பரியம் உண்டு. வருஷம் தவறாமல் செப்டம்பர் மாதம் முதல் வாரத்தில் அது என் வீட்டுக் கதவைத் தட்டிக் கொண்டு வந்து நிற்கும். அது சத்தியமூர்த்தியின் ஒரே மகன் பாபுவின் பிறந்த நாள் அழைப்பிதழ்தான்.

'பாபுவின் பிறந்த நாள்' என்று நான் ஒரே வரியில் இலேசாகச் சொல்லிவிட்டேன். ஆனால் சத்தியமூர்த்தியைப் பொறுத்த அளவில் அது அவ்வளவு மேலோட்டமான விஷயமல்ல. அவனுடைய ஒவ்வொரு பிறந்த நாளும் அவருடைய பிறவிப் பெரும்நாள்.

பாபு என்பது பையனுக்குச் செல்லப் பெயர். அவன் இயற்பெயர் என்னவென்று எனக்கேதெரியாது. சத்தியமூர்த்தியின் கம்பீரமான பங்களாவின் சலவைக் கல் தூண்களிலும் சுவர்களிலும் சதா எதிரொலித்துக் கேட்டுக் கொண்டிருக்கும் பெயர் 'பாபு'தான்.

சத்தியமூர்த்திக்குக் கோபம் வந்து நான் பார்த்திருக்கிறேன். மனைவி பேரில் வந்திருக்கிறது. மகன்பேரில்கூட வந்திருக்கிறது. மனைவி பேரில் கோபம் வரும்போது அவருடைய சொந்தப்பிரதேசமான திருநெல்வேலி கொச்சைப் பேச்சில் 'ஏளா', 'சவத்து மூதி' என்று இறங்கி விடுவார். ஆனால் மகன்பேரில் கோபம் வரும் போது அவர் வாய் திறந்தால் அதிகப்படி பேசி விடுவது ''பாபுக் கண்ணு, இப்படிச் செய்யலாமாடா?'' என்ற வார்த்தைகள்தான். அவர் மகனிடம் வரம் கேட்கிறாரா, கோபப்படுகிறாரா என்று எனக்குச் சந்தேகம் வந்து விடும்.

தந்தை இப்படி என்றால் தாயைப் பற்றிக் கேட்க வேண்டியதில்லை. அந்த அம்மாள் அடிக்கடி என்னிடம், ''அண்ணாச்சி! ஆண்டவன் பாபுவை எனக்குன்னு உற்பத்தி பண்ணலை. தமக்குப் பிள்ளை வேணும்னு தெய்வப் பிள்ளையா உற்பத்தி பண்ணினார். மறந்து என் வயித்திலே தந்து விட்டார்'' என்பாள்.

# பற்று

இந்தக் காலத்தில் பட்டணத்துச் சூழ்நிலையில் ஒரு லட்சாதிபதியின் மகன் மனிதத் தன்மையோடு இருந்தாலே அவன் தெய்வப் பிள்ளைதான் என்பது என் அபிப்பிராயம். ஆனால் பாபு உயர்ந்தபட்ச அளவு சோதனையையும் மீறித் தனித்து நிற்பவன். அவனைப் பற்றி வேலைக்காரர்களிடம் கேட்டுப் பார்க்க வேண்டும். தோட்டத்தில் தண்ணீர் இறைக்கும் கிழவனிடம் சண்டை பிடித்து அவன் வேலையில் பாதியைச் செய்வது முதல் எத்தனையோ நிகழ்ச்சிகளைக் கதை கதையாகச் சொல்வார்கள். அவனுக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டுவதிலிருந்து பூட்ஸ் துடைத்துக் கொடுப்பது வரையில் வேலைக்காரர்களை நியமித்திருந்தார் சத்தியமூர்த்தி. அவர் நியமித்திருக்கும் வேலைக்காரர் படையை வேடிக்கை பார்க்க வைத்து விட்டுத் தன் வேலையைத் தானேதான் செய்து கொள்வானாம். ஒரு தடவை என் கண் காணத் தகப்பனுக்கும் பிள்ளைக்கும் ஒரு விநோத சர்ச்சை நடந்தது; ஒரு ஸ்கூட்டர் விஷயம்.

செக் இதழ் ஒன்றில் மூவாயிரம் ரூபாய் தொகையை நிரப்பி வைத்துக் கொண்டு 'நான் எப்படியும் இன்று பணம் கட்டிவிட்டுத் தான் போகிறேன். உனக்கு இத்தனை வயசு போதாதா?'' என்று தகப்பனார் துள்ளினார்.

''வேண்டவே வேண்டாம் அப்பா! ஸ்கூட்டருக்காக நானா, அல்லது எனக்காக ஸ்கூட்டரா? வயசும் பணமும் இருந்துவிட்

டால் ஸ்கூட்டர் வாங்கிவிட வேண்டுமா, என்ன?'' என்று எதிர் வாதாடினான் மகன்.

அவன் அவருடைய ஸ்கூட்டர் ஆசையை உதறிவிட்டுப் போனபின் என்னிடம் மூக்கால் அழுதார் சத்தியமூர்த்தி. ''பார்த்தியாப்பா! அவனுக்காகத்தானே இந்தச் சொத்து சுகம் எல்லாம். இப்படி உதறுகிறானே! இப்படி ஒரு பிள்ளை இருக்குமா?''

எனக்கும் அது ஆச்சரியமாகத்தான் இருந்தது. இப்படி ஒரு பிள்ளை இருக்குமா?

இலட்சக் கணக்கில் முதலீடு செய்து தொழில் நடத்தும் தொழிலதிபர், பதினைந்து வயது நிரம்பாத சிறுவனிடம் வெகு அக்கறையுடன் ஆலோசனைகள் கேட்கும் விஷயம் ஒரு ரசமான அம்சம். தம் தொழிற்கூடத்திலிருந்து திரும்பி வந்ததும் முதல் வேலையாக மகனை உட்கார வைத்து அன்றையப் பிரச்னைகளை அவன் முன் கொட்டுவார். அவன் என்ன யோசனை சொல்லி அவருக்கு ஞானோதயம் உண்டாக்குவானோ, அவருக்குத்தான் வெளிச்சம்.

கேட்டால் வெகு கரிசனத்துடன் பதில் சொல்வார். ''எல்லாம் அவன் விஷயம், அவன் பொருள். நான் எத்தனை நாளைக்கு நிற்கப் போகிறேன்! எல்லாம் அவனைக் கலந்துதானே செய்யணும்!''

''அதுக்கு வயசு வர வேண்டாமா?'' என்றேன்.

## தாமரை மணாளன்

''என்னப்பா வயசு? ஞானசம்பந்தர் எந்த வயசிலே தேவாரம் பாடினார்?'' என்றார் சூடாக. நான் மறு வார்த்தை பேசவில்லை.

தம் மகனைத் திருஞானசம்பந்தர் பக்கத்தில் நிறுத்தி அழகு பார்த்துக் கொண்டிருப்பவரிடம் நான் என்ன பேச முடியும்? போன தடவை அவன் பிறந்தநாளுக்குப் போயிருந்த போது என்று ஞாபகம். என்னிடம் ரகசியமாக வந்து காதைக் கடித்தார் சத்தியமூர்த்தி.

''ஆமா, இந்தச் சர்க்கார் பரீட்சைகளிலே பேப்பர் திருத்துகிறவங்களைப் 'பிடிச்சு'க் கூட்டிக் குறைச்ச மார்க் போட வைக்கலாம்னு பேசிக்கிறாங்களே, உனக்குத் தெரியுமா?..... நம்ம பாபு விஷயமா கொஞ்சம் கவனிக்கணும். எவ்வளவு செலவானாலும் பரவாயில்லே.''

''பாபுவுக்கா! அவனுக்கு ஏன்? அவன் தான் வகுப்பில் முதலாச்சே?'' என்று உண்மையாக வியந்து போய்க் கேட்டேன்.

ஆனால் அவர் உண்மையிலேயே மயக்கம் வரக் கூடிய ஒரு பதிலைச் சொன்னார். ''ஆள் பிடிக்கிறது பாஸ் பண்ண வைக்கிறதுக்கு இல்லேப்பா, அவனைப் பெயிலாக்கணும். அப்பத்தான் படிப்பு, படிப்புன்னு உடம்பைக் கெடுத்துக்காமல் தொழிலைப் பார்த்துக்கிட்டு ஜோராயா இருப்பான்.''

கடைசியில் அந்த விஷயத்தில் அவர் முயற்சி ஒன்றும் பலிக்கவில்லை. பாபு பரீட்சையில் தேறியே விட்டான்.

ஆனால் இரண்டு மாதங்களுக்குப்பின் அவர் ஆனந்தக் கூத்தாடிக் கொண்டு எனக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார்: ''உனக்கு ஒரு மகிழ்ச்சியான செய்தி. நல்ல வேளையாகப் பாபுவுக்குக் கல்லூரியில் இடம் கிடைக்கவில்லை. அவன் தொழிலை மேற்பார்த்துக் கொண்டு நிம்மதியாக இருக்கிறான்.''

இது பாபுவுக்குப் பதினேழாவது பிறந்த நாள். அவன் பிறந்த நாளை ஆண்டுக்கு ஆண்டு சிறப்பாகக் கொண்டாட வேண்டும் என்று சத்தியமூர்த்திக்கு இருக்கும் பைத்தியத்தைப் போல் எனக்கும் ஒரு பைத்தியம். ஒவ்வொரு வருஷமும் நான் அவனுக்காக வாங்கும் பரிசுப் பொருளும் புதுமையாகவும் அழகாகவும் இருக்க வேண்டும். பாபு



எப்போதும் நான் கொண்டு போகும் பரிசை எடுத்து வைத்துக் கொண்டு, ''ஆயிரம் பரிசு வந்தாலும் சிதம்பரம் மாமா 'பிரசன்டு' தனிதான்!'' என்பான் பெருமையாக. உடனே சத்தியமூர்த்தி, ''என் சிதம்பரம் ஆயிரத்தில் ஒருவனாச்சே'' என்று எனக்கு ஒரு சர்டிபிகேட் வழங்குவார். இந்த முறை பாபுவைத் திகைக்க அடித்துவிட வேண்டும் என்று அபூர்வமான ஒரு பொருளைத் தேடி வாங்கி விட்டேன்.

நான் டாக்ஸியிலிருந்து பரிசுப் பொட்டலத்துடன் இறங்கினேன். சத்தியமூர்த்தி

விட்டு வாசலில் ஏகப்பட்ட கூட்டம் திமுதிமு வென்று நின்றது. நான் வாசல் படியை நெருங்குவதற்கும் மலை முறிந்து சாய்வது போல் சத்தியமூர்த்தி வாசலைத் தாண்டி வந்து என் மேல் சாய்வதற்கும் சரியாக இருந்தது!

“என் பாபுவுக்குப் பரிசு கொணர்ந்தியா? எங்கே வராமல் இருந்திடுவியோன்னு பார்த்தேன். ஓடு..... ஓடு..... சீக்கிரம் கொண்டு போய்க் கொடு. இனி நீ என்னிக்குக் கொடுக்கப் போறே?” என்று அலறினார்.

வீட்டுக்குள் எட்டிப் பார்த்தேன். ஒரு கணம் என் ரத்த ஓட்டமே நின்றுவிட்டது. ஒரு மலர்க் கட்டிலில் பாபு பிணமாகக் கிடந்தான்! விடியற் காலையில் நெஞ்சை வலிக்கிறது என்றானாம்; பறந்து வந்த டாக்டர் பிணத்தைத்தான் பார்த்தாராம்!

இறந்தவன் போய் விட்டான். ஆனால் இருந்தவர்கள்? அவர்கள் இன்னும் போக வில்லை. கிட்டத்தட்ட ஒரு வாரம் ஆகி விட்டது. சத்தியமூர்த்தி தம் அறையில் கோழிக் குஞ்சாகச் சுருண்டு கிடந்து பிதற்றிக் கொண்டிருந்தார். அவர் மனைவி பாபுவின் அறைக்குள் சாய்ந்து கிடந்தவள், எழுந்திருக்கவே இல்லை. அவர்களுக்கு யார் என்ன ஆறுதல் சொல்லி விட முடியும்?

ஒரு வாரத்துக்கு மேலாகியும் நான் சத்தியமூர்த்தியின் முகம் பார்த்துப் பேசியதில்லை. அவர் முகத்தைப் பார்க்கவே எனக்கு மன பலம் இல்லை. ஆனால் திடீரென்று ஒரு நாள் சத்தியமூர்த்தியே என்னைக் கூப்பிட்டனுப்பினார். நான் அருகில் சென்றதும், “கதவைத் தான் போட்டு விட்டு இங்கே வந்து உட்கார்” என்றார்.

ஏன் கதவைத் தாளிடச் சொல்கிறார் என்று எனக்குத் திகைப்பாக இருந்தாலும் எதுவும் பேசாமல் தாளிட்டுவிட்டு அவர் அருகே போய் அமர்ந்தேன். “சிதம்பரம், நீ எப்போது ஊருக்குப் போகிறாய்?” என்றார்.

அவர் அப்படிக் கேட்ட பாவம் எனக்கு என்னவோ போலிருந்தது.

“இப்போ நான் போறதைப் பத்தி என்ன? போறப்போ போகலாம்....” என்று அந்தப் பேச்சை ஒதுக்கினேன்.

ஆனால் அவர் மீண்டும், “ஆமாம், நீ எத்தனை நாட்கள்தான் இருப்பே! அப்புறம்?” என்று கூறி அப்படியே நிறுத்திவிட்டு மௌனமானார். ஐந்து நிமிஷங்கள்வரை மௌனம் தான். பின் திடீரென்று, “அவுங்க எப்போ போறாங்களாம்?” என்றார்.

‘அவுங்க’ என்று அவர் குறிப்பிட்டது தமது அண்ணன் ராஜவேலு குடும்பத்தினரை. ஆனால் அவர் ஏன் அப்படிச் சொல்கிறார் என்று தான் புரிந்து கொள்ள முடியவில்லை.

“என்ன, ஒன்றும் பேசாமல் இருக்கிறாய்? அவர்கள் போகப் போகிறதே இல்லையாமா?” என்று தீவிரமாகக் கேட்டார்.

எனக்கு இப்போதுதான் அவர் கேள்வியின் தாத்பரியம் இலேசாகப் புரிந்தது.

அவர் மீண்டும் “அவர்கள் ஏன் போகிறார்கள்? பிள்ளையற்றவன் சொத்துக் கிடக்கிறதே. அதை ஆளவேண்டாமா?” என்று சொல்லி என்னுடைய சந்தேகத்தை ஊர்ஜிதப்படுத்தினார்.

அந்த வீட்டின் ஒளிவிளக்கு அணைந்து போயிருக்கிறது. சத்தியமூர்த்தியின் வாழ்க்கையில் அதைவிட வேறு எந்தப் பெரிய நஷ்டமும் ஏற்பட முடியாது. ஆனால் அவருக்கு அந்த இழப்பைப் பற்றிய சிந்தனையை விட அவருடைய சொத்தை உறவுக்காரர் ஆளப் போகிறார் என்ற மன மாச்சரியம் தானா ஏற்பட்டிருக்கிறது?

“நீங்கள் என்ன நினைத்துப்பேசுகிறீர்கள்?” என்று சற்றுக் கடுமையாகவே கேட்டேன்.

“உனக்குத் தெரியாதப்பா. பிள்ளையத் தின்ன பாவியா நான் போயிட்டேனில்லே. அதனால் அவுங்க மூச்சுக்கு மூச்சு வந்து என் கிட்டே குழையறதும் உபசரிக்கிறதும் எதுக்குத் தெரியுமா? வயித்துக்கும் வாயிக்கும் இல்லாமல் கிடக்கிற அவுங்க பிள்ளைகளை என் சொத்தை அனுபவிக்க வைச்சிடலாம்னு தான்! என் கண்ணு அநுபவிக்க வேண்டிய சொத்தை இந்தப் பாவிகள் அநுபவிக்க நான் விட்டுடுவேனா?” என்று கூறிவிட்டு அழுதார்.

நேற்றுவரையில் அவர் அழும்போது என் உள்ளமும் அழுதது. ஆனால் இப்பொழுது அவர் அழுகை எனக்கு ஏதோ நாடகம் பார்ப்பது போலிருந்தது.

அச்சமயம் படபடவென்று கதவு தட்டப்படுவது கேட்டது. நான் உடனே எழுந்து போய்க் கதவைத் திறந்தேன். ராஜவேலு நின்று கொண்டிருந்தார். “நீங்க இரண்டு பேரும்தான் பேசிக்கிட்டிருக்கீங்களா? சத்தியமூர்த்தி மட்டும்தான் தனியா இருந்து கதவைப் பூட்டிக்கிட்டு என்ன பண்றாரோன்னு பயந்து போயிட்டேன். அந்தப் பாவிப் பிள்ளை இவனை இப்படிப் பைத்தியமாக்கிட்டுப் போயிட்டானே...சரி நீங்க பேசிக்கிட்டிருங்க. தம்பி, நீங்களாவது அவனுக்கு ஆறுதல் சொல்லுங்க” என்று கூறி நகர்ந்தார்.

இவரையா சத்தியமூர்த்தி சந்தேகிக்கிறார்?

அவர் போனதும் நான் சத்தியமூர்த்தியிடம் வந்து “பார்த்தீங்களா? எல்லாரும் உங்களைப் பற்றியே கவலைப்படுகிறார்கள். நீங்கள் எதைப் பற்றியோ நினைத்து அவஸ்தைப்படுகிறீர்கள்” என்றேன். உடனே அவர் “ஆமாம். நான் எங்கே அவர் பிள்ளைக்குச் சொத்தை எழுதி வைக்காமல் செத்துடுவேனோன்னு பயந்திருப்பார்” என்றார் கடுமையாக.

என் மனத்தில் கொஞ்ச நஞ்சம் இருந்த கனிவும் அடியோடு மாறி அருவருப்புத்தான் தோன்றியது. சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தவனாக, “நான் நாளைக்கு ஊருக்குப் போயிடலாம்னு இருக்கேன்” என்றேன்.

“என்ன திடீர்னு?” என்று கேட்டவர் சிறிது நேரம் ஏதோ யோசித்து விட்டு, “ஒரு நாள் கழிச்சுப் போயேன்” என்றார்.

“ஏன்?”

“நாளைக்கு ஓர் உயில் ரிஜிஸ்தர் பண்ணப் போகிறேன். நீயும் இரு. அதை முடிச்சுட்டுப் போ.”

“என்ன உயில்?” என்றேன் புதிருடன்.

“எனக்கு இனிமேல் என்ன? என் சொத்தையெல்லாம் நாயும் பேயும் அனுபவிக்கிறதை விட ஏதாவது தருமத்துக்கு எழுதி வச்சுட்

இனிய தமிழ் புத்தகங்களை படித்து
அனுபவிக்க இதோ ஓர் அரிய வாய்ப்பு !

# உங்கள் வீட்டிலேயே உங்களுக்குச் சொந்தமாக ஓர் நேர்த்தியான "வீட்டு நூலகம்" அமைக்க

தென் மொழிப் புத்தக டிரஸ்ட்
25, ஸ்டர்லிங் ரோடு, சென்னை-34




SOUTHERN LANGUAGES
BOOK TRUST

# அளிக்கும் திட்டம்

## முதலீடு மாதம் ரூபாய் 5-00 மட்டுமே!

18 மாதங்களில் ரூ. 90.00 மதிப்புள்ள நீங்களே இஷ்டப்பட்டு தேர்ந்தெடுத்த அரிய பல தமிழ் நூல்களும் மற்றும் ரூ. 20.00 மதிப்புள்ள 12 பரிசு நூல்களும் அடங்கிய அழகிய நூலகம் உருவாகிவிடும்.

**திட்டத்தில் சேரும் அங்கத்தினர் அடையும் மொத்த லாபம் ரூபாய் 40.**

இத்திட்டத்தின் முழு விவரங்களும் கீழ்கண்ட பத்திரிகைகளில் விளம்பரம் மூலம் ஏற்கனவே அறிவிக்கப்பட்டுள்ளது:

| | |
|---|---|
| "கல்கி" | 16-1-66, 6-2-66, 20-2-66, 6-3-66 |
| "ஆனந்தவிகடன்" | 16-1-66, 30-1-66, 13-2-66, 27-2-66 |
| "குமுதம்" | 27-1-66 |

(விளம்பர நகல் வேண்டுவோர் டிரஸ்டாருக்கு எழுதி பெற்றுக் கொள்ளலாம்)

## இத் திட்டம் தொடர்ந்து அமுலில் இருக்கும்

இதுவரை நூற்றுக்கணக்கான மக்கள் அங்கத்தினராகச் சேர்ந்துள்ளனர். நீங்களும் கீழ்கண்ட கூபனை உடனே பூர்த்தி செய்து அங்கத்தினர் ஆகுங்கள்.

---

தென் மொழிப் புத்தக டிரஸ்ட்
25, ஸ்டர்லிங் ரோடு, சென்னை-34

ஐயா,
"வீட்டு நூலகம்" அமைக்கும் உங்கள் திட்டத்தில், அதன் நிபந்தனைகளுக்குட்பட்டு, அங்கத்தினராக சேர விரும்புகிறேன். இதற்கான முதல்மாத சந்தாவான ரூ. 5.00 மணியார்டர் மூலம் அனுப்பியுள்ளேன். விளம்பரத்தில் காட்டியுள்ள எட்டு பரிசு புத்தகங்களில் எனக்குப் பிடித்த மூன்று புத்தகங்களின் பெயர்களை கீழே கொடுத்துள்ளேன்.

1
2
3

பெயர் ..............................

ஊர் : .............................. கையொப்பம் ..............................

தேதி : .............................. முழு விலாசம் ..............................

..............................

---

*குறிப்பு: சந்தா தொகை எப்பொழுதும் மணியார்டர் மூலம் தான் அனுப்பப்பட வேண்டும். சென்னையில் வசிக்கும் அங்கத்தினர் சந்தா தொகையை டிரஸ்டின் அலுவலகத்தில் நேரில் கட்டி ரசீது பெற்றுக் கொள்ளலாம்.

டால் போகிற வழிக்காவது புண்ணியம் கிடைக்கும்'' என்றார்.

''சரி, அப்படியே செய்யுங்க'' என்று சொல்லிவிட்டு அறையை விட்டு வந்தேன்.

சிறிது நேரம் கழித்து ராஜுவேலு என்னிடம் வந்து, ''என்னங்க, தம்பி ஆறுதலாயிருக்காரு? நான் ஏதாவது சொன்னால் பைத்தியம் பிடிச்ச மாதிரி எரிஞ்சு விழுறான். நீங்க ஒருத்தர் இப்போகூட இருக்கிறது ஒரு 'மலை' மாதிரி'' என்றார்.

''என்கிட்டேயும் பைத்தியம் பிடித்த மாதிரிதான் பேசினார்'' என்றேன் உள்ளர்த்தத்துடன்.

''என்ன சொன்னான்?'' என்றார் அவர்.

''அவர் சொத்தையெல்லாம் தர்மத்துக்கு எழுதி வைக்கப் போறாராம்.''

''இதைப் போய்ப் பைத்தியம்னு சொல்றீங்களே. ரொம்ப நல்ல காரியம். அந்தத் தர்மமாவது அவன் மனசுக்கு நிம்மதியைக் கொடுக்கட்டும்'' என்றார் அவர்.

மறுநாள் வக்கீல் ஒருவர் ஆலோசனையுடன் உயில் எழுதும் வேலை நடந்தது. அது எழுதப் படுவதற்கு முன்னர் சத்தியமூர்த்தி என்னிடம், ''சிதம்பரம்! உயிலை எழுதறபோது நான் நினைச்சாக்கூட மாற்ற முடியாதபடி எழுதணும். அப்படி இப்படிப் பண்ணி என் மனசை மாத்திடுவாங்க. மனுஷன் மனோபாவம்தான் நிமிஷத்துக்கு நிமிஷம் மாறுமே!'' என்றார்.

என்ன மனிதர், என்ன மனோபாவம்!

அவர் விருப்பப்படியே உயில் எழுத சப் ரிஜிஸ்ட்ரார் ஆபீசுக்குப் போனோம். நானும் ராஜுவேலுவும்தான் சாட்சிகள். ராஜுவேலு வழிநெடுகத் தம் தம்பிக்கு 'ஆறுதலும்' 'நிம்மதியும்' தருமத்தால் அருளப்பட இருப்பதைப் பற்றியே பேசி வந்தார்.

உயிலைப் பதிவு செய்துவிட்டு நாங்கள் திரும்பிவந்தபோது வீட்டில் ஒரே பரபரப்பாக இருந்தது. ராஜுவேலுவின் மனைவி வந்து, ''பெருந்தேவிக்கு ஒரு மாதிரியாக இருக்கு. காலைவரை தெம்பாகத்தான் இருந்தாள். ஆனால் இப்ப மயங்கி மயங்கி விழுகிறாள். வாந்தி வாந்தியாக எடுக்கிறாள். டாக்டரைக் கூப்பிட ஆள் போயிருக்கு'' என்றாள்.

டாக்டர் வந்து சோதித்தார். நாங்கள் கவலையுடன் அவர் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தோம். சோதனையை முடித்த டாக்டர் சிரித்துக்கொண்டே, 'மிஸ்டர் சத்தியமூர்த்தி தந்தையாகப் போகிறார்!' என்றார்.

நாற்பத்தைந்து வயதுக்கு மேற்பட்ட பெருந்தேவி பதினேழு வருடங்களுக்குப் பின் மீண்டும் கருவுற்றிருக்கிறாள்! மனிதன் தன் வாழ்க்கையில் நடத்தும் நாடகத்தை விட ஆண்டவன் நடத்தும் நாடகம் எவ்வளவு சக்தியுள்ளதாக இருக்கிறது!

வீடு முழுதும் திகைப்பும் மகிழ்ச்சியுமாக விரவி ஒரே உணர்ச்சிக் கலவையாக மாறியது. நெற்றியைப் பற்றிக் கொண்டு உட்கார்ந்திருந்த சத்தியமூர்த்திக்கு அப்படியே மூர்ச்சை போட்டுவிட்டது. பெருந்தேவிக்காக வந்த டாக்டர் அவருக்குத்தான் வைத்தியம் செய்ய வேண்டியதாகிவிட்டது.

அடுத்த நாள் என்னைக் கண்டதும் சத்தியமூர்த்தி கண்கலங்கிப் பித்தம் பிடித்தவர்போல்


நர்ஸ்: உங்க மனைவிக்கு ரெட்டை வட்டி பிறந்திருக்கு!

பார்த்துக் கொண்டிருந்தார். எனக்கு அப்போது அவர்மீதிருந்த ஆத்திரம் எல்லாம் மாறிப் பரிதாபம்தான் தோன்றியது. அவருடைய கவலையை என்னால் ஊகிக்க முடிந்தது.

''கவலைப்படாதீர்கள். உயிலை எப்படியாவது மாற்றிவிட முயற்சி செய்வோம்'' என்றேன் அவருக்கு ஆறுதலாக.

''மாற்ற முடிந்தாலும் முடியாவிட்டாலும் உயில் எழுதியது எழுதியதுதான். இது வரை நான் மாற்ற நினைத்ததெல்லாம் போதும். அந்தப் பிள்ளையைச் சாகவதம் என்று நினைத்தேன். அது மாறிவிட்டது. அநுபவிக்க நம் பிள்ளை இல்லையே, இன்னொரு பிள்ளை அநுபவிப்பதா என்று உயில் எழுதினேன். இப்போ அந்த நிலையும் மாறிவிட்டது. இப்படி நான் நினைக்க, நினைக்க மாற்றுபவன் அவன். இஷ்டப்படி எதை எதை மாற்ற வேண்டுமோ, அதை அவன் மாற்றுகிறான். இனி மாற்ற வேண்டும் என்றாலும் மாற்றுவான். மாற்ற வைப்பான்! இடையில் எனக்கென்ன வேலை?'' என்றார் அமைதியாக. அவர் விரக்தியில் பேசினாரா, அல்லது ஞான நுகர்ச்சியில் பேசினாரா என்பதை என்னால் அப்போது நிர்ணயிக்க முடியவில்லை.

இது நடந்து பத்துப்பதினைந்து வருடங்கள் ஆகிவிட்டன. இன்று சத்தியமூர்த்தியின் வாழ்க்கையில் எவ்வளவோ மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன. பட்டணத்தையும், தாம் தேடி உருவாக்கிய தொழிலையும் விட்டுப் பூர்வீகக் கிராமத்தில் பூர்வீகமாக இருந்த சாமான்ய சொத்தின் பலத்தில் இப்போது வாழ்கிறார். இரண்டாவது பிறந்ததும் ஓர் ஆண்தான். அந்தப் பையன் இப்போது பக்கத்து ஊர் உயர்நிலைப் பள்ளியில் 'டிபன் பாக்ஸ்' சுமந்துகொண்டு நடந்துபோய்ப் படித்து வருகிறான். இருந்தும் அவன் ஸ்கூட்டர் கேட்கவில்லையே என்று சத்தியமூர்த்தி கவலைப்படுவதில்லை. முதல்வனைப் போலவே இவனும் சூடிகையாகப் படிக்கிறான். அதற்காகச் சத்தியமூர்த்தி அவன் 'ஃபெயி'லாகித் தம்முடன் தொழில் செய்ய வேண்டும் என்று இப்போது 'முயற்சி' செய்யவில்லை. இப்படி எத்தனையோ மாற்றங்கள். மாறாமல் இருப்பது அந்த உயில் ஒன்றுதான்!




- ★ கர்நாடக இசை
- ★ ஆத்ம சிந்தனை
- ★ நவீன ஓவியங்கள்
- ★ நடமாடும் கல்லூரிகள்

சம்பிரதாயம் என்ற பெயரால் கர்நாடக இசை வெள்ளத்தை ஒரு சிறு குடத்துக்குள் அடைக்க முயலும் குறுகிய மனப்பான்மையை ஏத்திய பேட்டிக் கட்டுரை ஒன்று தங்கள் 'கல்கி'யில் வந்ததைப் படித்து, வியப்பும் வேதனையும் அடைந்தேன்.

சென்னை — 1
14—3—66 டி. ஆர். விசுவநாதன்

மனிதனை வளர விடாமல் செய்வது அவனிடத்திலே மறைந்து கிடக்கும் குறுகிய மனப்பான்மைதான். மனிதனை வாழ விடாமல் தடுப்பதும் அவனிடத்திலே மண்டிக் கிடக்கும் அழுக்காறுகள் தாம். இவைகளைக் களைந்து போக்க அவனுக்குத் தேவைப்படுவதுதான் ஆத்மீக சிந்தனை.

கடந்த இரண்டு மூன்று நூற்றாண்டுகளில் ஆயிரமாயிரம் அரசியல்வாதிகள் சாதிக்க முடியாததை ஒரு ராமகிருஷ்ண பரமஹம்ஸரும், விவேகானந்தரும், ராமலிங்க அடிகளாரும் சாதித்துக் காட்டியிருக்கிறார்கள்.

காந்தியின் அரசியல் வெற்றிக்குக் கூட அவரது ராமநாம சக்திதான் முக்கிய காரணம் என்பதைக் கண்ணியமான எந்த அரசியல்வாதியும் ஏற்றுக் கொள்வான். எனவே, சமுதாய வாழ்விலே அரசியலைவிட ஆத்மீக சிந்தனை தான் மிக மிக ஆழமான முறையிலே வேரூன்றியிருந்தது முன்பு.

மனிதனிடத்தில் ஆத்மீக அறிவு மங்கி மறைந்து கொண்டு வருகிற இந்த வேக யுகத்தில் ஸ்ரீ பி. ஸ்ரீ. எழுதிய 'ஸ்ரீராமானுஜரு'க்கு சாஹித்திய அகாதமி பரிசு கொடுத்திருப்பதானது ஒரு சிறந்த சேவை என்றே எண்ணுகிறேன். அதற்குக் கொடுக்கப்பட்ட பரிசானது மனித சமுதாய முன்னேற்றத்துக்குக் கொடுக்கப்பட்ட மரியாதை என்றே எண்ணுகிறேன்.

ஞானத்தையும், சீலத்தையும் அரசியல்வாதியோ, அல்லது மனிதாபிமான மேதைகள் என்று கூறிக் கொள்ளும் யதார்த்த இலக்கியப் படைப்பாளியோ நிச்சயமாக வளர்க்க முடியாது. அரசியல் சார்புள்ள ஒரு குறுகிய மனப்பான்மையோடு எதையும் எடை போட நினைப்பது நம்மிடையே நாம் வளர்த்துக் கொண்டு விட்ட ஒரு விமர்சனப் பழக்கம். இதை நாம் உணர்ந்து கொள்கிற வரையில் நமக்கு முன்னேற்றமேயில்லை.

சேலம்
14—3—63 மகரிஷி

பத்திரிகைப் பகுதியில் வரும் துணுக்குகள் பல்வேறு மொழிப் பத்திரிகைகளின் தழுவலாக இருக்கின்றன. இப்போதெல்லாம் இது போன்ற துணுக்குகளை எல்லாப் பத்திரிகை களுமே கையாள்வதால் புதுமையாக இருப்பதில்லை. பல விஷயங்கள் பிற பத்திரிகைகளில் வந்து அடுத்து மறுபடியும் பிரசுரமாவது தமிழனது திறமைக்குச் சவாலாக நிற்கின்றன. காப்பிகளாக இருப்பதைவிட தமிழனின் வாழ்வில் — கற்பனையில் — நடப்பவைகளாகப் பிரசுரிப்பது எவ்வளவோ பரவாயில்லை.

கரூர்
24—2—66 எம். எம். பொன்னுசாமி

● மென்மொழி, நோக்கரம், லட்சியக் கனவு, இலக்கிய நோக்கு, பள்ளி நினைவுகள் போன்ற அம்சங்கள் தங்களது இக்க விருப்பத்தைப் பூர்த்தி செய்கின்றன.

திரு மணியம் அவர்கள் நவீன ஓவியங்கள் பற்றிக் கூறியுள்ள கருத்துக்களைப் படித்தேன். ஓவியர் தம் ஓவியத்தில் கற்பனையைக் கலப்பதற்கும் ஓர் எல்லை இருக்க வேண்டும்.

"நான் எந்தக் கிறுக்கலுக்கும் பேர் ஒரு தலைப்பு கொடுப்பேன்; அதை நீ அவ்வாறே நினைத்துக் கொள்ள வேண்டும்" என்பதை எவ்வாறு ஒப்ப முடியும்? "கண்ணை விற்றோ சித்திரம் வாங்குவர்?" என்பது வழக்கு. கண்ணை விற்றுக்கூடச் சித்திரம் வாங்கலாம். பகுத்தறிவை விற்றுச் சித்திரம் வாங்கலாமா?

ஆவாரணி
26—2—66 ச. பொன்னுசாமி, எம். ஏ.

கடந்த பல மாதங்களாகத் தொடர்ந்து பல சுதந்திரக் கட்சி கூட்டங்களுக்குச் செல்லும் நற்பேறு வாய்ப்புப் பெற்றேன். உண்மையில் வேறு பொருளாதாரத்தைப் பொதுமேடையில் போதிக்கின்ற சுதந்திரக் கட்சித் தலைவர்களை, "நடமாடும் கல்லூரிகள்" என்று அழைப்பதில் தவறில்லை. வரிகள் போடுவதற்கும், நிர்வாகம் நடத்துவதற்கும் பொறுப் பேற்றிருக்கிற காங்கிரஸ், பொதுமேடையில் மக்களுக்குப் பொருளாதாரம் போதிப்பதில்லை. பொருளாதாரம் அறிந்தவர்களிடம் வருவதேயில்லை. டாக்டர் ஹாண்டே சொன்னது போல் 'சோஷலிஸ' குளோரபாம் கொடுத்துப் பிரசாரத்தை ஏழை மக்களிடையே நடத்துகிறார்கள். "கொள்ளை லாபம் அடிக்கும் வியாபாரிக்குப் போடும் வரி — ஏழைகளுக்கல்ல" என்று மறைமுக வரியைக் கூடத் திரித்துக் கூறும் காங்கிரஸுக்கு, பொருளாதார வல்லுநர் குழுவையே தன்னிடம் கொண்டிருக்கும் சுதந்திரக் கட்சி சரியான எதிர்க்கட்சியாகத் தெரியாதது இந்நாட்டின் ஜனநாயகம் செய்த பாவம்.

உண்மையிலே 67ல் காங்கிரஸ் மீண்டும் ஆட்சி பீடத்தில் ஏறினால் அது அரசியலமைக்கு, அரசியல் ஒழுங்கீனத்துக்கு நாம் அளிக்கும் பரிசாகும்.

சென்னை - 33
25—2—66 மதுரைதாஸ் எம். ஏ.

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon